## நம் வசந்தியிடமிருந்து மலரும் இரகசியம்...

# ‘எனது மேனியெழிலுக்கு உற்றதுணை லக்ஸ்’

மூன்று வார்த்தை மந்திரம் ...
முன்னேறும் வசந்தியின் வனப்புக்கு
முகமன்...லக்ஸ் டாய்லெட் சோப்!
உபயோகியுங்கள் லக்ஸ்.. பூப்போன்ற
நுரையினுல் புதுமெருகிடும் லக்ஸ்.
உபயோகியுங்கள் லக்ஸ்...இணங்கி
மணமோங்கும் லக்ஸ்.
உபயோகியுங்கள் லக்ஸ்...வானவில்
வண்ணங்களிலும் வெண்ணிறத்திலும்
தெரிந்தெடுக்க வாய்ப்பான லக்ஸ்.
உமதெழிலுக்கும் உறுதுணை
பூப்போன்ற லக்ஸ்...

சினிமா நட்சத்திரங்களின்
தூய, மெல்லினம்
அழகுசாதன சோப்.






‘வனப்புமிக்க சோப்...வர்ணஜால சோப்!’ என்கிருர் வடிவழகி வசந்தி

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

LTS. 122-X52 T

ஆகஸ்ட்
31 முதல்
சென்னை
குளோப்
புவனேஸ்வரி
ஸ்ரீமுருகன்
மற்றும்
தென்றுடெங்கும்
க்ரியேஷன்ஸ்
அவனா இவன்!?
தயாரிப்பு & டைரக்ஷன்
S.பாலசந்தர்
Sai Studio

சுபகிருது ஆவணி 17உ



# கல்கி

செப்டம்பர் 2, 1962

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம்
கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




சிகரெட் உற்பத்திக்கான ஆள்பலம், நிதி, பொருள் நிறைவு ஆகிய எவ்வளவோ வசதிகள் நம் நாட்டுக்கு உள்ளன. எனினும் பாரதத்திலே, சிகரெட்டுத் தொழில் தனக்குரிய உயர்நிலையை இன்னும் எய்த முடியவில்லையென்றால், அது இந்திய மூலதனம் கணக்கிப்போயிருக்கிறது என்பதனாலோ, அல்லது தேர்ச்சிவாய்ந்த தொழிலினம் இல்லாமையாலோ அல்ல. ஆனால் இந்தியாவில் வாணிபக் கூட்டுறவு அமைத்த அந்நியர்களின் ஏகபோக உரிமையாட்சியினால்தான்.

## இந்திய சிகரெட் தொழிலுக்கென்ன இடர்?

Panama

20

CIGARETTES



பம்பாய்—57.

# பனாமா

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**

பாரதத்தில் இத்தகைய தேசீய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 709-A.TM

Greens' Advtg.



மலர் 22

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்*

இதழ் 5

# தங்கத்துக்கு ஆபத்து

**த**ங்கத்துக்குப் பாரத நாட்டில் என்றுமே ஒரு தனி மதிப்பு உண்டு. அதைப் பௌதிகமான உலோக தாதுவாக மட்டும் காணுமல் உள்ளத்துக்கும் ஒளி தரும் பொருளாக நமது சாஸ்திரங்கள் கருதுகின்றன; ஒவ்வொருவர் உடலிலும் ஒரு குன்றி மணி அளவு தங்கமேனும் இருக்கவேணும் என விதிக்கின்றன. தில்லை அம்பலத்திலும், திரு அரங்கத்திலும் இறைவனுக்குப் பொற்கூரை வேய்ந்து பூரித்தவர்களின் பரம்பரையில் வந்தவர்கள் நாம். இந்தத் தங்கத்தின் பெருமை யாவும் வெளியாகும் அற்புதமான அணிபணிகளைச் செய்து மனைவி மக்களுக்குச் சூட்டி அழகு பார்ப்பது நம் பண்பாடு.

இப்படி நமது குடும்பத்துடனும், கலையுடனும், சமயத்துடனும் சம்பந்தப்பட்டது தங்கம். அதோடு சர்வதேசப் பொருளாதாரத்திலும் தங்கத்துக்குத் தனி முக்கியத்துவம் உண்டு. நிர்வாகத்தினர் காகித நோட்டுக்களை இஷ்டப்படி அச்சிட்டு நாணய மதிப்பைக் குறைப்பதுபோல, தங்கத்தையோ அல்லது தங்கக் கையிருப்பையோ அடிப்படையாகக் கொண்ட நாணய முறையைத் தாறுமாருக மாற்ற முடியாது. ஆனால் பல காரணங்களை முன்னிட்டுத் தங்கத்தை அடிப்படையாகக் கொண்ட நாணய முறை இப்போது மெல்ல மெல்லத் தேய்ந்து வருகிறது.

இப்படியெல்லாம் விசேஷம் பெற்றுள்ள தங்கத்துக்கு இப்போது ஆபத்து வந்து விட்டது. முதலாவது இரண்டாவது மூன்றாவது என்று வளர்ந்து கொண்டே போகும் திட்டம் என்கிற ராட்சதனின் கண்களில் நம்முடைய அருமைப் பெண்டிரின் பொன் நகைகள் பட்டுவிட்டன. நமது நாட்டின் நீண்டகால சம்பிரதாயங்களுக்கோ, குடும்ப அமைப்புக்கோ சற்றும் மதிப்புத் தராதது போலவே பொருளாதாரத் தத்துவங்களையும் உள்ளபடி உணராத காங்கிரஸ் ஆட்சியாளர்கள், இப்போது தங்களது பயனற்ற படாடோபத் திட்டங்களுக்காக நமது மக்களிடம் இருக்கும் தங்கத்தையெல்லாம் திரட்ட உத்தேசித்திருக்கிறார்கள்.

'' நாட்டில் 'தேங்கி'யுள்ள தங்கத்தை வெளிக் கொண்டுவரப் போகிறோம்; 'பதுக்கப்பட்டுள்ள' பொன்னைப் பயனுக்குக் கொண்டுவருவோம்'' என்றெல்லாம் நிதி மந்திரி அவர்கள் வாயளவுக்குக் கூறிவிடலாம். ஆனால் அதிகாரிகளைக் கொண்டு இந்தப் பொன் வேட்டையில் இறங்கும்போது 'தேக்கம்,' 'பதுக்கல்' என்ற பதங்களுக்குப் பொருளேதும் இராது. நமது தாய்மார்கள், மனைவியர், பெண் குழந்தைகள் இவர்கள் பிரியப்பட்டு அணியும் பொன் நகைகளில் காங்கிரஸ் சர்க்காரின் துராசை பிடித்த பார்வை விழும். தங்கம் திரட்டும்வேலை அசல் பகல் கொள்ளையாகவே முடியும். என்னளவும் சந்தேகம் வேண்டாம். இதனின்று எத்தனை வித புது அட்டூழியங்கள் விளையும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

இப்படியாகச் செய்யப்படும் கொள்ளை மூலம் 4000 கோடி ரூபாய்க்குமேல் திட்டத்துக்குக் கிடைக்குமாம். வீட்டு விளக்கான பெண்களை அமங்கலமாக்கும் இந்தத் திட்டத்தால் மக்களுக்கு உருப்படியாகக் கிடைக்கப்போவது எதுவும் கிடையாது. இந்தியாவில் 4000 கோடி ரூபாய் மதிப்புள்ள இதே தங்கத்தின் சர்வதேச மதிப்பு 1800 கோடி என்று சொல்கிறார்கள். காங்கிரஸின் கண்மூடித்தனமான திட்டங்கள் காரணமாக நம் நாட்டு நாணய மதிப்பு 'நாளொரு மேனி'யாக அதோ கதியில் செல்கிறது என்ற உண்மையும் இதிலிருந்து வெளியாகிறது.

நஷ்ட ஈடு என்றால் காங்கிரஸின் அந்தமான அகராதியில் என்ன பொருள் என்று அறிந்தவர்கள்தாமே நாம்? அதற்கேற்ப ஸ்ரீ மொரார்ஜி அவர்கள் சர்வதேச விலைக்குத்தான் இந்த ஆபரண அபகரணம் நடக்கும் என்று 'கோடி' காட்டியிருக்கிறார். இந்தத் திருட்டுக்கு எந்த போலீஸ் ஸ்டேஷனில் புகார் கொடுத்துப் பரிகாரம் காண்பது? "எப்படி, எப்போது ஆர்ஜிதம் செய்வோம் என்பதைச் சொல்ல முடியாது" என்கிறார் ஸ்ரீ மொரார்ஜி அவர்கள். கொடுங்கோன்மைதான் செய்யப் போகிறார்கள் என்பது இதிலிருந்து மேலும் தெளிவாகிறது.

நாட்டு மக்களின் அணிபணிகளைப் பிடுங்கிக் கொள்ளும் அநியாயம் எந்தக் கொடுங்கோல் மன்னன் காலத்திலும் நடந்ததில்லை. மக்களின் உணர்வுகளையும், குடும்ப வாழ்க்கையின் நுட்பமான ஆசாபாசங்களையும் சிதைத்துப் பணம் ஈட்ட முற்படுவது அக்கிரமமாகும். ஆனால் குடும்ப வாழ்க்கையையும், தனி மனிதர்களின் மனோபாவங்களையும் கிள்ளுக்கீரையாகக் கருதும் காங்கிரஸுக்கு இதெல்லாம் புரியுமா?

## கூட்டுப்பண்ணை கைவிடப்படுகிறது

திபேத்தைக் கபளீகரம் செய்தபின் செஞ்சீனா தனது பொருளாதார முறைப்படி கூட்டுப் பண்ணைகள், கம்யூன்கள் முதலியவற்றை அந்த நாடு முழுவதும் விரிவாகப் புகுத்தியது. கம்யூனிஸ்டு ஆதிக்கத்தில் எதிர்பார்க்கக் கூடிய தீவிரக் கெடுபிடியுடன் இரண்டு வருஷங்கள் அந்த முறை அமுல் நடத்தப்பட்டபின், கிடைத்த அனுபவம் திருப்திகரமாக இல்லையாம். உற்பத்தி குறைந்து விட்டதால் உணவு கிடைக்காத பிரச்னை நெருக்கடி நிலைமைக்கே வந்து விட்டதாம். சீனாவிலிருந்து உணவுப் பண்டங்கள் அனுப்பி நிலைமையைச் சமாளிக்க முடியவில்லையாம். சீனாவிலேயே இந்த 'லட்சணமான' முறையால் உணவு உற்பத்தி குறைந்து விட்டிருக்கிறது. ஆகவே, கம்யூன் முறைகளும், சமுதாயப் பண்ணைகளும் இப்போது திபேத்தில் ரத்து செய்யப்பட்டு விட்டன. விவசாயத்தில் இனி தனிப்பட்டவரின் ஊக்கமும், உற்சாகமும் செயல்படும் என்றும், இவற்றின் மூலம் உணவு உற்பத்தி கணிசமாகப் பெருகும் என்றும் சீன சர்க்கார் நம்புவதாக அரசாங்க உத்தரவு கூறுகிறது. இந்த அனுபவத்தை நமது ராஜ்ய அரசாங்கங்களுக்கும், திட்டக் கமிஷனுக்கும் விவசாய அமைச்சர்களுக்கும் ஒரு படிப்பினையாக அளிக்கிறோம். ருஷ்யாவின் அனுபவமும் ஏறக்குறைய இதே ரீதியில்தான் இருக்கிறது. எந்தக் கம்யூனிஸ நாடுகளைப் பின்பற்றி நமது சர்க்கார் செயல்படுகிறதோ அந்த நாடுகளின் அனுபவம் இது. ஆனாலும் இந்த முறையின் பிதாவான நாடுகள் இதைக் கைவிட்டாலும்கூட, ஸ்வீகாரப் புத்திரர்களான நம் சர்க்கார் கைவிடத் தயாராக இல்லை. சமீபத்தில், பிரதமர் நேருஜி கூட, "கூட்டுப் பண்ணை விவசாயத்தை அதிகமாக வற்புறுத்த வேண்டியதில்லை. சேவைக் கூட்டுறவு அபிவிருத்தியில் கவனம் செலுத்துவதுதான் முக்கியம்" என்று சொன்னார். இதை மற்றவர்கள் கேட்டு அதன்படி அவர்கள் நடக்க வேண்டும் என்று சொன்னாரோ, அல்லது பிரசங்க வேகத்தில் சொன்னாரோ, நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனால் ராஜ்ய சர்க்கார்கள் மட்டும் கூட்டுப் பண்ணை விவசாயத்தை மேன்மேலும் விஸ்தரிப்பதிலேதான் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள். வாதத்துக்கு, மருந்து உண்டு; பிடிவாதத்துக்கு மருந்து ஏது?

## என்ன சேதி?

### வேண்டாம் இந்த மசோதா

நில ஆர்ஜிதத் திருத்த மசோதாவுக்கு மக்கட் சபையில் தோன்றிய கடும் எதிர்ப்பிலிருந்து எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் மட்டுமின்றி, காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்கள்கூட இதைப் பற்றி மாறுபட்ட கருத்து கொண்டிருக்கிறார்கள் என்பது தெரிகிறது. தமது கட்சியில் உள்ளவர்களையே சமாதானம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டதால் அவர்களைத் தனித்துக் கூட்டிப் பேசி, அவர்களின் ஆதரவைத் தேடிக் கொள்ள அமைச்சர் ஸ்ரீ எஸ். கே. பாட்டீல், கூட்டத்தையே ஒத்திவைத்திருக்கிறார். இவ்வளவு பாடுபட்டாவது, அடிப்படையில் தவறான கருத்துடன் கொண்டு வரப்பட்ட இந்த மசோதாவை எதற்












காக நிறை வேற்ற வேண்டும் என்று தான் கேட்கத் தோன்றுகிறது. ''பொதுக் காரியங்களுக்காக'' நிலம் ஆர்ஜிதம் செய்யலாம் என்பதைத் திருத்தி, கம்பெனிகள், தொழிற்சாலையை விஸ்தரிக்க நில ஆர்ஜிதம் செய்வதும் கூட ''பொது நன்மைக்கே'' என்ற தவறான வியாக்கியானம் செய்ய வழி வகுத்துக்கொடுக்கிறது இந்த மசோதா. இது மக்களின் சொத்துரிமைக்கு உலை வைப்பதாகும். உயர் நீதி மன்றம் தங்களுக்குப் பாதகமாக ஒரு வழக்கில் தீர்ப்பளித்து விட்டது என்பதற்காகத் தங்களுடைய அதிகார பலத்தைப் பிரயோகம் செய்து அவசரச் சட்டம் பிறப்பித்து விட்டனர் மத்திய சர்க்கார். இந்தத் தவற்றை நிலைக்கச் செய்யவே இப்போது மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது.

## கலப்படத்தில் சர்க்காரின் பங்கு!

கலப்படப் பொருள்களின் கொடுமை அளவுகடந்து போய் விட்டது என்பதைச் சர்க்காரே உணர்ந்து கொண்டு விட்டார்கள். ஆங்காங்கே நடவடிக்கைகள் மேற்கொள்ளவும் முனைந்துள்ளனர். ஆனால் சர்க்கார் இலாக்காக்களே, தெரிந்தோ தெரியாமலோ இந்தக் கலப்பட மோசடிகளுக்கு ஊக்கமளிக்கின்றன என்றால் ஆச்சரியப்படவே

தோன்றும். சில நாட்களுக்கு முன்பு, பழுதடைந்து, கெட்டுப் போன பதினொரு டன் 'சிக்கரி' பவுடரை இந்திய காப்பி போர்டு ஏலத்தில் விட்டது. அதே மாதிரி கெட்டுப் போனதும், நிறம் மாறியதுமான பலதரப்பட்ட கொய்னா மாத்திரைகளை 'டிஸ்போஸல்' இலாக்கா ஏலத்தில் விடுகிறது. இப்படியே பல இலாக்காக்களில் பழுதான சாமான்கள் குறைந்த விலைக்கு 'டெண்டர்கள்' பேரில் விற்கப்படுகின்றன. இவற்றை யெல்லாம் விலை கொடுத்து வாங்குபவர்கள் இவைகளை எப்படிப் பயன்படுத்துவார்கள்? நல்ல சரக்குகளுடன் கலந்து நல்ல சரக்குகள் போல் கவர்ச்சிகரமான புட்டிகளில் அடைத்து மக்கள் தலைமீது தானே சுமத்த வேண்டும்? 'பழுதானவை' என்று ஒதுக்கப்படும் இனங்களை, முக்கியமாக மருந்து வகைகளை, மக்கள் கைக்கு எட்டாமல் செய்ய வேண்டும். ஏலம் போட்டு விற்பது கலப்படத்துக்கு ஊக்கம் அளிப்பதே யாகும்.

## நல்ல காரியத்துக்குத் தடை

புது தில்லியில் சமீபத்தில் நடந்த அகில இந்திய மொழி மகாநாட்டில் அகில இந்தியக் கட்டத்தில் ஆங்கிலத்தைத் துணைமொழியாக 1965-ம் ஆண்டுக்குப் பின்னரும் காலவரையறையின்றி நீடிக்கக் கொண்டு வரவிருக்கும் மசோதாவை எதிர்த்துத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. ஆங்கிலம் நாட்டுக்கு அவசியம் தேவை; நமது முன்னேற்றத்துக்கு இன்றியமையாதது என்று பல அறிஞர்கள் பல சந்தர்ப்பங்களில் விவாதித்து முடிவு செய்திருக்கிறார்கள். பிரதமர் நேருஜியும் இதுபற்றிப் பல உறுதி மொழிகள் அளித்திருக்கிறார். இவற்றைச் சட்டமாக வடிப்பது புது மசோதா. அது அமுலுக்கு வந்தபோதிலும் ஹிந்தி அறியாதவர்களுக்குப் பல இடையூறுகள் நேரும். அப்படியிருக்க அந்த மசோதாவுக்குங் கூட எதிர்ப்புச் செய்கிறார்கள். இந்தக் கிளர்ச்சி பொருளற்றது என்பதைச் சொல்லத் தேவையில்லை.

இம் மகாநாட்டில் கலந்து கொண்டவர்களின் பேச்சுக்களே ஹிந்தியைப் புகுத்தப் பார்ப்பது அநீதி என்பதை விளக்குகின்றன. ஹிந்தியைப் புகுத்துவதில் நிதானம் வேண்டுமாம்; ஏனெனில் ஹிந்தி இன்னமும் அகில இந்திய மொழியாகச் செயல்படுவதற்கு வேண்டிய வளர்ச்சி அடையவில்லையாம். தவிரவும், வேறு மொழி பேசும் மக்களின் எதிர்ப்பையும் கவனித்துச் செயல்பட வேண்டுமாம். இவ்வளவையும் ஒப்புக் கொண்ட பிறகு, மசோதாவை எதிர்ப்பதற்கு இடம் எங்கே இருக்கிறது என்றுதான் விளங்கவில்லை. மொழி அபிமானம் வெறியாக வளர்ந்து விட்டால் அறிவு மழுங்கித்தானே போகும்!

## காந்தீயம் ஏற்றுமதியாகிறது!

சமீபத்தில் புது தில்லியில் காந்தி சமாதான ஸ்தாபனத்தின் சார்பில் நடந்த அணு ஆயுத எதிர்ப்பு மகாநாட்டுக்குப் பின் காந்தீயக் கொள்கைகளை ஐரோப்பிய அமெரிக்கத் தலைநகரங்களுக்கு ஏற்றுமதி செய்ய வேண்டும் என்ற கருத்து பரவி இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இதன் மூலம் வல்லரசுகளிடையே நிலவும் பிளவுகளை ஒட்ட வைத்துவிடலாம் என்று எண்ணுகிறார்கள் போலும். ஆனால் மற்ற வியாபாரப் பொருள்களைப் போல அயல் நாடுகளுக்கு அனுப்பி வைக்க காந்தீயம் ஏற்றுமதிச் சரக்கு அல்ல. நம் நாட்டினரின் முயற்சி இல்லாமலேயே வெளிநாடுகளில், முக்கியமாக இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும், காந்தீயக் கொள்கைகளைப் பல ஸ்தாபனங்கள் பரப்பி வருகின்றன. அவர்களுடன் ஒத்துழைத்தாலே போதும். வெளி நாட்டுக்கு காந்திஜியைப் பற்றிப் புத்தகங்களும் படங்களும் அனுப்பி, கண்காட்சியும் பிரசங்கங்களும் நடத்துவதை விட நாமே காந்தீயத்தை அனுஷ்டிப்பதுதான் உண்மையான பிரசாரமாகும். தன் கையே தனக்குதவி என்று எளிய வாழ்வை மேற்கொள்வதும், பிறர் உதவியைச் சார்ந்து நிற்பதால் நடுநிலைமை என்ற பெயரில் கொள்கைகளில் தகிடுதத்தம் செய்வதை நிறுத்துவதுமே இதற்கு முதல் படி.




தன்னாலே தன் உருவம்
பயந்த தானாய்,
தயங்கொளி சேர் மூவுலகும்
தானாய், வானாய்,
தன்னாலே தன் உருவின்
மூர்த்தி மூன்றாய்......

— திருமங்கை ஆழ்வார்

# 17. வெள்ளியங்கிரியிலே

**ப**க்திப் பசியுடன் வருபவர்களுக்கெல்லாம் உளமார விருந்து படைக்கும் சிதம்பரத்தில் வயிற்றுப் பசியுடன் வருபவர்களுக்கும் வயிறார உணவு அளிக்கும் அன்னாகர்ஷண யந்திரத்தை ஸ்தாபித்தார் அருளாளர் சங்கரர்.

அங்கிருந்து மத்தியார்ஜுனம் எனப்படும் திரு இடை மருதூரை அடைந்தார். ஒவ்வொரு ஊரிலுமுள்ள லிங்கத்துக்கு ஒரு தனிப் பெயர் உண்டு — கபாலீசுவரர், பாடலீசுவரர், ஏகாம்ரேசுவரர் இப்படி. இங்கு மட்டும் லிங்கத்துக்குப் பெயர் லிங்கமேதான் — மகாலிங்கம். ஏன் என்றால் சிவாலயங்களுக்குப் பெயர் பெற்ற சோழ தேசத்தையே ஒரு சிவாலயமாக அமைத்துப் பார்த்தால் அதில் மூல ஸ்தான லிங்கமாகத் திகழ்பவர் இடைமருது மகாலிங்கனார்.

மல்லிகார்ஜுனத்தில் சங்கரர் சிவானந்த லஹரி செய்தார். மத்தியார்ஜுனத்திலோ இறைவனே வாய் திறந்தான். சங்கரர் தரிசித்தவுடன் மகாலிங்கத்தின் உச்சி திறந்தது. ஈசன் தனது கையைத் தூக்கி 'அத்வைதமே சத்தியம்' என்று ஆணையிட்டுக் கூறினான்.

திரிசிரபுரம் என்ற திருச்சிராப்பள்ளியை அடைந்தார் ஜகத்குரு. அகிலாண்டேசுவரியின் உக்கிரத்தைச் சிவ சக்கர உருவாகவும், ஸ்ரீ சக்கர உருவாகவும் உள்ள இரு தாடங்கங்களில் ஆகர்ஷித்து அவற்றை அவளுடைய திருச்செவிகளிலேயே அணிவித்தார். மைந்தனை யாரும் கொடூரமாகப் பார்க்க மாட்டார்கள் அல்லவா? எனவே தேவிக்கு நேர் எதிரே விநாயகப் பெருமானின் திரு உருவத்தையும் ஸ்தாபித்தார் ஆசாரியர்.

வைணவ மரபில் 'கோவில்' என்று வழங்கும் ஸ்ரீ ரங்கநாதர் ஆலயத்தில் வழிபட்ட ஆசாரியர் அங்கு ஜனாகர்ஷண யந்திரத்தை ஸ்தாபித்தார்.

மதுரை மீனாட்சியை மனங்குளிரக் கண்டானந்தித்து, வாய் குளிர மீனாட்சி பஞ்சரத்தினத்தைச் செய்து அவளுக்குச் சூட்டினார் சங்கரர். மதுரைப் பண்டிதர்களுடன் வாதித்து அத்வைதத்தை நிலை நிறுத்தினார்.

துண்டி கணபதியை வழிபட்டு, கணேச பஞ்சரத்தினத்தால் துதித்தார் ஆசான். அந்தத் தோத்திரத்தைச் சொல்லும் போதே ஆனைமுகன் தன் பெரிய திருமேனி குலுங்க ஆனந்த நர்த்தனமிடுவது போல் தோன்றும். திருவனந்தபுரத்தில் பத்மநாபனைத் தரிசித்து, அத்வைதத்தையும் அங்கு நிலை நாட்டிவிட்டுத் திருச்செந்தில் வந்தார்.

முருகப் பெருமானிடம் கேட்கிறார் சங்கரர்:

"நீ கடற்கரையில் குடிகொண்டிருப்பது எதற்காக? 'என் சந்நிதானத்தை அடைந்தவர்கள் சம்சாரக் கடலைத் தாண்டி விடுவார்கள்' என்று சூசனையாகத் தெரிவிப்பதற்குத்தானே? அலைகள் அடங்குவது போல் அடியார் ஆபத்துக்கள் இங்கு அடங்கி விடும் என்று அறிவிக்கத்தானே?

"ஆறுமுகா! உனக்கு தயை நிறைந்த திருவிழிகள் பன்னிரண்டு உண்டு. அப்படியிருக்க அவற்றில் ஏதோ ஒன்றின் ஒரே ஒரு கடாட்சத்தை என் மேல் செலுத்தினால் உனக்கு என்ன குறை வந்துவிடும்?"

குகனிடம் பிரார்த்திக்கிறார் குரு: ''என் கண்களில் எப்போதும் உன் தோற்றமும், என் காதுகளின் எப்போதும் உன் கீர்த்தி வாய்ந்த கதைகளும், என் நாவில் எப்போதும் உன் பவித்திரமான சரித்திரமும், என் கைகளில் எப்போதும் உன் பூசனையும் நிலை நிற்க வேணும். என் உடலால் உன் அடிமையாகக் கைங்கரியம் செய்ய வேணும். என் எல்லாச் செயல்களும் உன்னிடமே லயமாக வேணும்.''

சுப்பிரமணிய புஜங்கம் என்ற இத்துதியில் 'அந்தகனும் எனை அடர்ந்து வருகையினில் அஞ்சல் என வலிய மயில் மேல் நீ.... வருவாயே' என்று கோருகிறார் சங்கரர். ஆழ்வார் சொன்னது போல, ''என் இறுதிக் காலத்தில் உன்னை எண்ணுவேனோ மாட்டேனோ; 'அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்' '' என்றும் கூறுகிறார்.

பாரத தேசத்தை 'ஆஸேது ஹிமாசலம்' என்பார்களே! அதற்கேற்ப சேது க்ஷேத்திரத்துக்கு வந்து, ராமநாத சுவாமியையும் தொழுதார் சங்கரர். தமிழகத்தின் தென் எல்லையாகிய கன்னியா குமரியில் தேவியை தரிசனம் செய்த சங்கரர் அன்று தமிழ்நாட்டின் வட எல்லையாக இருந்த திருப்பதியை அடைந்தார்.

வேங்கடேசுவர பரப்பிரம்மத்தை, நித்ய கல்யாணனை ஸ்ரீநிவாசனைத் தரிசித்தார் குருமணி. சிலா விக்கிரகத்தை மட்டும் அவர் காணவில்லை. அங்க அங்கமாகச் சைதன்ய ரசம் கொப்புளிக்கும் நாராயணனையே கண்டார்.

அனந்தனுடனும் கருடனுடனும் கூடிய வைகுண்டம் வாழ்பதியைக் கண்டார். நீலமலைச் சிகரத்தில் படியும் மதியத்தைப் போல் அவனது திருக்கையில் விளங்கும் பாஞ்ச ஜன்ய சங்கத்தைக் கண்டார். 'காலச் சக்கரம் சுழன்றது' என்று அடிக்கடிச் சொல்கிறோமே, காலரூபியான அந்த சுதரிசனச் சக்கரத்தைக் கண்டார். ஐயனின் வில்லாகிய 'சார்ங்கம் உதைக்கும் சரமழை'யைக்கண்டார். அசுரருடன் புருஷோத்தமன் சமரிடும் போது சுழற்றும் நந்தகி என்னும் கத்தியையும் அது கார்முகில் மேல் மின்னல் போல் அவனது மேனி மீதாக ஜொலிப்பதையும் கண்டார். திருமகளைப் போலவே பெருமானின் கைத்தலத்தால் பற்றப்பட்ட கௌமோதகி தேவியாகிய கதையைக் கண்டார். அந்தத் திருமகளையும் கண்ணாரக் கண்டார்; அவனுடன் பூதேவியையும் சேர்த்து தரிசித்தார்.

அந்தத் தேவியின் கர மலர்கள் பிடித்து விடும் பத்மநாபனின் பத்ம பாதங்களைக் கண்டார். தாமரை இதழில் பனித் துளி கோத்து நிற்பது போல் விரல்களின் நுனியில் பளபளக்கும் நக வரிசையைப் பார்த்துப் பார்த்து புளகிதமடைந்தார்.

எத்தனையோ திரு ஆபரணங்களைத் தாங்கியும் அவற்றுக்கு மேல் சோபையுடன் ஆரா அமுதனின் திரு மேனியில் காணும் ஸ்ரீவத்ஸ மறுவில் உள்ளம் சொக்கினார். அந்த மறுவைத் தன் மகவாகக் கருதி அதன் அருகேயே, ஐயனது வட்ச ஸ்தலத்தில் வசித்துப் பரந்தாமனை ஸ்ரீ-நிவாசனுக்கும் செந்திருவைப் பணிந்தார். அவனுடனே பாற்கடலில் தோன்றிய கௌஸ்துப மணி இங்கும் அவனுடனேயே திருமாலின் திருமார்பில் துலங்குவதைக் கண்டார்.

இரண்டாவது கௌஸ்துப மணி போன்ற பிரானின் அதரங்களைக் கண்குளிரக் கண்டார். 'கௌஸ்துபமா? இல்லை, கோவைக் கனியா? இந்தக் கோவைக் கனியை உண்ண வந்திருக்கும் கிள்ளையின் அலகுகூட இதோ பக்கத்திலேயே தெரிகிறதே! அலகு இல்லை. நாராயணனின் கர்ண குண்டலத்தில் இழைத்த ரத்தினங்களின் ஒளி அவனது கூர்மையான நாசிக்குச் செவ்விளிம்பு கட்டியிருப்பதுதான் இப்படி ஒரு பிரமையைத் தோற்றுவித்து விட்டது' எனத் தெளிகிறார்.

கண்ணிமைக்காது காண வேண்டிய அவனது கண்களின் எழிலை என்னென்பது? யோக நித்திரையில் அவை அமிழ்ந்திருக்கின்றன. இரவில் தாமரை கூம்புவது போல், அந்தக் கண்ணாகிய கமலங்களும் பகவானின் நெற்றி எனும் பாதி மதியின் ஒளியில்தான் கூம்பினவோ; இந்தக் கமலங்கள் எப்போது அலரும் என்று அருகே காத்துக் கிடக்கும் வண்டு வரிசைகள் தாம் அவனது திருப்புருவங்களோ என்று கவினுற எண்ணுகிறார்.

அந்தப் புருவங்களுக்கிடையே எத்தகைய அற்புதமான காட்சி! ஸ்படிகமயமான லிங்கம் அல்லவா காண்கிறது! அதில் ஒரு நீலத் தாமரை மாலையும் அல்லவா சாத்தியிருக்கிறது! பளிங்கு லிங்கமல்ல. பச்சைக் கற்பூரத்தால் பகவான் நெற்றியில் தீற்றிய புண்டரமே அது. நீலத் தாமரை அல்ல. இலக்குமி தேவியுடைய கருங்கண்களின் வீக்ஷணம் அடிக்கடி அந்தத் திலகத்தைச் சுற்றி வருவதே கருங்கமல மாலை சாத்தியது போலத் தோற்றமளிக்கிறது.

நெற்றியில் மட்டும்தானா லிங்கம்? நாராயணனின் சிரோபூஷணமான கிரீடமே லிங்க வடிவாகத் தானே ஒளிர்கிறது?

இப்படி ஹரனுடன் இணைபிரியாத ஹரியை வேங்கடேசனாக மட்டும் தரிசிக்கவில்லை ஆசாரியர். அவனது தசாவதாரங்களையும் கண்டார். தாம் வென்ற சாக்கிய மதஸ்தாபகரான புத்தரையும் கூட அவனது அவதாரமாகக் கண்டார். காமனை வென்ற தீரர் என்ற முறையில் 'மனஸிஜ விஜயி' என்று கௌதம புத்தரையும் போற்றினார்.

'தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற தயாள குணத்தோடு தாம் திருமலையில் திருமாலை அநுபவித்ததை யெல்லாம் 'விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்திரம்' என்ற கவித்துவக் கருவூலமாக அருளிச் செய்தார் ஆசாரியர்.

திருப்பதியில் தனாகர்ஷண யந்திரத்தை ஸ்தாபித்தவர் பகவத் பாதரே.

வடவேங்கடத்திலிருந்து ஆசாரியரின் பயணம் வடக்காகத் தொடங்கியது. துறவு பெற்ற நர்மதையின் தீரத்திலுள்ள திரியம்பகபுரத்திலும் சௌராஷ்டிரத்திலுள்ள சோமநாத புரத்திலும் பரமேசுவரனை வணங்கினார். பன்னிரண்டு பிரசித்தமான சிவ க்ஷேத்திரங்களில் இடம் பெற்ற ஸ்தலங்கள் இவை இரண்டும். அந்தப் பன்னிரு பதிகளிலும் திருப்பதம் பதித்து, ஆசாரியர் செய்துள்ள துதியாகிய த்வாதசலிங்க ஸ்தோத்திரம் அகில பாரதத்தையும் ஒருங்கிணைக்கும் சிவபக்தி மகிமையைத் தெள்ளென விளக்குகிறது.

ஏழு மோட்ச புரிகளில் ஒன்று துவாரகை. கண்ண பெருமானே நிர்மாணித்த பட்டணம் என்ற பெருமை கொண்டது அது. பிரபு போரை விட்டு சாந்தனாக எழுந்தருளியுள்ள க்ஷேத்திரம் அது. தேசத்தின் மேற்கே, மேன்மை பொருந்திய அத்வைத சித்தாந்தத்தை வழி வழியாக நிலைநாட்ட இதுவே ஏற்ற இடமென எண்ணம் கொண்டார் ஆசாரியர். காளிகா பீடம் என்ற பீடத்தை அங்கு ஸ்தாபித்து பத்ரகாளியையும், சித்தேசுவரனையும் அங்கு அருள் பாலிக்கச் செய்தார். பத்மபாதரை அப்பீடத்தின் முதல் ஆசாரியராக நியமித்தார். ஹஸ்தாமலகரை நியமனம் செய்ததாகவும் சில கிரந்தங்கள் கூறும். துவாரகா பீடத்து நூல்களிலிருந்து சுரேசுவரருக்கும் இம்மடத்தில் தொடர்பு இருந்ததாகத் தெரிகிறது. துவாரகா மடாதிபதிகள் ஆசிரமி என்ற துறவு நாமம் பூண்டவர்களாவர்.

துவாரகையிலிருந்து புறப்பட்டு நந்த குமாரன் விந்தை புரிந்த வடமதுரை, பிருந்தாவனம் முதலிய பதிகளுக்குச் சென்றார் புண்ணியமூர்த்தி. எழிலும், எளிமையும் நிறைந்த பல பாடல்களால் கண்ணனைப் போற்றினார்.

நாட்டின் வடகோடியிலுள்ள காச்மீரத்துக்கும் அத்வைதச் செல்வத்தை அள்ளிக் கொடுக்கச் சென்றார் சங்கரர். அங்கு ஒரு சர்வக்ஞபீடம் இருந்தது. அந்தப் பீடத்திலுள்ள கதவுகள் சத்தியத் தத்துவத்தை உள்ளவாறு அறிந்த மகா வித்துவான்கள் வந்தால்தான் திறக்கும். பீடம் நிறுவிய பல்லாயிரம் ஆண்டுகளில் மூன்றே சர்வக்ஞர்கள்தாம் அப்பீடத்தை அணுகியிருந்தனர். திறவாதிருந்த தெற்கு வாயிலும் ஆசாரியர் வந்தவுடன் திறந்து கொண்டது. பண்டிதரெல்லாம் புகழ பீடமேறி அதில் ஆரோகணித்தார் பகவத் பாதர். குன்றாத ஞானப் பிழம்பாகிய ஆசாரியருடைய திக்விஜயத்தின் நினைவுச் சின்னமாக காச்மீர மன்னன் அங்குள்ள குன்றொன்றுக்கு 'சங்கராசாரியகிரி' என்று பெயரிட்டான். நாட்டின் வடகோடியில் மலர்ந்த வாடாத தத்துவத்துக்கு அறிகுறியாக அம்மலையும், மலைமீது ஓர் ஆலயமும் இன்றும் உள்ளன.

முனிவர்களுக்குப் பெயர் பெற்ற பதரிகாவனத்துக்கு சங்கரர் சென்றிருந்த போது திருமால் அவருக்குத் தரிசனம் தந்தான். ஷட்பதி ஸ்தோத்திரம் என்ற பரமரமணீயமான ஆறு சுலோகங்களால் அவனைத் துதித்தார் ஆசாரியர். 'எனது விநயமின்மையைப் போக்குவாய்' என்று தொடங்கும்போதே தமது விநய சம்பத்தை நாம் உணர வைக்கிறார். 'கடலும் அலையும் ஒன்றே என்பது போல நானும் நீயும் ஒன்றேதான். ஆனால் கடலுடையதுதான் அலையே ஒழிய கடல் அலையுடையதல்ல. அவ்வாறே நான்தான் உன் உடைமை; நீ என் உடைமையல்ல' என்று அத்வைதத்திலேயே பக்தியின் நைச்சிய பாவத்தை அற்புதமாக வெளியிடுகிறார். அலகநந்தா படுகையில் புதைந்துள்ள தனது சிலா வடிவைத் தோண்டி எடுத்துப் பிரதிஷ்டை செய்யுமாறு கூறி மறைந்தான் மாயவன். அதைச் சிரமேற் கொண்டு செயலாக்கினார் சங்கரர்.

பதரியில், விஷ்ணுப் பிரயாகையருகே மூன்றாவது அத்வைத மடமாகிய ஜ்யோதிர் மடத்தை ஸ்தாபித்தார். இது தேசத்தின் வட எல்லையில் உள்ளது. ஜ்யோதிஷ்மதி பீடம் எனப்படும். இங்கு அதிஷ்டான தேவன் — நாராயணன்; அவனுடைய சக்தியாகிய பூர்ணகிரியும்

அங்கு அருள் புரிகிறான். தோடகாஷ்டகம் செய்ததால் தோடகாசாரியர் என்றே பெயர் பெற்று விட்ட ஆனந்த கிரியை இங்கு முதல் ஆசாரியராக நியமித்தார். இந்த பீட குரவர்களின் சந்நியாச நாமமும் கிரி என்பதே.

பதரிநாதத்தில் மற்றொரு முக்கியமான சம்பவமும் நிகழ்ந்தது. தமது குரு கோவிந்த பகவத் பாதரும் பரமகுரு கௌடபாதரும் தவத்திலிருப்பதைக் கண்டு மகிழ்ந்தார் சங்கரர். அவர்களை ஆதிகுரு தட்சிணாமூர்த்தியாகவே கண்டு ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தால் துதித்து ஒவ்வோர் அடி முடியிலும் வணங்கி எழுந்தார். அத்வைதத்தின் சாரத்தையெல்லாம் பிழிந்தெடுத்து இந்த சுலோகங்களில் வடித்திருப்பதாகச் சொல்லலாம். தக்ஷிணாமூர்த்தியின் மகிமையை ஆசாரிய சங்கரர் அன்றி வேறு யார் பூரணமாக அறிய முடியும்? கடலின் ஆழத்தை அந்தக் கடலையன்றி வேறு எது, அல்லது யார், அறிய முடியும்?

பதரியிலிருந்து புறப்பட்ட சங்கரர் தாம் முதலில் எங்கிருந்து புறப்பட்டாரோ அந்தக் கயிலையை அடைந்தார்.

**கை**லாசம்! நமது வர்ணனைகளுக்கு அப்பாற்பட்ட இடம். ஆனால் அதுவும் ஆசாரியரின் வர்ணனைக்கு அப்பாற்பட்டதல்ல. கயிலை சிகரத்தைப் பற்றி ஆசாரியர் சிவபாதாதி கேசாந்தஸ்துதியில் கூறியுள்ள வர்ணனைகள் கவித்துவ சிகரத்தையே தொடுபவையாகும்.



எங்கணும் கல்பக விருட்சங்கள். அவற்றுக்கிடையே நானாவித புஷ்பச் செடிகள். தேவ மாதர்கள் பரமேசுவரனின் புகழை இசைத்தபடியே அவற்றில் மலர் கொய்கிறார்கள். ரிஷிகளும், தேவர்களும், பக்தர்களும் சாரிசாரியாகச் சென்றபடி இருக்கின்றனர். பகவந் நாம கோஷம் மலை முழுவதையும் நிரப்புகிறது. அதோடு கேட்கும் அந்த ஹூங்காரம் உலகையெல்லாம் தாங்கும் உமாபதியையும் தாங்கும் விருஷப ராஜனுடைய கர்ஜனையே. நடுநடுவே முருகப்பெருமான் விளையாடி மகிழும் மயிலின் அகவுதலும் கலந்து கொள்கிறது. இந்த நாதத்தையெல்லாம் அடக்கிக் கொண்டு கணநாதனின் ஆனந்தப் பிளிறல் மேலெழுந்து இமாலயத்தின் குகைகளையெல்லாம் நிரப்பிப் பிரதித்வனியிடுகிறது. ஆனந்த மூர்த்தியான அவனது கொண்டாட்டக் கூச்சலுக்குக் கேட்பானேன்? அந்தப் பேரின்ப மதத்தில் அவனது கன்னப் பிரதேசங்கள் மத நீரைப் பெருக விட அவற்றைச் சூழ்ந்து கொள்ளும் வண்டுகளின் 'ஜிவ்' வென்ற ரீங்காரமும் சேர்ந்து கொள்கிறது. இத்தனை இன்ப நாதங்களுக்கும் ஒரு குதிரைக் குளம்படி ஓசை லயம் கூட்டுகிறது. ஈசுவரனுக்கும் மோகினியாக வந்த திருமாலுக்கும் மகவாகப் பிறந்த ஐயப்பன் தான் புரவிமீதேறி வேட்டையாடிக் கொண்டிருக்கிறான்.

இந்த அற்புதக் காட்சிகளையெல்லாம் கண்டபடி மேலே செல்கிறார் சங்கர பகவத் பாதர். முத்தும் மாணிக்கமும் இழைத்த மதில் சுவர்களைக் கடந்து உள்ளே பிரவேசிக்கிறார். திக்பாலர்களின் திவ்யமான மாளிகைகளைத் தாண்டி, அம்பாளின் பணிப் பெண்கள் அன்புடன் வளர்க்கும் உத்தியான வனத்தையும் கடந்தாயிற்று. சண்டிகேசுவரரும், பூத கணங்களும் போகும் வழியில் தொடருகிறார் உலகுக்கு வழிகாட்டிய உத்தமர்.

நாற்புறமும் சூழ்ந்த மலைகளின் மடியில் விசாலமான அரங்கு. யோகியரும் ஞானியரும், தேவர்களும், அசுரர்களும், அடியார்களும், பிரமத கணங்களும் கூடியுள்ள அந்த சபாமண்டபத்தில் அப்சரஸ்கள் தம்மை மறந்து நடனமாடுகின்றனர். தாமரையிலிருந்துதேன் பெருகுவது போல கந்தர்வ ஸ்திரீகளின் முக கமலங்களிலிருந்து சங்கீதம்பொழிகிறது. யாழில் இசையை இழைக்கிறார் மஹரிஷி நாரதர். ழும் ழும் என ஒலிக்கும் மிருதங்கமும், ஜல் ஜல் என சப்திக்கும் ஜாலராவும் மனக்கதவை வந்து தட்டுகின்றன. இத்தனை ஒலிகளுடன் தங்கள் அணிபணிகளும் ஒலிக்க அரம்பையர் ஆடும் ஆட்டத்தைக் கண்டு பூத கணங்கள் ஆஹாகாரம் செய்து மகிழ்கின்றன.

ஆனால் பூதகணங்களுக்காகவா இத்தனை ஆடலும் பாடலும்? முனிவரும், தேவரும் அங்கு கூடியிருப்பதெல்லாம் யாருக்காக? ஆசாரிய சங்கரர் பக்தி வெள்ளத்தில் சொட்டச் சொட்ட



நினைந்தவாறு பனித்த கண்ணும், இனித்த முகமும், சிலிர்த்த மேனியுமாக மேலே மேலே சென்று கொண்டிருப்பது யாருக்காக?

அதோ.... சுவர்ண மஞ்சத்தில், இந்திர நீல மணிகள் இழைத்த ஸ்தம்பங்களும் ஸ்படிகப் படிகளும் கொண்ட மஞ்சத்தில், சிற்பக் கலை நுட்பமெல்லாம் சிறப்புற அமைந்த மஞ்சத்தில் அமர்ந்திருக்கும் அந்த இருவருக்காகவுமல்லவா இத்தனை கோலாகலமும், கோலாகலம் அடங்கிய பரவச நிலையும் ஏற்பட்டிருக்கின்றன?

பிரபஞ்சத்துக்கெல்லாம் பிதாவான பரமேசுவரனுடனும் அகிலாண்டங்களுக்கெல்லாம் அன்னையாகிய பார்வதியுடனும் ஜகத்துக்கெல்லாம் குருவாகிய சங்கரரும் சேர்ந்து கொண்டு கயிலையை தெய்வத்தன்மைக்கும் மேலே கொண்டு போய் விட்டார். பக்தி சாம்ராஜ்யத்தின் எல்லை நிலத்தையேனும் சிறிது தீண்டியவர்களும் கூட எண்ணி எண்ணி, உள்ளம் கொள்ளாமல் ஆனந்தத்தை நிரப்பிக் கொள்ளும் அமுதமான திரிமூர்த்தி தரிசனமல்லவா அது?

எழுதி முடிகிற விஷயமா? சொல்லித் தான் மாளுகிற விஷயமா? நினைத்துப் பார்த்து முழு மகிமையையும் உணரவாவது இந்த உள்ளத்துக்கு சக்தி உண்டா? 'அன்னையை தெய்வமாகக் கொள்; அப்பனை தெய்வமாகக் கொள்; ஆசானை தெய்வமாகக் கொள்' என்கிறது மறைமுடி. சாமானியத் தாய் தந்தை குருவையே தெய்வமாகக்கொள்வதென்றால், தெய்வத் தந்தையையும, தெய்வத் தாயையும், தெய்வ குருவையும் எப்படி பக்தி பண்ணுவது? அதுவும் மூவரையும் ஒரு மிக்கச் சேர்த்து வைத்து எப்படி பக்தி செய்வது? நம்முடைய சின்னஞ் சிறிய மனசு போகும் அளவுக்கு இந்த அற்புதக் காட்சியை அகக் கண்ணில் கண்டு ஆனந்திக்க வேண்டியதுதான்.

ஒரே கடல் மூன்று கிளையாகப் பிரிந்து பாரத நாட்டை மூன்று பெயரில் சூழ்ந்து நிற்பது போல, ஒரே கங்கா நதி விண்ணிலும், மண்ணிலும், பாதாளத்திலும் மூன்று பெயரில் பாய்வது போல, ஒரே தீபாராதனைத் தட்டு மூன்று கிளையாகப் பிரிந்து ஒளி விடுவது போல, ஒரே பிரணவம் மூன்று வேதங்களிலும் உட்பொருளாக உறைவது போல, ஒரே ஆத்மா விழிப்பு, கனவு, உறக்கம் ஆகிய மூன்று நிலைகளிலும் விளங்குவது போல, ஒன்றேயான மெய்ப்பொருள் ஜகதீசுவரனாகவும் ஜகன்மாதாவாகவும் ஜகத்குருவாகவும் ஒரே இடத்தில், ஒரே காலத்தில் ஒளிர்ந்தது. நீர், ஆவி, பனிக்கட்டி இவற்றில்

எது மற்றதாகிறது என்று சொல்ல முடியாதது போல ஒரே மூலப் பொருள் மூவுருவில் திகழ்ந்தது. பஞ்ச பூதங்களால் நம் உடல்கள் ஆக்கப்பட்டதுபோல் அழகும் அறமும் அறிவும் ஆற்றலும் அருளும் இணைந்து, இறுகி, முதிர்ந்து உருவான மும்மூர்த்தியரும் சேர்ந்து ஆனந்த மயமாக ஜொலித்தார்கள். தீயின் ஜொலிப்பு போல உக்கிரமானதல்ல அது. தண்மதியின் கிரணம் பட்டவுடன் பனிமலை ஜொலிப்பது போலக் கண்ட கண்களுக்கெல்லாம், உன்னும் உள்ளத்துக்கெல்லாம் குளுமை பொழியும் ஜொலிப்பு அது.

மூவரையும் **சேர்த்து** எண்ணுவது நமக்குக் கடினமென்றால் ஐயனையும் அன்னையையும் **பிரித்துக்** காண்பது ஆசாரியருக்குக் கடினமாக இருந்தது.

அதோடு அந்த அன்புப் பிரவாகத்தில் தாமும் கரைந்து போகாமல் காத்துக் கொள்வதும் கடினமாக இருந்தது. உப்புப் பதுமையால் கடலில் கரைந்து போகாதிருக்க முடியுமா? எனினும் பூவுலகில் தமக்கு இன்னும் சில காரியங்கள் இருப்பதை உத்தேசித்துத் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டார் சங்கரர். அந்தக் காரியங்களை அவர் தாம் செய்ய முடியும்; அவர் தாம் செய்ய வேண்டும் என்பதற்காகவே அவரிடம் தனது விசேஷமான கல்யாண குணத்தைப் பூரணமாக அளித்துவிட்டு இங்கே நிம்மதியாக, ராஜ போகமாக அமர்ந்திருக்கிறான் ஈசுவரன்! ஆம், பரமேசுவரனின் விசேஷ அம்சம் அவனது தியாகமே அல்லவா? உலக இன்பங்களையெல்லாம் துறந்து சுடலையில் வசிக்கும் தியாகமூர்த்தி அல்லவா அவன்? அவனே தான் இப்போது அந்தத் துறவுத் தத்துவத்தை அப்படியே சங்கரராக உருவாக்கி அனுப்பி விட்டு இங்கு ராஜ படாடோபத்துடன் வாழ்கிறான்! இப்போது மயானமல்ல சிவனது இருப்பிடம். அரண்மனையே அரனது மனை. புலித் தோலை மட்டும் அணியவில்லை அவன். ஒப்புவமையற்ற உயர்ந்த பட்டு வஸ்திரத்தின் மீதுதான் அதனைச் சுற்றியிருக்கிறான். மார்பில் பாம்பு மட்டும் படமெடுத்தாடவில்லை. அந்தப் பாம்பின் சிரசிலுள்ள ரத்தினம் காந்தும் ஒளியில் அவனது திருமேனியில் துலங்கும் சரம் சரமான மணியாரங்கள் நானாவித வர்ணங்களைச் சிந்துகின்றன. அவனது விரித்த செஞ்சடையையும் முடித்து அதன் மீது கிரீடம் சாத்தியிருக்கிறது.

நீலகண்டனுக்கு நந்திகேசுவரன் மாபெரும் மல்லிகை மலர்த்தாற் போன்ற வெண்குடையைப் பிடிக்கிறான். இருமருங்கும் உமா—மகேசுவரர்களுக்குச் சாமரம் வீசுகின்றனர் தேவ மாதர்கள்.

இத்தனை வைபவங்களுடன் சக்கரவர்த்தி என எழுந்தருளியிருக்கிறான் ஈசன். இடக் கீழ்க் கரத்தால் அன்னையை அணைத்திருக்கிறான். மேற்கரத்திலுள்ள மான் அவனது கண் வீச்சுக்களின் அழகைக் கற்றுக் கொள்வதற்காக வளைந்தும், நெளிந்தும், உயர்ந்தும் சபாபதியாகிய அவனது கரதலத்தையே தன் நாட்டிய சபையாக்கிக் கொள்ள அதில் களிக்கிறான் ஐயன். வலது மேற்கரத்தில் பரசு தாங்கி நம் பாபத்தை வெட்டி வீழ்த்தும் பரமன், கீழ்க்கரத்தில் அண்டினோருக்கெல்லாம் வரமளிக்கும் அழகு முத்திரை தாங்கியிருக்கிறான்.

அந்த ராஜ ராஜனை ராஜராஜேசுவரியினின்று பிரித்துப் பார்க்க முடியாததே ஆசாரியருக்கு ஓர் அதிருஷ்டமாக அமைந்தது. ஏனென்றால் புருஷ தெய்வங்களைப் பாதம் தொடங்கி சிரம் முடிய வர்ணிக்க வேண்டும், ஸ்திரீ தேவதைகளை முடி தொடங்கி அடி முடிய வர்ணிக்க வேண்டும் என்பது கவி மரபு. இதன்படி பரமேசுவரனை பாதாதி கேசாந்தம் துதித்தும் குருமணிக்கு உள்ள நிறைவு உண்டாகவில்லை. எனவே மாதிருக்கும் பாதியனாகக் கண்டபடியால் கேசாதி பாதாந்தமும் இன்னொரு துதி செய்து திருப்தி காண அவருக்கு வாய்ப்புக் கிட்டியது. அமர மொழியில் உருவான அந்த அமுதத் துதிகளிலிருந்து சில துளிகளை இங்கே ருசிக்கலாம்.

சந்திரன் களங்கமுடையவன்; அதிலும் பிறைச் சந்திரன் வளைந்தும் இருப்பதால் 'நேர்மை' அற்றவன். அப்படிப்பட்டவனைத் தன் தலையால் தாங்குகிறான் ஈசுவரன். தீவினையாளராயினும் ஆண்டவனை அண்டினால் உன்னத நிலை பெறலாம் என்பதற்குச் சந்திரன் சான்றாம்.

சிவபெருமானின் கிரீடத்துக்குப் பக்கத்தில் நெளியும் சுருண்ட கருங்குழலைக் காணும்போது கங்கையை மட்டுமின்றி, கருநிறத்தவளான யமுனையையும் அவன் முடியில் சூடிவிட்டானோ என வியப்பேற்படுகிறது.

மோட்ச ஸ்தானத்தை அடைவதற்காக அமைத்த வெள்ளிப் படிக்கட்டுகள் போல் காண்கிறது விபுவின் விபூதிப் பூச்சு. ஸ்படிகத்தில் ரத்தினம் பதித்தாற் போல நெற்றியில் சிவந்த ஞானக் கண். தங்கத் தாமரையின் கர்ணிகை போல, நித்தியனின் முக கமலத்தில் பொலிகிறது அவனது நாசி.

தேவியின் திருமுகத்தைப் பெருமான் நெருங்கும் போது அவனது பளிங்கு போன்ற கன்னத்தில் நினைவு எடுக்கும்.

அதைத் தீர்த்து, அந்தக் கண்ணாடிக் கன்னங்களைச் சொறிந்து கொடுக்குமாம் அவனது குண்டலங்களின் விளிம்புகள்.

பரீட்சை மதிப்பெண் பற்றிப் பேசும் போது குண்டலம் என்பதை பூஜ்யம் என்பதற்குச் சிலேடையாக நாம் சொல்கிறோமல்லவா? சங்கரரும் இதுபோலவே சொல்கிறார். பக்தர்கள் தலையில் அயன் எழுதிய எழுத்துக்கு குண்டலத்தை — அதாவது பூஜ்யத்தை — மதிப் பெண்ணாகத் தரும் குண்டலங்களாம் ஈசனுடைய காதணிகள்.

பெருமானின் வதனத்திலிருந்து பொழியும் வாக்கு எனும் அமுதத்தின் நுரைத் துளி போல் துலங்குகின்றன பக்தர்களின் அக இருளை நீக்கும் ஒளி பொருந்திய அவனது பற்கள். அவனுடைய அந்த வாக்கைப் பரப்பிரம்மத்தின் ஒலி உருவம் என்றுதான் கூற வேணும். அஹஹஹ என்ற அவனது கம்பீரமான நகையொலி பரமானந்தத்தைப் பாய்ச்கிறது.

பால் போன்ற அவனது திரு உதரம் க்ஷீர சாகரமாகவும், அதில் காணும் சுந்தரமான மடிப்புக்கள் அலைகளாகவும், திருஉந்தி சுழலாகவும் தோன்றுகின்றன. கடலில் பாம்புகள் நெளிவது போலவே இங்கும் நாகம் நெளிகிறது. 'இந்தப் பாற்கடலில் சயனிக்கும் புருஷோத்தமனாக உங்கள் மனசு இருக்கட்டுமே' என்று ஆசி கூறுகிறார் ஆசாரியர்.

பார்வதியின் முக சந்திரன் அருகிலிருந்தும் அலர்ந்துள்ள அடியிணைத் தாமரைகளையும், தாமரையிலிருந்து மகரந்தப் பொடி உதிருவது போல அப்பாதங்களிலிருந்து எழும் தூளிகளையும் நாவாரப் பாடிப் பணிந்தார் ஜகத்குரு.

பகவதி சமேதனான பரமேசனை மட்டுமா அவர் பணிந்தார்? கயிலையில் வாழும் மிருகங்களுக்கும், பறவைகளுக்கும், புழுக்களுக்கும், அங்கு முளைத்த புல் பூண்டுக்குங்கூடத் தமது வணக்கத்தை தெரிவிக்கிறார் ஜகத்குருவாகிய சங்கரர்.

வேதக் கடல்களைக் கடைந்து அத்வைத அம்ருதத்தை எடுத்து உலகுக்கு அளித்த சங்கரரைப் பேரன்புடன் பார்த்தனர் பரமனும் பரமேசுவரியும். ஆத்மாவை விடப் பிரியமானது ஏதேனும் உண்டா ?

தனது பக்கத்திலுள்ள பீடத்தைப் பார்த்தான் பசுபதி. அதில் பரமபாவனமான ஐந்து ஸ்படிக லிங்கங்கள் ஒளி வீசிக் கொண்டிருந்தன. ஒரு சுவடியும் அதில் இடம் பெற்றிருந்தது. ஐயனை நினைவில் நிறைத்துக் கொள்ள ஸ்படிக லிங்கங்கள். அன்னையைச் சிந்தையில் தேக்கிக் கொள்ளத் தோத்திரச் சுவடி. அவற்றை ஆசாரியரிடம் தந்தருளினான் கைலாசபதி. குழையும் பளிங்கு போன்ற தனது நீண்ட, மெல்லிய காந்தள் விரல்களால் அந்தப் பளிங்கு லிங்கம் ஒவ்வொன்றையும் சிவபெருமான் கல்வி யெடுத்து, பணிவுடன் நிற்கும் ஆசாரியரின் உள்ளங்கையில் — அவரது உள்ளத்தைப் போலவே சிவந்து மிருதுவாக விளங்கும் உள்ளங்கையில் — வைத்ததை எண்ணினாலே ரோமாஞ்சனம் உண்டாகிறது. மும்மையாகத் தோன்றும் பல 'த்ரிபுடி'களும் ஒன்றே என்ற அத்வைதத்தின் விளக்கம் போல ஈசனே ஈசனுக்கு ஈசனை ஈந்தான்—'யானே நீயாகி என்னை அளித்த' என்று ஆழ்வார் பாடியது போல.

உலகைப் பிரம்மத்தின் மீது நாம் ஏற்றிப் பார்ப்பது போல் ஸ்படிகத்தின் மேல் எந்த வர்ணத்தையும் ஏற்றிப் பார்க்கலாம். லிங்கத்தைக் கண், மூக்கு, காது இவை கொண்ட உருவம் என்று சொல்ல முடியாது. அருவம் என்றும் சொல்ல முடியாது. உருவமற்ற பிரம்மம் உருவமுள்ளதாகவும் ஆகும் என்பதை அது தெரிவிக்கிறது. சிதம்பரத்தில் நாம் கண்ட அகக்கண் காட்சி நனவாவதை உணர்ந்து மெய்ம்மறந்தார் சங்கரர். பஞ்ச லிங்கங்களை வழிபடுவதால் லோகம் க்ஷேமமடையும் என்று கூறினான் ஈசன்.

'சௌந்தரிய லஹரி' நூல் சுவடியையும் சங்கரருக்கு அருளினான் பரமேசன். திரிபுர சுந்தரியாகிய தேவியைக் குறித்து ஈசுவரனே செய்த துதி அது. அதையும் உலகில் பிரசாரம் செய்யச் சொன்னான் பகவான். மேலும் சிறிது காலம் பூவுலகிலிருந்து மற்ற திக்குகளிலும் மடஸ்தாபனம் செய்துவிட்டுத் தன்னில் கலக்குமாறு கூறினான். லோக தம்பதியை உமா மகேசுவர ஸ்தோத்திரத்தால் பாடிப் பரவி விட்டுப் பிரியா விடை பெற்றுக் கிளம்பினார் சங்கரர்.

சங்கரர் கை நிறையப் பொருள்களோடு திரும்புவதைக் கண்ட துவார பாலகன் அவை அவருக்கு எப்படிக் கிடைத்தன என்று கேட்டான். சிவத்யானத்திலிருந்த சங்கரர் அவன் கூறியதைக் கவனிக்கவில்லை. அவர் மேல் பாய்ந்தான் துவாரபாலகன். அவர் கையிலிருந்ததை இன்னதென்றே கவனியாமல் பிடுங்கினான். நூறு பாடல் கொண்ட சௌந்தரிய லஹரியின் கடைசி ஐம்பத்தொன்பது பாடல்கள் அவன் கையில் சிக்கின. அதை என்னவென்று பார்க்க ஆரம்பித்தவன் அதன் அழகிலேயே மனசைப் பறி கொடுத்து விட்டான். சங்கரரைக் கவனிக்கவில்லை.

பஞ்ச லிங்கங்களும், சௌந்தரிய லஹரியில் நாற்பத்தியொரு பாடல்களுமாகத் திரும்பினார் சங்கரர். புனிதகிரந்தம் குறைபட்டுப் போயிற்றே என்று வருந்தினார். ''நீயே அதைப் பூர்த்தி செய்வாயாக'' என்று உள்ளத்திலிருந்த தேவி ஆக்ஞாபித்தாள். அந்த ஆக்ஞை நம் பாக்கியம்.

முதல் நாற்பத்தியொரு சுலோகங்கள் சாக்த தத்துவங்களைக் கூறும். நாற்பத்திரண்டாவது சுலோகத்திலிருந்துதான் அன்னையின் கேசாதி பாத வர்ணனை தொடங்குகிறது. தேவி என்ற எழிற் பொழிலில் வீசும் அலைகளே இந்தப் பாடல்கள் — எப்படிப் பஞ்ச லிங்கங்கள் ஈசுவர ஸ்வரூபமோ, அது போல் சௌந்தரிய லஹரி அம்பாளின் ஸ்வரூபம் என்றே கூறலாம்.

அன்னையின் நவரத்தின கசிதமான கிரீடத்தில் தங்கும் பிறை மதி, அந்த மணிகளின் சாயையினால் ஏழு வண்ணங்களுடன் பிரதிபலித்து வான வில்லாகத் திகழ்கிறது. அவளது திருமுகத்தில் ததும்பி வழியும் சௌந்தரிய ஊற்று பாய்ந்து வரும் ஓடையோ என்ற எண்ணத்தை உண்டாக்குகிறது, சிந்தூரம் அப்பிச் சிவந்த போன வகிடு. தாமரைப் புஷ்பங்களின் லாவண்யத்தைப் பரிகசிக்கும் அன்னையின் அருள் முகத்தை வண்டாக மொய்க்கிறது அத்தனின் நயனம்.

தேவியின் முடியில் பாதி சந்திரன் தானே இருக்கிறான்? மீதி பாதி எங்கே? அந்தப் பாதியைத் திருப்பி வைத்துத் தான் அவளது நெற்றி உண்டாகியிருக்கிறதோ எனத் தோன்றுகிறது.

நீலநயனம் இரண்டைத் தவிர நெற்றியின் மத்தியில் செக்கச் செவேல் என்ற மூன்றாவது திருக்கண்ணும் உண்டு தேவிக்கு. அது சிவந்திருப்பதன்காரணமும் தெரிகிறது. மற்ற இரு கண்விழிகளும் பக்தர்களைக் கடாட்சிப்பதாகச் 'சாக்கு' சொல்லிக் கொண்டு, காது வரை செல்கின்றன. உண்மையில் விழிகள் என்ற அந்தக் குட்டி வண்டுகள் என்ன செய்கின்றன தெரியுமா? தேவியின் காதுகளில் பாய்கிறதே, கவிஞர்களின் வாக்காகிய தேன், அந்தத் தேனைப் பருகத்தான் காதளவு ஓடுகின்றன. நெற்றிக் கண் விழி எப்படிக் காதருகே வர முடியும்? அதற்கு ஒரே கோபம். அந்தக் கோபத்தில்தான் அது இப்படிக் 'குப்'பென்று சிவந்திருக்கிறது.

தேவியின் இரு காதோலைகளும் கன்னத்தில் பிரதிபலித்து, இத்திருமுகம் தான் சிவனை வெல்லும்போது மதனன் ஏறி வந்த நான்கு சக்கர ரதமோ என்றெண்ணச் செய்கிறது. அந்தக் குண்டலங்கள் ஜணஜண என்று அசைவது அவை வாணியின் கானத்தைச் சிலாகித்துப் பேசுவது போலிருக்கிறது. அந்த இசையைப் பாராட்டி தேவியும் 'சபாஷ்' சொல்ல வாயைத் திறப்பாள். அந்தக் குரலினிமையில் வெட்கிய சரஸ்வதி வீணை வாசிப்பதை அப்படியே நிறுத்தி விட்டு அதை உறையால் மூடி விடுவாள். சங்கீதமெல்லாம் தேவியின் கண்டத்தில் தோன்றுவதுதானே! சங்கீதத்தில் ஷட்ஜ, மத்யம, காந்தார கிராமங்கள் என்று மூன்று உண்டு. அவை கலக்காமலிருக்கவே தேவி தன் கழுத்தில் ரேகைகள் என்ற பெயரில் மூன்று பாத்திகளை வகுக்கிறாளோ என வியக்கிறார் ஆசாரியர்.

இப்படியே அன்னையின் பாதம் வரை வர்ணித்துக் கொண்டு போகிறார் ஆசாரியர். அந்தப் பாத தாமரைகள் தமது நுனியிலுள்ள வளைந்த நகங்களால் புன்னகை புரிவதாகத் தோன்றுகிறது. எதற்காகப் புன்னகை? பிறைச் சந்திர வடிவுள்ள இந்த நகங்களின் ஒளியில் கூம்பியது போல, அடிகளில் படிந்துள்ள வேதமாதரின் கைத்தாமரைகள் அஞ்சலி செய்கின்றன. கேட்டதையெல்லாம் அளிக்கும் கல்பவிருட்சம் உள்ள தேவலோகத்தைச் சேர்ந்தவர்கள் அம்மாதர். இலையெனும் கரத்தின் அடியை வந்தடைந்தவர்களுக்கு மட்டுமே அந்தத் தரு கேட்டதையெல்லாம் தரும். ஆனால் இவளோ கால் நுனியாலேயே தன் அடியைப் பற்றுபவருக்கும் கேட்டதற்கு மேல் அளிப்பவளாயிற்றே! இதை எண்ணியே அப்பாதங்கள் சிரிக்கின்றன. அந்த அடிகளுக்குச் சிவப்பூட்டும் செம்பஞ்சுக்குழம்பு திருமாலின் முடியிலுள்ள ரத்தினமாம். அவற்றை அபிஷேகிப்பது சிவனார் முடியிலுள்ள கங்கையாம். அதாவது சிவனும், விஷ்ணுவும் அம்பிகையின் பாதங்களைத் தமது தலையில் தரித்துக் கொள்கிறார்கள். அந்தத் தாளிணையைத் தம் முடியிலும் சூட்டுமாறு பிரார்த்திக்கிறார் சங்கரர்.

ஆசாரியரின் நூல்களுக்குள் சௌந்தரிய லஹரியே முதலிடம் பெறுகிறது. 'ஸௌந்தர்ய லஹரீ முக்ய பஹு ஸ்தோத்ர விதாயகாய நம:' என்கிறது ஆசாரிய அஷ்டோத்தரம். எனினும் பகவத் பாதரோ இந்தத் துதி முடிவில் ''நான் செய்த துதியல்ல இது. நீ கொடுத்த வாக்கு; நீயே செய்த துதி இது'' என்று அம்பிகையிடம் கூறுகிறார். இப்படியும் ஒரு பணிவு உண்டா?

(அடுத்த இதழில் பூர்த்தியாகும்)

சுசீலா சந்தோஷமான
குடும்பப்பெண்



கணவன் அவளைவிட



சந்தோஷமானவர்

குழந்தைகள் பள்ளியில்
நன்ருகப்





படித்துக்கொண்டிருந்
தனர்



நகர்ப்புறத்தில்
சிறிய வீடும் உண்டு



ஒருநாள் அவர்கள் ஒரு ரேடியோ
வாங்கினுர்கள்







பிறகு ஒரு
குளிர்சாதனப்
பெட்டியும் வாங்கினர்

இவை எப்படி என்று



யாருக்குத் தெரியும்

NGB/8D.TAM

*எப்படி?* சுசீலா நேஷனல் அண்ட் க்ரிண்ட்லேஸ் பாங்கியில் பணம் சேமித்தாள். ஐந்தே ரூபாயுடன் ஒரு சேமிப்புக் கணக்கைத் துவங்கினுள். அவளுடைய பணம் பத்திரமாக இருந்ததோடு வருஷத்திற்கு 3 சதவீதம் வட்டியும் கொடுத்தது. ஒவ்வொரு மாதமும் அவள் ஒழுங்காகச் சேமித்து வந்தாள். கொஞ்ச காலத்திலேயே கணிசமான பணம் பாங்கியில் சேர்ந்து விட்டது. சுசீலா புத்திசாலி. வருங்காலத்திற்காக, சந்தோஷமான, மேலும் சிறந்த நாளைக்காக . . . அவள் சேமித்துவைத்தாள்.

*உங்களுடைய வருங்காலத்திற்காக சேமிப்பது பற்றி நீங்கள் எப்பொழுதாவது சிந்தித்திருக்கிறீர்களா?*

# நேஷனல் அண்டு கிரிண்ட்லேஸ் பாங்க் லிட்.,

இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது

கிளைகள்: சென்னை: 3, நார்த் பீச் ரோடு, 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு (லாயிட்ஸ் கிளை) 6, அரமனைக்காரத் தெரு 158, மவுண்ட் ரோடு. தூத்துக்குடி: 44, பீச் ரோடு

# ஓணம்

டாக்டர் வே. ராகவன்

நக்ஷத்திரங்களுக்குள் இரண்டுக்கு நாம் "திரு" என்ற அடைமொழி தந்து பேசுகிறோம்; அவை 'திரு ஆதிரை' 'திரு—ஓணம்' என்பவை; இத் "திரு" தெய்வச் சேர்க்கையின் சிறப்பால் ஏற்பட்டது; ஏனெனில் திருவாதிரை சிவனுடைய நக்ஷத்திரம்; திருவோணம் விஷ்ணுவின் நக்ஷத்திரம்.

விஷ்ணு மூர்த்தங்களில் விசேஷமாய் வாமன த்ரிவிக்கிரம அவதாரங்களுடன் தொடர்பு கொண்டது திருவோணம். இன்று 'ஓணம்' என்றால் அது மலையாளிகளுக்கான தனிவிழாவெனக் கருதுகிறோம். ஆனால் பழம் தமிழ் இலக்கியத்தைப் பார்த்தால் ஓணம் ஒரு கொண்டாட்டமாய் மூவேந்தர் நாடுகளிலும் வழங்கி வந்ததெனத் தெரிகிறது. இன்றும் திருப்பதியில் பெருமாளுக்குத் திருவோண விழா நடக்கிறது. வேற்றரசரை அடக்குவது, உலகெலா மளாவி நிற்பது என்ற இரு கருத்துக்களும் அரசருக்கு இன்றியமையாதவையானதால் மன்னர் விசேஷமாய் இந்நாளைக் கொண்டாடினர் போலும். ஓணத்துக்கு மறுநாள் கொலுவிருந்து புலவரையும் மற்றோரையும் பரிசளித்துப் பாராட்டும் பாண்டியன் நெடுஞ்செழியனைப் புகழும் மாங்குடி மருதனார் என்ற கவி தமது மதுரைக் காஞ்சியில் "அவுணர் கடந்த மாயோன் மேய ஓண நன்னாள்" என்கிறார். கேரளத்திலும் முதலில் இவ்விழா வட திருவாங்கூர், ஆலங்காடு தாலூகாவிலுள்ள திருக்காக்கரை க்ஷேத்திரத்தில்தான் சிறப்பாய் ஒரு மாதம் முழுதும் கொண்டாடப்பட்டது; அப்போது கொலுவிற்று அரசாண்டு வந்த பெருமான் நன்கொடைகள் வழங்கி வந்தார். அங்கிருந்து இது கேரளம் முழுதும் எல்லா மக்களும் கொண்டாடும்படி பரவிற்று; இன்றும் ஓணத்தன்று திருக்காக்கரையப்பனை விசேஷமாய்த் தொழுது வருகிறார்கள்.

வாமன — திருவிக்கிரம அவதாரத் தொடர்பின் மூலம் இந்நன்னாளில் பாதாளத்துக்கு அனுப்பப்பட்ட மஹாபலி சக்கரவர்த்தி தர்மாத்மாவாதலால் எல்லோராலும் நினைக்கப்படுகிறார். ஓணத்தன்று அவர் மேலே வந்து நம்முடன் நம் உலகில் இருப்பதான நம்பிக்கையும் இதிலிருந்து வளர்ந்ததே.

ஓணத்தன்று முக்கியமாக மலையாளிகள் அனைவரும் புது முண்டு உடுப்பர். குடும்பத் தலைவர், காரணவன் முதலியோர் மற்றோருக்குப் புது முண்டு வழங்குவர். முன் ஓண நன்னாளில் அரசன் கொலுவிருந்து எல்லோருக்கும் நன்கொடைகள் வழங்கியதிலிருந்து வளர்ந்த வழக்கம் இது என்று தோன்றுகிறது. கேரளத்தில் ஓணத்தையொட்டிய கொண்டாட்டத்தில் விருந்துண்ணல், பெண் குழந்தைகள் பூக்கோலம் இடுவது, கைகொட்டிக்களி முதலியன ஆடுவது, ஆண்கள் பலவித விளையாட்டுக்களோடு தேகப்பயிற்சிக்கான காட்சிகளையும் செய்து காட்டுவது என்ற வழக்கங்களும் முன் குறித்த காரணத்திலிருந்து விளைந்தனவாகும்.

நாளடைவில் பொதுவாய் மக்கள் அனைவருக்கும் தனிச்சிறப்பு பெற்ற விழாவாக வளர்ந்து, இன்று உலகில் எல்லா இடங்களிலும் சிறிதும் பெரிதுமான பல அலுவல்களிலிருக்கும் கேரள மக்கள் எல்லோருக்குமே மன மகிழ்ச்சியையும் ஒற்றுமையையும் தருவதான ஓணம் வருஷத்துக்கு ஒரு நாளாகத் திகழ்ந்து வருகிறது.



# உங்களைத் தானே!



பிள்ளை வீட்டில் பெண்ணைப் பெற்றவர்கள் வரதட்சிணை சம்பந்தமாக முடிவு செய்வதற்குக் கூடியிருந்தார்கள். பெண்ணுக்கு வைரத்தோடு போட வேண்டும், பிள்ளைக்குக் கடிகாரம் வாங்கித் தர வேண்டும் என்பன போன்றவற்றையெல்லாம் அடுக்கிக் கொண்டு போனார் பிள்ளையைப் பெற்றவர்.

அந்தச் சமயத்தில் "உங்களைத் தானே?" என்ற குரல் வீட்டின் உள் பக்கமிருந்து கேட்டது. பிள்ளையின் தாயார் ஏதோ தன் கணவரிடம் சொல்லத் துடித்துக் கொண்டிருப்பது அக்குரலில் தெரிந்தது.

இதைப் பார்த்து விட்ட பெண்ணின் தகப்பனார், "ஸார்! உங்களை உள்ளே கூப்பிடுகிறாற் போல இருக்கு!" என்று வருங்கால சம்பந்தியின் பார்வையைத் திருப்பினார்.

"இதோ வந்து விட்டேன்!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே எழுந்து போனார் பிள்ளையின் தந்தை.

"இந்தாங்க! உங்களைத்தானே ?.... உங்களுக்கு எல்லாம் சொன்னேன்.... ஒண்ணு சொல்ல மறந்துட்டேன்!" என்றாள் பிள்ளையின் தாயார்.

"என்னது ? சீக்கிரம் சொல்லு! அவர்களை உட்கார வைத்து விட்டு வந்திருக்கிறேன்!"

"பாருங்கோ! பிள்ளைக்கு இன்னும் பூணூல் போடவில்லை. கல்யாணத்தோடு சேர்த்துத்தானே போடப் போகிறோம். அந்தச் செலவு ஆயிரம் ரூபாயையும் வரதட்சிணையோடு சேர்த்துத் தரணுமென்று அவர்களிடம் கறாராகச் சொல்லி விடுங்கோ. பிள்ளைக்குப் பூணூல் போடுவதும் அவங்க கைங்கரியமாக இருக்கட்டும்" என்றாள்.

"சரி! அவ்வளவுதானே!" என்று சொல்லி விட்டுப் போய்க் கூட்டத்தில் அமர்ந்து தம் மனைவி கூறிய விஷயத்தை மெதுவாகப் பெண்ணைப் பெற்றவரிடம் கூறினார்.

இந்தச் சமயத்தில் வாசல் பக்கமிருந்து, "உங்களைத்தானே?" என்று ஒரு குரல் கேட்டது. அடுத்த கணம் பிள்ளையின் தகப்பனார் "ஸார்! உங்களை உங்க சம்சாரம் கூப்பிடுகிறாற்போல் இருக்கு!" என்று கூறினார்.

பெண்ணின் தகப்பனார் எழுந்து வாசல் பக்கம் சென்றார்.

"உங்களைத்தானே? வாங்கோ, சீக்கிரம்! பிள்ளைக்குப் பூணூல் போடும் கைங்கரியத்தோட..... காது குத்தி வாசிக்க வைக்கிறதும் நம்ப கைங்கரியமா இருக்கட்டும் என்று சொல்லுவதற்கு முன்னால் நாம் இதை விட்டுப் போய் விடலாம்" என்று அழைத்தாள் பெண்ணின் தாயார். பெண்ணைப் பெற்றவர்கள் இருவரும் அங்கிருந்து மெதுவாக நழுவி விட்டனர்.

"உங்களைத்தானே?" என்று மறுபடியும் வீட்டினுள்ளிருந்து அஸ்திரம் கிளம்பியபோது பிள்ளையின் தகப்பனார் அசையக் கூட இல்லை. அதற்குள் தான் பெண்ணைப் பெற்றவர்கள் அங்கிருந்து நழுவி விட்டது தெரிந்து விட்டதே!

—ரமா

கிண்டி ராஜபவனம்

## காந்தி மண்டபத்தில்

ஆகஸ்ட் மாதம் 31-ந் தேதி வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு

## பிரார்த்தனைக் கூட்டம்

நாதஸ்வர இன்னிசை

திருவையாறு பிரம்மஸ்ரீ அண்ணாஸ்வாமி பாகவதர் அவர்களால்

சந்திரஹாஸ சரித்திரம் ஹரிகதை

தக்கர்பாபா வித்தியாலய மாணவர்கள், சாரதா வித்தியாலய போதனா முறை பயிற்சிப் பள்ளி மாணவிகளால் நூற்பு யக்ஞம், கீதை பாராயணம், ராமநாம பஜனை

பொதுமக்கள் திரளாகக் கலந்துகொள்ள வேண்டுகிறோம்




'தேவர் பிலிம்ஸ் தயாரிப்பா? சரி, காட்டு மிருகங்களின் சுவையான சண்டை பார்க்கலாம். அவைகளின் அருமையான நடிப்பைப் பார்க்கலாம்' என்று கண்ணைக் கொட்டிக் கொண்டிருக்க வேண்டாம். குதிரைக்குக் 'குர்ரம்' என்றால் ஆனைக்கு 'அர்ரம்' என்று சொல்லப்படுமோ? இப்படத்தில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய அம்சம், காட்டு மிருகங்களைக் காட்டாததுதான். அதுமட்டுமில்லை. மனிதர்கள் மட்டும் வருகிறார்கள்; அவர்களும் நடிக்கிறார்கள். ஆச்சரியமில்லையா?

சோமு, வாசு இருவரும் அண்ணன் தம்பிகள்; சோமு எஸ்டேட்டைக் கவனித்து வருகிறான். இளையவன் வாசு விளையாட்டுப் பிள்ளை. அவர்கள் தந்தை வேலாயுதம் பிள்ளை சீட்டாட்டத்தில் விருப்பமுள்ளவர். சீதா அநாதை. அந்தக் குடும்பத்தில் அடைக்கலப் பொருளாக வந்து சேருகிறாள். சோமுவும், வாசுவும் ஒருவரை ஒருவர் அறியாமல் அவளைக் காதலிக்கின்றனர். கதையின் சிக்கலே இது தான். (ஆடிப்பெருக்கில் ஒரு குமாரனுக்கு இரண்டு குமரிகள். இதுவே இக்கதையில் பால் மாற்றம் கண்டிருப்பதைக் காண்க) எம். ஜி. ஆர். வந்தால் அவருக்கு வாய் குளிர அழைக்க ஒரு அண்ணா வேண்டாமோ! (ஏன் தான் கதையை அரசியல் நோக்கத்தோடு அமைக்கிறார்களோ!)

தம்பியின் காதலியையே தானும் காதலிக்க நேர்ந்தால் அந்த அண்ணனின் வேதனை எப்படி யிருக்கும் என்பதை அசோகன் நன்றாகக் காட்டி யிருக்கிறார்.

ரேக்ளா பந்தயம், சடுகுடு பந்தயம் ஆகியவற்றிலெல்லாம் நன்றாய்ச் சமாளித்ததோடு சீதாவைக் காதலித்து அண்ணனுக்காக அவளை விட்டுக் கொடுக்கும் அளவுக்கு வந்து (வேறு வழி இல்லை. கண்ணீர்விட்டுக் கொடுக்கிறார்) உருக்கமாக நடித்திருக்கிறார் எம். ஜி. ஆர். வில்லனோடு சேற்றில் சண்டை போட்டுச் சேற்றையும் வாரிப் பூசிக் கொள்கிறார்.

காதல் ஒருவன் கைப்பிடித்த சரோஜா தேவி அவன் காரியம் யாவினும் கை கொடுக்கும் பொருட்டுக் காரணம் இல்லாமல் தானும் சேற்றை வாரிப் பூசிக் கொள்கிறார்.

வாசுவும் சீதாவும் ஸ்டுடியோக் குளத்தில் சேறு போகக் குளிக்கும் காட்சி அவசியம் இல்லை என்பது மட்டுமல்ல; ஆபாசமுங்கூட. ஆனால் அப்பொழுது இருவரும் பாடும் "ஏதோ ஏதோ ஏதோ ஒரு மயக்கம்" என்ற பாட்டு நன்றாயிருக்கிறது. இதற்காகத்தான் இக்காட்சியைப் படம் எடுத்தார்களோ!

எம். ஆர். ராதா, சோமு — வாசுவின் தந்தையாக வந்து நன்றாகவே நடிக்கிறார்; வழக்கமான கத்தல் இல்லாததே பாராட்டுக்குரியதுதானே!

கண்ணம்பாவுக்கு ஒரு வாரிசு எம். வி. ராஜம்மா. அநுபவம் அவரைக் கைவிட்டுவிடவில்லை.

வாழ்க்கையில் இப்படி நடக்குமா? இந்தப் படத்தில் விசேஷமாக என்ன இருக்கிறது? என்றெல்லாம் குழப்பிக்கொள்ளாமல் "குடும்பத் தலைவ"னுக்குக் குடும்பத்தோடு வேணுமானாலும் ஒரு தடவை போகலாம்.





# ஆடிப் பெருக்கு

**கதை இதுதான்:** வள்ளல் கிருஷ்ணனின் மகன் ராஜா அநாதையாகத் தவித்துச் சிரமப்பட்டுப் படித்துப் பெரிய கவிஞனாகிறான். ஒரு பிரபுவின் ஆதரவினால் அவன் கவிதை நூல்கள் வெளியாகிப் பேரும், புகழும் பெறுகிறான். வள்ளல் கிருஷ்ணனின் உதவியால் முன்னுக்கு வந்து பிறகு அவர் உதவி இல்லாமலே நொடித்துப் போன குடும்பத்தைச் சேர்ந்தவள் பத்மா; கவிதை நூல்களை வெளியிட்ட பிரபுவின் மகள் லதா — இவர்களுக்கு இடையில் கவிஞன் ராஜா — ஒருத்திக்கு வாழ்வு. இன்னொருத்திக்கு....?

ஆடிப் பெருக்கில் பூவும், கொத்தும், காயும் கனியும், மரமும், இலையும் அடித்துக் கொண்டு வரும்; அவற்றுடன் உயிர் இழந்த உடல்களும், எத்தனை எத்தனையோ அழுகிப் போன பண்டங்களும் வரும். அதே மாதிரி மதன் தியேட்டர்ஸின் தயாரிப்பான "ஆடிப்பெருக்"கில் உருக்கமான நடிப்பும், கருக்கமான வசனங்களும், விருப்பமான வெளிப்புறக் காட்சிகளும் கிடைப்பதோடு, காலஞ் சென்ற டிராம் வண்டியின் வேகத்தில் செல்லும் கதையும், கதையின் வேகத்துக்குக் குறுக்கே நிற்கும் வேண்டாத பாத்திரங்களும், சாவுக் காட்சிகளும் வந்து கழுத்தை யறுக்கின்றன.

ஜெமினி கணேசன் நடிக்கும் படங்களில் அநேகமாக இரு பெண்களின் காதல் போராட்டம் வராமல் இருப்பதில்லை. இத்தகைய போராட்டம் ஜெமினி கணேசனுக்குப் புதியதல்ல.

"ஆடிப் பெருக்"கில் புகழைப் பெருக்கிக் கொண்டவர் சரோஜா தேவி ஒருவர்தான். துள்ளித் திரியும் குமரியாயிருந்த போது காணப்பட்ட துடுக்கும், மேடையில் ஏறி ஆண்களுக்கு எதிராகப் பாடி வாதாடிய போது தோன்றிய மிடுக்கும், பெற்ற தாயே காதலைக் கைவிடச் சொன்னபோது எப்படி மாயமாய் மறைந்தன! ஆடிப் பெருக்கைச் சரோஜா தேவியின் கண்களில் ஓர் கண்ணீர்ப் பெருக்காக அல்லவா காண்கிறோம்? தொடர்ந்து ஒரு மங்கைக்குத்தான் எத்தனை துயரங்கள்! அத்தனைக்கும் ஈடு கொடுத்து.... அப்பப்பா, என்ன நடிப்பு! நடிப்பில் தாம் உருகுவது மட்டுமல்லாமல், படம் பார்ப்பவர்களையும் உருக்கியிருக்கிறார்.

தேவிகா விதம் விதமாக வேஷம் போட்டிருக்கிறார். அவ்வளவுதான்; நடிப்புக்குச் சந்தர்ப்பமே இல்லை.

சந்திரபாபுவின் பெண் வேடம் பிரமாதம். அமர்க்களப்படுத்துகிறார். பாட்டும் நடனமுமாக. அது சரி, பல இடங்களில் வசனம் காதில் விழவில்லையே, ஏன்?

கொத்தமங்கலம் சுப்பு இயற்றிய "அன்னையின் அருளே வா வா வா" என்ற பாடலும், "மலையில் பிறவா சிறு தென்றல்" என்ற பாடலும், "கண்ணிழந்த மனிதர் முன்னே" என்ற கண்ணதாசனின் பாடலும் "ஆடிப் பெருக்"கில் அடித்து வந்து கரை சேர்ந்த அரும் பொருள்கள்.

லதாவுக்குக் கல்யாண அலங்காரங்கள் ஒவ்வொன்றாக நடக்கும்போது, பத்மாவுக்கு மங்கல அணிகள் ஒவ்வொன்றாகக் களையப் படுவதாகக் காண்பிப்பது புதிதாக இருந்தாலும் புண்படுத்துவதாக இல்லையோ?

ஒளிப்பதிவு மிகவும் சிறப்பாயிருக்கிறது.

சோகரஸத்தைப் பெருக்க ஒரு படத்தில் தொடர்ந்து பல மரணக் காட்சிகள் வந்து தான் ஆக வேண்டுமா? படத்தில் இயற்கைக் காட்சிகள் அதிகமாக இருந்து உற்சாகம் அளிப்பதுபோல், கதையில் செயற்கைச் சம்பவங்கள் வந்து சோர்வைத் தருகின்றன.

இக்கதைக்கும் தலைப்புக்கும் சம்பந்தமே இல்லை. மொட்டைத்தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடப் பெரு முயற்சி நடத்தியிருக்கிறார்கள்.

எது இல்லாமல் போனால் என்ன? சரோஜா தேவி சக்கைப்போடு போட்டிருக்கிறாரே. அதற்காகவே ஒரு முறை ஆடிப்பெருக்கைப் பார்க்கலாம்.

# சென்னை ராஜ்ய கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட்

"பாலகந்திரம் கட்டிடம்"

34/1-ஏ, பாந்தியன் சாலை, எழும்பூர், சென்னை-8



தமிழ் கூறும் நல் உலகில் வாழும் தென்னிந்தியர்களின் சௌகரியங்களை முன்னிட்டு அடியிற்கண்ட வட இந்திய ஊர்களில் "கோ-ஆப்டெக்ஸ்" கைத்தறி ஜவுளி விற்பனை நிலையங்கள் திறக்கப்பட்டுள்ளன.

தங்கள் நல்லாதரவைக் கோருகிறோம்

| | | | |
|---|---|---|---|
| 1 | நெ. 128, ராஷ் பிஹாரி அவின்யூ | – | கல்கத்தா-20 |
| 2 | நெ. 1C/74, குருத்துவாரா ரோடு, கரோல் பாக் | – | நியூ டெல்லி |
| 3 | மனு மகால், கிங்ஸ் சர்க்கிள், மாதுங்கா | – | பம்பாய்-19 |
| 4 | நெ. 8, 9, டிஸ்ட்ரிக்ட் லோகல் போர்டு பில்டிங்ஸ், சோமவார்பேட் | – | பூனா-2 |
| 5 | நெ. 595, மெயின் ரோடு, சித்தாபுல்டி | – | நாக்பூர்-1 |
| 6 | சி. கே. 36/4, பான்ஸ் பட்டாக்ஸ் | – | வாரணாசி |
| 7 | நெ. 82, அஜரத் கஞ்ச் | – | லக்னோ |
| 8 | நெ. 14/76, மகாத்மா காந்தி ரோடு | | கான்பூர் |
| 9 | லைன் நெ. 18, ஷாப் நெ. 5 பிஸ்டாபூர் மார்க்கெட் | – | ஜம்ஷெட்பூர் |
| 10 | ஷாப் நெ. 1-B, 1-C, கோல் பஜார் | – | கரக்பூர் |
| 11 | ஷாப் நெ. 1208, ரிலீப் ரோடு | – | அகமதாபாத் |
| 12 | குதிரை லாடம் மார்க்கெட் செக்டார் | – | துர்காபூர் |
| 13 | ஷாப் நெ. 23, இனிக்ஸ் சென்ட்டர் | – | பிலாய் |
| 14 | நெ. 4211, ஸ்டேஷன் ரோடு | – | செகந்திராபாத் |
| 15 | அர்பன் பாங்க் ரோடு, பெர்காம்பூர் | – | கஞ்சம் |

குறிப்பு: காஞ்சீபுரம், ஆரணி பட்டுச் சேலைகளும் சாசயான விலையில் கிடைக்கும்



## தமிழ் நாடு (Madras State) கூட்டுறவு கைத்தறி நெசவாளர் சங்கம், சென்னை

# நந்தவனம்

## சோமு

## 35. கல் வீடு

செண்பகநாயகி கோவிலின் சுவரிலுள்ள அந்தக் கடைசிச் சித்திரத்தைப் பற்றி வேணுலிங்கம் கேட்டதும் வில்வநாதனுக்குச் 'சுரீர்' என்றது. அந்தச் சித்திரத்தைப் பூர்த்தி செய்தால்தான், சென்னையிலிருந்து இங்கே வந்ததன் நோக்கமே பூர்த்தியாகும் என்று வேணு மறுபடியும் அழுத்தமாகக் கூறியதும் வில்வநாதனுக்குத் துயரம் மேலிட்டது. சொன்னான்:

"ஆமாம். அது ஒரு பெரிய குறையாகத்தான் இருக்கிறது. அந்த ஒரு சித்திரத்தை மட்டும் என்னால்—"

"தம்பி! இன்னும் பத்து நாட்கள் பொறுங்கள். ஜமீன் வீட்டிலே கலியாணம் நடக்கப்போகிறது. அந்த இரண்டு நாளும் ஒரு ஈ காக்காய் இல்லாமல் எல்லாரும் சிங்கம்புத்தூர் போய் விடுவார்கள். அந்த முகூர்த்த வேளையில் உங்களைச் செண்பகவனத்துக்குக் கூட்டிக் கொண்டு போகிறோம். சித்திரத்தை முடித்து விட்டு, அம்பாள் சந்நிதியிலே போய் வணக்கமும் செலுத்திவிட்டு விடைபெற்றுக்கொண்டு நீங்கள் இந்த வட்டாரத்திலிருந்து புறப்பட்டு விடலாம்!"

"முடியுமானால் அந்தச் சந்நிதியிலேயே உங்களுடைய திருமணத்தையும்..." என்று கடலையாண்டி குறுக்கே பேச ஆரம்பித்தான். அவனை ஒரு விழிப்பு விழித்துக் கொண்டே வேணுலிங்கம் சொன்னான்:—

"மாப்பிளே! தம்பியை என்னென்னவோ சொல்லிக் குழப்பாதே. இத்தனை சொன்னதே அதிகம்!"

வேணுலிங்கம் இவ்வாறு கூறியதும் கடலையாண்டி ஜாக்கிரதையாக மௌனமாகிவிட்டான். வில்வநாதன்கேட்டான்:

"ஐயா! அந்தச் சித்திரத்தையும் எழுதி முடிக்க வேண்டும் என்கிறீர்களா. ..?"

"ஆமாம். கட்டாயம்! எடுத்த காரியத்தை அரைகுறையாக நிறுத்தலாமா? கூடாது. அதையும் எழுதி முடித்து விட்டு மறு விநாடி நீங்கள் இந்த மாவட்டத்திலிருந்தேபுறப்பட்டுவிட வேண்டும். ஆகையால் குறிப்புப் புத்தகத்திலே தோராயமாக வரைந்து பார்த்துக் கொள்ளுங்கள். எத்தகைய சித்திரம் அந்த இடத்துக்குப் பொருத்தமாக இருக்கும் என்பதை, நன்றாகச் சிந்தித்து முன்னோட்டமாக உங்களுடைய மடலிலே எழுதிப் பாருங்கள்! நீங்கள் வரைகிற கடைசிச் சித்திரம் அல்லவா அது! எல்லாச் சித்திரங்களுக்கும் சிகரமாக இருக்க வேண்டும் அது!" என்று சொன்னான் வேணுலிங்கம்.

"அது சரி. ஆனால் அதை அத்தனை உயர்வாக வரைவதற்கு வேண்டிய மன நிலை உண்டாக வேண்டுமே. அதுதான் ஒரே கவலையாக இருக்கிறது!"

"ஏன் இன்னும் கவலையாக இருக்க வேண்டும் நீங்கள்? உங்களுடைய சந்தேகங்கள் எல்லாம் தீர வேண்டியகாலந்தான் வந்து விட்டதே. இனியும் என்ன சந்தேகங்கள் உங்கள் மனசில் இருக்கின்றன; தாராளமாகக் கேளுங்கள். தயங்காதீர்கள் தம்பி!" என்றான் வேணுலிங்கம்.

வில்வநாதன் தொண்டையை ஒரு தரம் இருமிக் குரலைச் சரிப்படுத்திக் கொண்டு பேச ஆரம்பித்தான்.

"ஐயா, என்னுடைய வரலாற்றை இத்தனை விவரமாக நீங்கள் சொல்லக் கேட்ட பிறகு சில அடிப்படையான சந்தேகங்களை உங்களிடமே கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். ஏனென்றால் அந்தக் கேள்விகள் என் மூளையை இன்னும் குழப்பிக் கொண்டிருக்கின்றன!"

"கேளுங்கள். என்னைப் பற்றி நானே சுயபுராணம் பாடக் கூடாது. அதைத் தவிர வேறு எந்தக் கேள்வியானாலும் கேளுங்கள்!"

"ஐயா! என்னுடைய வாழ்வில் உங்களைப் போலவே மிகுந்த அக்கறையோடு உதவி செய்து வருகிற திவான் பகதூர் செந்தில்நாயகம் அவர்களைப் பற்றி, மேற்கொண்டு தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன். அவர் என்னுடைய தந்தையை நன்றாக அறிந்து வைத்திருக்கிறார் என்று தெரிகிறது. அதன் இரகசியம் என்ன என்று தெரிய வேண்டும்."

"சரி. அடுத்தது?"

"திவான் பகதூருக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம் என்று தெரிந்து கொள்ள வேண்டும்."

"சரி. பிறகு?"

"நான் திடீரென்று காணமற் போய் விட்டதால், சிங்கம்புத்தூர் நிலைமை என்ன ஆயிற்று. இனிமேல் ஜமீந்தார் என் விஷயத்தில் எப்படி நடந்து கொள்வார் என்பதெல்லாம் ஒன்றுமே புரிய

வில்லை. அது பற்றியும் மனத்தில் ஒரு தெளிவு உண்டாக வேண்டும்!''

''சரி. அதுவும் முக்கியமான விஷயந்தான். அடுத்தது?''

''அடுத்தது, அடுத்தது....'' என்று வார்த்தைகளை இழுத்தான் வில்வநாதன்.

''அடுத்தது செண்பகசுந்தரி இப்போது எங்கே இருக்கிறாள்? அவளைச் சந்திப்பது எப்போது என்று தெரிய வேண்டும்; அதுதானே?''

இவ்வாறு இடைமறித்துக் கேட்டான் வேலுலிங்கம்.

''ஆமாம். இத்தனை குழப்பங்களுக்கும் மத்தியில் நான் எப்படி நிம்மதியாக இருக்க முடியும்? நீங்களே சொல்லுங்கள்?'' என்றான் வில்வநாதன், தாபமும் ஏக்கமும் மேலிட்டவனாக!

காட்டுக்குள்ளே இவ்வாறு வில்வநாதன் குழம்பிக் கொண்டிருந்தபோது செண்பகசுந்தரி எந்த நிலைமையில் இருந்தாள்?

தூக்கத்திலிருந்து விழிப்பவள் போல ஏதோ ஒரு மயக்க நிலையிலிருந்து சுந்தரி கண்விழித்த போது, எங்கோ ஒரு புதிய இடத்தில் இருப்பது தெரிந்தது. கண்களைக் கசக்கிக் கொண்டே அவள் பார்த்த போது, தான் ஒரு கட்டிலில் படுத்திருப்பதும், தன்னைச் சுற்றி ஏகாந்தமான அறையின் வெண் சுவர்களில் நிலைக்கண்ணாடிகள் பதித்து நிற்பதும் தெரிந்தது. அப்படியே துணுக்கம் அடைந்தாள்.



''அம்மா!'' என்று கூப்பிட்டுக் கொண்டே கட்டிலில் எழுந்து உட்கார்ந்தாள் செண்பகசுந்தரி.

'அம்மா!' என்ற குரலுக்குப் பதில் இல்லை. பதற்றத்தோடு சுற்றிலும் பார்த்தாள். நிலைக் கண்ணாடிகளில் விழுந்த அவளுடைய நிழல்கள் அவளைப் பார்த்துச் சுற்றிலும் மருண்டன.

அது ஒரு பழங்காலத்து மாளிகை. கிராமாந்தரங்களில் 'கல்லு வீடு' என்று சொல்வார்களே அப்படிப்பட்ட ஒரு வீடு அது! அந்த வீட்டின் அறை ஒன்றிலே அளிக்கதவு நன்றாகத் தாழிடப் பட்டிருக்கிறது. யாரோ வெளியே யிருந்து பூட்டியிருக்கிறார்கள். தன்னைத் தவிர வேறு யாரும் அங்கில்லை. இத்தனை நேரம் தான் நன்றாகத் தூங்கி யிருக்க வேண்டும் என்று தோன்றிற்று செண்பக சுந்தரிக்கு.

''அம்மா! அம்மா!'' என்று மறுபடியும் கூப்பிட்டாள் சுந்தரி.

அளிக்கதவை யாரோ திறக்கும் சத்தம் கேட்டது. குழப்பமும் பதற்றமும் மேலிட்டவளாக, வாசலையே பார்த்தாள் சுந்தரி. சுமார் அறுபது வயதிருக்கும், ஒரு கிழவர் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தார். வயதானாலும், கட்டுத்தளராத உறுதியான மனிதராகத் தோன்றினார் அவர்.

''ஐயா! நான் எங்கே இருக்கிறேன். அம்மாவை எங்கே காணோம்?'' என்று திகைப்போடு கேட்டுக் கொண்டே கண்களை மூடி மூடி விழித்தாள் சுந்தரி.

''பதறாதே அம்மா. நீ எங்கே இருக்கிறாய் என்று தெரியவில்லையா உனக்கு. வல்லாள வேலரின் கல் மாளிகைகளில் ஒன்றில் சௌக்கியமாக இருக்கிறாய்?''

இவ்வாறு சொல்லிச் சிரித்தார் அந்தக் கிழவர்.

''வல்லாள வேலரா? அவருடைய மாளிகைக்கு நான் எப்படி வந்தேன்? என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்?'' என்று கேட்கும்போதே சுந்தரிக்கு உடம்பெல்லாம் பதறியது.

''அம்மாப் பெண்ணே! நீ வல்லாள வேலரின் மாளிகையில் இல்லை. அவருடைய மாளிகை முருகபாண்டி புரத்தில் அல்லவா இருக்கிறது! நீ அங்கே இல்லை. இது அவருக்குச் சொந்தமான இன்னொரு ஊரின் இன்னொரு மாளிகை!''

''இன்னொரு ஊரா?''

''ஆமாம். இன்னொரு ஊர்?''

''எந்த ஊர் ஐயா இது? நான் எங்கே இருக்கிறேன்! ஏன் என்னை இப்படிக் குழப்புகிறீர்கள்?''

''பெண்ணே! ஆணின் பேரைச் சொன்னாலும் ஊரின் பேரைச் சொல்லக்கூடாது. தெரிந்ததா? ஏன் குழம்புகிறாய்? எதற்காகக் குழம்ப வேண்டும் நீ? வல்லாள வேலருடைய சீமையின் எல்லைக்குள்ளே இருக்கும் போது குழப்பம் என்னத்துக்கு? குழப்பத்தை யெல்லாம் தீர்த்து வைக்கிற வள்ளல் ஆயிற்றே அவர்!''

''ஐயா! உங்களுக்குக் கோடிப் புண்ணியம் உண்டு. என்னை ஏன் இப்படி ஒரு அறையிலே பூட்டி வைத்தீர்கள்! நான் எப்படி இவ்வளவு நேரம் இங்கே தூங்கினேன்? வீட்டிலே இரவு படுத்திருந்தவள் இங்கே எப்படி வந்தேன். ஐயோ! இதென்ன மோசடி! அம்மா எங்கே? வில்வநாதன் எங்கே? ஐயோ, அவரை நேற்றுச் சாயந்திரம் பார்த்தேனே? இன்று என்ன ஆயிற்று? ஐயா இப்பொழுது என்ன மணி? இது காலை நேரமா? அல்லது மாலை நேரமா? ஐயா, நான் கேட்டுக்கொண்டே இருக்கிறேன். நீங்கள் பதிலே பேசாமல் ஏன் இப்படி மௌனமாக இருக்கிறீர்கள்?''

குழப்பமும் வேதனையும் துன்புறுத்துகிற நிலையிலே இவ்வாறு சுந்தரி மன்றாடியதும், அந்தக் கிழவர் சிரித்தார்! விபரீதமும் பரிகாசமும் அடங்கிய அந்தச் சிரிப்பைக் கண்டதும் சுந்தரிக்குக் கோபம் வந்தது.

''ஐயா, ஏன் சிரிக்கிறீர்கள்? ஏன் இப்படி நய



வஞ்சகமாகச் சிரிக்கிறீர்கள்? ஒரு பெண் தன்னந் தனியாகப் புலம்புவதைக் கண்டு சிரிக்கிற ஆண் பிள்ளை, நீங்கள் யார்? இத்தனை வயதாகியும் பண்பாடு இல்லாத நிலையில் வளர்ந்திருக்கிறீர்களே! வல்லாளவேலருடைய கூட்டாளியா நீங்கள்? ஐயோ, தெய்வமே! நீ என்னை வஞ்சித்து விட்டாயா!''

இப்படிக் கேட்டுக் கொண்டே 'ஓ' என்று அலறினாள் செண்பகசுந்தரி. அந்தக் கல் மாளிகையிலே அவளுடைய ஓலம் எதிரொலித்தது. அந்த ஓலத்தைக் கேட்டு அங்கே வருவதற்கு அந்தப் பெரிய மாளிகையிலே வேறு யாரும் இல்லை.

''அம்மா! அம்மா! நீ எங்கே இருக்கிறாய்? ஐயோ, நீயும் சேர்ந்து என்னைப் பழி தீர்த்துக் கொண்டாயா? நேற்றெல்லாம் அந்த வல்லாள வேலரோடு இரகசியம் இரகசியமாகப் பேசிக் கொண்டிருந்தாயே! ஐயோ, அதெல்லாம் இந்த வஞ்சகக் காரியத்தைப் பற்றித்தானா? ஐயா பெரியவரே, உங்களைக் கையெடுத்துக் கும்பிடுகிறேன். என்னைக் குழப்பாதீர்கள். தயவுசெய்து உங்களுடைய நோக்கம் என்ன வென்று எனக்குச் சொல்லி விடுங்கள். சூழ்ச்சி செய்து என்னை எதற்காக இங்கே கொண்டு வந்து பூட்டி வைத்திருக்கிறீர்கள்? ஐயா பெரியவரே, என்னைப் பெற்ற அன்னைக்கே தகப்பனாக இருக்கக்கூடிய வயது உங்களுக்கு! நீங்களும் இப்படிப் பட்ட ஒரு வஞ்சகத்தில் உடன்பட்டீர்களா? உங்களைக்கூட வல்லாளவேலரின் பணம் விலைக்கு வாங்கி விட்டதா? அட உலகமே, இத்தனை நீசத்தனமான சமூகமா இது? இன்னும் சிரிக்கிறீர்களா நீங்கள்? பெரியவரே, ஏன் இப்படி விபரீதமாகச் சிரிக்கிறீர்கள்? ஏதோ ஒரு பெரிய வெற்றியை எண்ணிச் சிரிப்பது போல அல்லவா சிரிக்கிறீர்கள்? வேண்டாம். சிரிப்பை நிறுத்துங்கள். பெண் பாவம் பொல்லாதது. என்னை வஞ்சியாதீர்கள். இந்த இதயம் எத்தனவே இன்னொருவருக்குச் சொந்தமாகி விட்ட இதயம். இந்த உடல், இதன் பொருள், இதிலுள்ள ஆவி எல்லாம் வில்வநாதனுக்குச் சொந்தமானவை! ஐயா, பெரியவரே, தர்மத்தோடு வாழ விரும்புகிறேன். அறத்துக்குக் கட்டுப்பட்டுப் புண்ணிய வாழ்வு வாழ வேண்டும் என்று துடிக்கிறேன். அந்த எண்ணத்துக்கு ஊறு செய்யாதீர்கள். என்னை விட்டு விடுங்கள். எனக்கு விடுதலை கொடுங்கள். நான் இப்படியே வெளியே ஓடி விடுகிறேன்''

''ஓடவா! இத்தனை அழகும், இவ்வளவு உல்லாசமும் நிரம்பிய ஒரு கன்னி தன்னந்தனியாக ஓடினால் என்ன ஆகும்?''

''ஐயா! அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். புனிதமாக வாழ நினைத்தேன். அது முடியவில்லையென்றால், புனிதமாகவே மடிந்து விடுகிறேன். அதற்காவது வழி விடுங்கள்! உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்...!''

இப்படிச் சொல்லி அந்தக் கல் மாளிகையின் கல்லும் உருகும்படி கதறினாள் செண்பகசுந்தரி. அவள் அந்தனை கதறியும், மாளிகையின் கல் உருகிற்றோ தவிர, எதிரே நின்ற அந்த மனிதக் கல் அசையவில்லை! அவளைப் பார்த்துப் பேச ஆரம்பித்தது அந்தக் கல் மனம் சிரித்துக் கொண்டே!

''பெண்ணே, உன்னைப் பூட்டி வைக்க எனக்கு அதிகாரம் உண்டே தவிர, பூட்டைத் திறக்கும் அதிகாரம் எனக்கு இல்லை. இன்னும் சற்று நேரத்தில் வல்லாள வேலர் இங்கே வருவார். பிறகு அவர் இஷ்டம் எல்லாம்!''

''வல்லாள வேலரா? அவர் இங்கே வருவாரா! வரட்டும், மடிந்து போன இந்த உடலைப் பார்க்க வரட்டும்!''

இவ்வாறு சொல்லி முகத்தை இரண்டு கைகளாலும் பொத்திக் கொண்டு உள்ளம் எல்லாம் குலுங்கும் படியாகக் கதறினாள் செண்பகசுந்தரி.

''பெண்ணே, ஏன் அழுகிறாய்? அழுது பயனில்லை. தாய் சொல்லைக் கேளாத பெண்களின் கதி என்ன என்று இப்பொழுது தெரிகிறதா? நன்றாகத் தெரிந்து கொள். தெரிந்து கொண்டு மௌனமாக இரு. அல்லது இன்னும் கொஞ்சம் தூங்க வேண்டும் என்றால் சொல். மருந்து தருகிறேன்!''

''மருந்து தூக்கத்துக்கா! கொடுங்கள்! மீண்டும் விழிப்பு வராத தூக்கத்துக்கு மருந்து இருந்தால் கொடுங்கள். சாப்பிட்டு விட்டுத் நிம்மதியாகத் தூங்கி விடுகிறேன். உங்களுக்குப் புண்ணியம் உண்டு!''

''புண்ணியமா? ஒரு உயிரைக் கொன்ற பாவம் அல்லவா எனக்கு வரும்? அந்தக் கொடிய பாவம் எதற்கு எனக்கு!''

''இல்லை! புண்ணியந்தான் கிடைக்கும். ஒரு உயிரைக் கொன்ற பாவம் இல்லை, ஒரு உயிரைக் காப்பாற்றிய புண்ணியம் உங்களுக்கு உண்டு. தயவு செய்து அந்த விஷ மருந்தைக் கொடுங்கள். கொடுத்து என்னைக் காப்பாற்றுங்கள். உங்களுக்கு ஆயிரம் கோடி வணக்கம் சொல்லுகிறேன். ஐயா, பெரியவரே, பெரியவரே — ''

வெளியே ஏதோ ஓசை கேட்கவே அந்தக் கிழவர், அறையின் அளிக்கதவை வெளியே மிருந்தவாறு தாழ் போட்டுக் கொண்டே கூடத்துக்குச் சென்றார். ஏகாந்தமான அந்த மாளிகையில் மனித நடமாட்டமே இல்லாத காரணத்தால், அந்தப் பயங்கரமான பெரிய அறைகளிலே தாள் போட்ட ஓசையுங் கூடப் பலமாக எதிரொலி செய்தது! கூடத்துக்கு வந்த கிழவர்,— வெளியே கார் வந்து நின்ற ஓசை கேட்

டதும் திகைப்பு அடைந்தார்.. வல்லாள வேலரின் வில் வண்டியை எதிர்பார்த்த கிழவர், கார் வந்து நின்றதைக் கண்டதும் சற்றுப் பதறியவராகவே அறையின் மறைவில் நின்று கொண்டு, ஜன்னலின் வழியாக வெளியே பார்த்தார்! ஜரிகைத் தலைப்பாகையும் நீண்ட அங்கியுமாகக் காரிலிருந்து திவான்பகதூர் செந்தில் நாயகம் இறங்கி வருவதைக் கண்டதும் கிழவருக்கு உடம்பெல்லாம் பதற்றம் கொடுத்தது! அத்தனை பதற்றத்துக்கும் மத்தியில், விறுவிறு என்று உள்ளே ஓடிப் பதுங்கிப் போய், சுந்தரி யிருந்த அறைக்கு அடுத்த பெரிய அறையின் மரக் கதவைச் சாத்தினார். அந்தக் கதவிலே தொங்கிக் கொண்டிருந்த பூட்டை எடுத்து, நாதாங்கியைப் போட்டுச் செருகி அதிலே பூட்டைக் கொடுத்துத் திருகி, ஒரு விநாடியில் நன்றாகப் பூட்டி விட்டார். இதற்குள் வெளி வாசற் கதவைத் திறக்கும் சத்தம் வந்தது.

''வல்லாள வேலரையா இருக்கிறார்களா?'' என்று குரல் கேட்டது, வெளியே யிருந்து! திவான்பகதூரின் நிதானமான குரல் அது!

இதற்குள் கிழவர் கூடத்தின் பெரிய நிலைக் கதவையும் சாத்தி முடித்து விட்டார். சுந்தரி உள் அறையில் இருந்துகொண்டு எத்தனை கதறினாலும் வெளியே கேளாது என்பதை உறுதிப் படுத்திக் கொண்டு, வாசலுக்கு வந்து, கம்பிகள் வழியாகப் பார்த்தார் கிழவர்.

''யாரு வைத்தியரய்யாவா? பலே பலே! வல்லாள வேலரய்யா இருக்கிறார்களா?'' என்று கேட்டுக் கொண்டே வாசற்படிகளில் ஏறினார் திவான்பகதூர்.

வக்கீலுக்கு ஒரு பெரிய கும்பிடு போட்டுக் கொண்டே, கிழவர் முகம் முழுதும் சிரித்தவராகக் கதவைத் திறக்காமலேயே உள்ளே யிருந்தவாறு பதில் சொன்னார்.

''அவுக வரலியே இங்கே. இந்தக் கல்லு வீட்டுக்கு அவுக வந்து வாரக் கணக்கா ஆகுது. கலியாண வேலையில்லே! சிங்கம்புத்தூரும் ஏலமலையும் ரெண்டு வேலையுமாச் சேந்து பாக்காக!''

''ஓ! கலியாண வேலையா! ஆமா, ஆமா! கலியாண மாப்பிளே மாதிரி உக்கார முடியுமா! நிர்வாகம் பாக்கிறது எப்பவுமே கடுமையான வேலைதான்!''

''இல்லியா பின்னே'' என்று வாசற் கதவைத் திறக்காமலேயே உள்ளிருந்த வாறே கதவுக் கம்பி வழியாகவே மேலும் பதில் சொன்னார் வைத்தியர்!

''என்ன வைத்தியரய்யா, வல்லாள வேலர் இருந்தாத்தான் நான் வீட்டுக்குள்ளே நுழையலாமா! வைத்தியரய்யாவோடு இருந்து நாலு வார்த்தை பேசக் கூடாதா! நல்ல சில்லுக் கருப்பட்டி வச்சிருப்பீகளே! இந்த வெய்யிலிலே வந்த களைப்புக்கு நாலு சில்லுக் கருப்பட்டியை வாயிலே போட்டு, ஒரு தம்ளர் தண்ணீரையும் உள்ளே விட்டோமானால், காருக்குப் பெட்ரோல் போட்ட மாதிரி! என்ன வைத்தியரய்யா, என்ன சொல்லுறீக?'' என்று கேட்டார் திவான்பகதூர்.

''ஆமா. அது உண்மைதான்!'' என்று சொல்லியவாறு கதவுக்கு அப்பாலிருந்தே சிரித்தார், இல்லை, சிரிக்க முயன்றார் வைத்தியக் கிழவர்.

''ஆமான்னு சொல்லுறீக வைத்தியரய்யா! ஆனால் கதவைத் திறக்க மாட்டேங்கிறீகளே! இது எந்த ஊர் உபசாரமையா!'' என்று கேட்டார் வக்கீல்.

மறுபேச்சுக்கு இடமில்லாமல் கதவைத் திறந்தார் கிழவர். கைத்தடியைத் தரையிலே 'டக் டக்' என்று ஊன்றிக் கொண்டே வெளித் தாழ்வாரத்திலே நுழைந்தார் திவான்பகதூர்.

''பலே! பலே! கல்லு வீடு என்றால் கல்லு வீடுதான்! என்ன குளிர்ச்சி! என்ன குளிர்ச்சி! இந்த வீட்டுக்குள்ளே வருகிறதுக்குக் கொடுத்து வச்சிருக்கணும்! என்ன காற்று, என்ன காற்று! அடாடா, அதிலேயும் இந்த வீட்டுக் கூடம் உண்டே, அதனுடைய அழகும் அந்தச் சோபாக்களினுடைய நேர்த்தியும், மேல் மாடங்களுடைய அமைப்பும், என்ன வைத்தியரய்யா இந்தக் கல் வீடு யார் கட்டியது தெரியுமில்லே உங்களுக்கு?'' என்றார் திவான்பகதூர்.

''தெரியாதே'' என்று அந்த ஒரு வார்த்தையை ஒவ்வொரு எழுத்தாகப் பதற்றத்தோடு உச்சரித்தார் வைத்தியர்.

''அந்தக் காலத்திலே ஏலமலை ஜமீந்தார், அதாவது நம்முடைய பொன்னுத்துரையின் பாட்டனார், கட்டின வீடு இது! இதுக்காகப் பாபநாசத்து மலையிலேயிருந்து பாளம் பாளமாகக் கல் வந்தது! இந்தக் கூடத்துக்கு அடுத்தாற் போலே உள் அறை ஒன்று உண்டே, அதை ஒரு காலத்தில் எப்படி வைத்திருந்தார்கள், தெரியுமா? இப்படிப் பூட்டியா வைத்திருந்தார்கள்! அடாடா! அந்த அறையில், நாலு பக்கமும் பதிக்கிறதுக்காக நிலைக் கண்ணாடி எந்த ஊரிலே யிருந்து வந்தது தெரியுமா உங்களுக்கு?'' என்று திவான்பகதூர் கேட்ட போது, வைத்தியருக்கு நாக்கு எழவில்லை. உடம்பெல்லாம் வியர்வை கொட்டியது. அப்போது திவான் பகதூர் பக்குவமாக ஒரு கிறுவை உதிர்த்தார்:

சொற்கொண்டு வர்ணிக்கச்
சொல்லேது ? சுந்தரஞ்சேர்
கற்கொண்ட மாளிகையைக்
கண்டு !

(தொடரும்)



# பத்தினிக் கோட்டம்

## கதையின் கால வருணனை

பொன்னொளிர் மேனியாய் விளங்கிய தமிழகத்தைத் தன்னகரற்ற மூவேந்தர் ஆண்ட காலம் ஒன்று உண்டு. அந்தப் பொற் காலத் தமிழகம் ஊழின் பெரு வலியால் தடம் புரண்டு தாழ்ந்து இருண்ட காலம் ஒன்றைக் கண்டதும் உண்டு. களப்பிரர் என்னும் ஓர் அந்நிய இனத்தார் தமிழக அரசியலைக் கைப் பற்றி, கி. பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் ஆறாம் நூற்றாண்டு வரையில் ஆண்ட காலமே அந்த இருண்ட காலம் என்பதாம்.

ஆனால், தமிழகம் செய்த நற்பேறாக, அதே காலத் தொடக்கத்தில் தமிழ் நாட்டின் வட மண்டலத்திலே ஒரு புதிய விண்மீன் தோன்றித் தன் ஒளிச் சுடரைச் சிறுகச் சிறுகப் பரப்பத் துவங்கியது. பப்பதேவன் வழி வந்த பல்லவ மன்னனான சிவஸ்கந்த வர்மனே அவ் விண்மீன் ஆவான். காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு கோலோச்சிய அவனும் அவனது வழித் தோன்றல்களும், காடு வெட்டி நாடாக்கி, கழனி திருத்தி வளமை கண்டு, தம் ஆட்சியின் எல்லையை மெல்ல மெல்ல விரிவாக்கி வந்தனர். இப்படி உறுதியின் அடிப்படையில் வளரத் தொடங்கிய இந்தப் பல்லவ நாடு, முந்நூறு ஆண்டுகளுக்குப் பின் — கி. பி. ஆறாம் நூற்றாண்டு — சிம்மவிஷ்ணு என்பானின் தலைமையில், வடக்கே கிருஷ்ணையாறு முதல் தெற்கே புதுக்கோட்டை வரையில் ஒரு பெரிய சாம்ராஜ்யமாக உருவெடுத்து மலர்ந்தது.

அதே சமயம், களப்பிரரின் இருளாட்சியை எதிர்த்து நிற்க மாட்டாமல் அடங்கி ஒடுங்கிக் கிடந்த பழைய பாராண்ட பாண்டியர், பல்லவரின் பேராட்சி ஒளி கண்டு வீறு பெற்று எழுந்தனர். அவர்களில் கடுங்கோன் என்பான், தென்னகத்தில் வீழ்ந்துபட்ட பாண்டியப் பேரரசைத் தன் வலிமை கொண்டு தூக்கி நிறுத்தினான்.

இப்படி, வடக்குத் தமிழகத்திலும் தெற்குத் தமிழகத்திலும் இரு பேரரசுகள் தலை தூக்கி விடவே, இடையில் கிடந்து நசுங்குண்ட களப்பிரர், கதிரவன் ஒளி பட்ட காரிருள்போல் தாமாகவே மறைந்தொழிந்தனர்.

தென்புலத்தின் நிலை இவ்வாறிருக்க, வடபுலத்திலும் இது போன்ற இரு பேரரசுகள் எழுந்து நின்றன. இமயமலை முதல் நருமதையாறு வரை கொண்ட ஹர்ஷப் பேரரசு ஒன்று; நருமதையாறு முதல் கிருஷ்ணையாறுவரை கொண்ட சளுக்கியப் பேரரசு பிறிதொன்று. கதம்ப நாட்டுக்கு வடக்கே ஒரு சிறு பகுதிக்குச் சிற்றரசராக இருந்து, பிறகு மெல்ல மெல்லப் பேரரசு காணும் நிலைக்கு உயர்ந்தவர்கள் இந்தச் சளுக்கியர்.

சிம்மவிஷ்ணுவுக்குப் பின் அவனுடைய மைந்தனான முதலாம் மகேந்திர வர்மன் பல்லவப் பேரரசின் மன்னன் ஆனான். ஏறத்தாழ இதே காலத்தில் ஹர்ஷ சாம்ராஜ்யத்தின் மாமன்னனு



ஹர்ஷ வர்த்தனனும், சளுக்கிய சாம்ராஜ்யத்தின் பெருவேந்தனாக இரண்டாம் புலிகேசியும் கோலோச்சி வந்தனர்.

ஹர்ஷ வர்த்தனன் தன் சாம்ராஜ்யத்தை மேலும் விரிவுபடுத்த ஆசை கொண்டு சளுக்கிய நாட்டின்மேல் படையெடுத்தான். ஆனால் சளுக்கிய மன்னன் புலிகேசி அவனை நருமதைக் கரையிலேயே தடுத்து நிறுத்திப் போரிட்டுப் புறங்காணச் செய்து விட்டான். ஹர்ஷன் புறங்காட்டிவிடவே, வெற்றிப் போதையேறிய புலிகேசி தன் உறவினனான கங்க மன்னன் துர்விநீதனைத் துணைக்கு அழைத்துக்கொண்டு தெற்கிலும் திரும்பிப் பல்லவ நாட்டின்மேல் பாய்ந்தான். புள்ளலூர் என்னுமிடத்தில் புலிகேசிக்கும் மகேந்திரவர்மனுக்கும் போர் மூண்டது. அந்தப் போரில் மகேந்திரவர்மனே வெற்றி பெற்றான் என்றாலும், பல்லவ நாட்டின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த ஆந்திர நாட்டைப் பறிகொடுத்து விட்டான். சிம்ம விஷ்ணுவின் காலத்தில் கிருஷ்ணையாறுவரை பரந்திருந்த பல்லவ சாம்ராஜ்யம், மகேந்திர வர்மன் காலத்தில் வடபெண்ணை யாற்றுக்குக் குறுகி வந்து விட்டது.

ஆயினும் இதனால் பல்லவநாடு வலிகுன்றி விடவில்லை. வேறு வகைகளில் அது தன் புகழை நிலைநாட்டத் தொடங்கியது. ஆம்; தமிழகத்தில் மற்றுமொரு பொற்காலத்தை உருவாக்குவதிலே முழுமூச்சுடன் முனைந்தான் மாமன்னன் மகேந்திரவர்மன்.

களப்பிரரின் காட்டாட்சியால் மங்கி மறைந்து கிடந்த ஆடல் பாடல் ஓவியம் சிற்பம் முதலான உயர்நுண் கலைகளெல்லாம் புத்துயிர் பெற்றுப் புதுப்பொலிவுடன் வளர ஆரம்பித்தன. தமிழகக் கட்டடக் கலைக்கு முற்றிலும் புதிதான குகைக் கோயில்களை ஆங்காங்கே நிர்மாணித்துத் தமிழகத்தை வளப்பாக்கினான் மகேந்திரவர்மன்.

ஆதிகால முதலே தமிழக மக்கள் தெய்வ நம்பிக்கையில் ஊறி வளர்ந்து வருபவர்கள். சமய உணர்வும் பக்தி வழிபாடும் அவர்களது நெஞ்சத்திலே நினைவும் நசையுமாகப் பின்னிப் பிணைந்திருப்பவை. இதனை வெகு நுட்பமாக உணர்த்தும்பொருட்டே, தமிழகத்தின் எல்லையைக் கூற வந்த பழம்புலவர் பனம்பாரனார், 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' என்று, வேங்கடப் பெருமானை முன்மொழிந்து பாடினார். இப்படியிருந்த தமிழ் மக்களிடையே வடக்கிருந்து வந்து நுழைந்த சில புதிய மதங்கள் சூன்ய வாதம் பேசி அவர்களை மருளில் ஆழ்த்தின. இதனால், தமிழர்களின் தாய்ச் சமயமான சைவ சமயம் அப்போது தாழ்வுற்றுக் கிடந்தது. இந்நிலையில், சமணனாயிருந்து பின் சைவனாக மாறிய மகேந்திரவர்மன், நலிந்து கிடந்த அன்புச் சமயமாம் சைவத்தை அதன் பழைய நிலைக்குக் கொண்டு வர அரும்பாடு பட்டுப் பெருவெற்றி கண்டான். அவன் காலத்தில் தோன்றிய ஞானமா மலையான அப்பரடிகள் என்னும் திருநாவுக்கரசர் தேனூறும் தமிழால் தேவார மிசைத்துச் சைவ சமயத்துக்கு ஒரு புதிய உத்வேகத்தை ஊட்டினார். இதனால். இதற்கு முன் கண்டிராத அளவுக்குச் சைவம் தழைத்து வளர்ந்தது. அதன் மறு பிரிவான வைணவமும் வீறு பெற்றுச் சிறந்தோங்கியது.

இப்படித் தமிழகத்தின் பழம் பெருமைகள் அனைத்தையும் மீட்டுக் கொண்டு வந்து நிலை நாட்டிய மாதவச் செல்வன் மகேந்திர வர்மன் மறைந்தான். அவனுக்குப் பின் அவனுடைய மைந்தனான முதலாம் நரசிம்ம வர்மன் என்னும் மாமல்லன் பல்லவ அரசு கட்டில் ஏறினான். அதுவரை அடங்கிக் கிடந்த சளுக்கியப் புலிகேசி தருக்கி எழுந்து பல்லவ நாட்டின்மேல் தண்டெடுத்து வந்தான். போர்த் தந்திரக் கலையில் வல்லவனான நரசிம்மன், காஞ்சியைப் புலிகேசி நெருங்கும்வரை வாளாவிருந்து விட்டுத் திடீரெனத் தன் படை கொண்டு அவனைத் தாக்கினான். பரியலம், மணிமங்கலம், சூரமாரம் முதலான இடங்களில்

# ஜெகசிற்பியன்



புலிகேசிக்கும் நரசிம்மவர்மனுக்கும் பெரும் போர் நடந்தது. இறுதியில் புலிகேசி புறமுதுகிட்டுத் தன் நாட்டுக்கே திரும்பி ஓடிவிட்டான். ஆயினும் அவனை விடாது துரத்திக்கொண்டு போன நரசிம்மன் சளுக்கியக் கோநகரான வாதாபியை எரித்துச் சாம்பராக்கிய பின்னரே தன் சினம் தணிந்து திரும்பினான். அவன் பெற்ற அந்த மகத்தான வெற்றிக்குப் பெரிதும் காரண கர்த்தராய் இருந்தவர், அவனது படைத்தலைவரான பரஞ்சோதி என்பவரே ஆவார். இந்தத் தளகர்த்தர் பரஞ்சோதியே பின்னால் சிறுத்தொண்ட நாயனாராகிச் சிவத்தொண்டு புரிந்து அறுபான் மூவரில் ஒருவரானார்.

மாமல்லன் நரசிம்மன் போர்க்கலையில் மட்டுமின்றி ஆட்சிக் கலையிலும் வல்லவனாக விளங்கினான். தன் தந்தையைப் போலவே அறப் பணிகள், கலைப் பணிகள், சமயப் பணிகள் ஆகிய அனைத்தையும் பாங்குறப் பேணி ஆற்றினான். சிற்பக் கலையிலும் சேதியக் கலையிலும் புதுப்புது உத்திகளைப் புகுத்தி, தன் பெயர் கொண்ட மாமல்லபுரத்தில், தரணி உள்ளவரை புகழ் சேர்க்கும் கற்கோயில்கள் பலவற்றை எடுப்பித்து அதை ஒரு கலைக்களஞ்சிய நகராகவே ஆக்கினான். அவன் காலத்தில்தான், அப்பரடிகள் விட்டுச் சென்ற அன்புச் சமயப் பணியைத் தொடர்ந்து ஆற்ற அவதரித்தார், ஞானப் பாலுண்ட திருஞான சம்பந்தர். அவரது அருஞ்சுவைக் கனியமுதப் பாக்களால் தமிழும் சைவமும் தன்னிகரற்று ஓங்கிச் சிறந்தன. பக்திப் புனல் பெருக்கெடுத்துப் பாய ஆரம்பித்தது. அந்தப் புனலில் சமணமும் பௌத்தமும் மெல்ல மெல்ல ஆழ்ந்து மூழ்கத் தொடங்கின.

இத்தகைய அருளாட்சியைக் கண்ட மாமல்லன் மறையவே, அவனுடைய மைந்தனான இரண்டாம் மகேந்திரவர்மன் பல்லவ அரியணையில் ஏறினான். ஆனால் அவன் இரண்டே ஆண்டுகளில் தன் ஆட்சியை முடித்துக்கொண்டு இறைவனடி சேர்ந்தான்.

கி. பி. 670-ல் ஒரு புதிய திருப்பம். கண் கலங்கத் தக்க அவலத் திருப்பம் அது.

ஆம்; இரண்டாம் மகேந்திரவர்மன் காலமானதும், அவனது அருமைச் செல்வனான முதலாம் பரமேசுவரவர்மன், பார்புகழ் கொண்ட பல்லவப் பேரரசின் பார்த்திபனானான்.

நரசிம்ம வர்மனால் தகர்த்தெறியப்பட்ட புலிகேசி அதே கவலையில் இறந்து படவே, அவனுடைய மைந்தனான முதலாம் விக்கிரமாதித்த வல்லபன், சளுக்கிய மணிமுடியை ஏற்று, நலிவடைந்துபோன தன் நாட்டைப் பெரும்பாடுபட்டுத் திருத்திப் பழைய வலிமையில் வைத்துக் கொண்டு, பல்லவ நாட்டைப் பழிவாங்கும் வல்நெஞ்சத்தோடு காத்திருந்தான்.

பரமேசுவரவர்மன் அரியணையேறியதும், இதுதான் தருணமென்று துணிந்த சளுக்கிய விக்கிரமாதித்தன், கடல்போல் திரட்டி வைத்திருந்த பெரும் படைகளுடன் வந்து காஞ்சியை முற்றுகையிட்டு, அதன் கடக்க வொண்ணா அகழிகளையும் மதில்களையும் கடந்து, வல்லமை வாய்ந்த பல்லவக் கோட்டையைக் கைப்பற்றி விட்டான்.

எதிர்பாராமல் தாக்குண்ட இப்பேரதிர்ச்சியால் திக்கித் திணறிய பரமேசுவரவர்மன் எதிரிகளிடமிருந்து தப்பித் தலைமறைவானான்.

இங்கிருந்துதான் இந்தப் 'பத்தினிக் கோட்டம்' உருவாகிறது!...

## முதல் பாகம் — மறக்களம்

### அத்தியாயம் ஒன்று

# இடம் மாறியது ஏன்?

சாடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டங்கள் நிறைந்த பல்லவப் பெருநாட்டின் சோழ மண்டலக் கோநகரான பல்லவபுரத்துக்கு வடமேற்கே, காஞ்சியிலிருந்து உறையூர் செல்லும் நெடுஞ்சாலையொன்றில், நாற்புறமும் வராகச் சின்னங்களுடன் கூடிய நூலாக்கலிங்கத் திரைகளால் மூடப் பெற்றிருந்த ஓர் அழகிய சிவிகை வெகு வேகமாக வந்துகொண்டிருந்தது.

திருவாசி வடிவிலே முன்னும் பின்னுமாக வளைந்திருந்த அந்தச் சிவிகையின் நுகங்களைத் திண்டோள் வீரர்களாய் விளங்கிய அறுவர் விறல் உற்சாகத்தோடு சுமந்து, 'திம், திம்'மென விரைந்து கொண்டிருந்தனர். அவர்களின் அந்த ஓட்ட நடைக்கேற்ப, காலில் அணிந்திருந்த இரும்புத் தண்டைக் காப்புகளும், கையில் பற்றியிருந்த ஈட்டிகளின் வளையங்களும் 'ஜல், ஜல்' லென்ற ஒலியை எழுப்பின.

கோமளச் சூரியன் குட திசையில் சாயும் நேரம். மரஞ்செடி கொடிகளெல்லாம் மஞ்சள் குளித்துச் சீதளத் தென்றலில் சிகை உலர்த்தத் தொடங்கும் சமயம்.

அந்த இனிய மாலைப் போதின் பொன்னொளிப் பூச்சிலே பளபளத்து, மென்னிளங் காற்றிலே படபடத்த சிவிகையின் பட்டுத்திரையை, உள்

பாங்கில் பணமிருக்கிறது - அதற்கு இணை வேறென்ன இருக்கிறது!

அதன் குட்டி எஜமானருக்கு தி பாங்க் ஆப் இந்தியா லிமிடெடில் ஒரு ஸேவிங்ஸ் பாங்குக் கணக்கு இருக்கிறது. குடும்பத்தில் ஒவ்வொருவரின் பெயரிலும் கணக்கு இருக்கிறது. நாய்க்குட்டியும் தன்பெயரில் கணக்கு வேண்டுமென்கிறதோ? சேமிப்புப் பழக்கத்தை வளர்ப்பது ஒரு நல்ல யோசனைதான்!

**விசேஷ வசதி**

நீங்கள் ஆண்டு ஒன்றுக்கு 100 செக்குகள் வரை எழுதி, ஏற்ற சமயத்தில் எவ்வளவு தொகை வேண்டுமானாலும் முன்னறிவிப்பு இன்றி வாங்கிக்கொள்ளலாம். தவிர உங்கள் சேமிப்பிற்கு ஆண்டு ஒன்றுக்கு 3% தொடர்வட்டி கிடைக்கும்.

**தி பாங்க் ஆப் இந்தியா லிமிடெட்**

T. D. கன்ஸாரா, ஜெனரல் மானேஜர்

# குலைப்பதிலும் ஏதோ விசேஷம் இருக்கிறது



IB/C/96/TM

ளிருந்து நீண்ட ஓர் அழகிய பூங்கரம் மெல்ல விலக்கிப் பிடித்தது. வாளிப்பான பசுந்தண்டில் வனப்புடன் இதழ் விரித்து நிற்கும் செவ்வல்லி மலர்போல் விளங்கிய அந்தக் கரத்தின் மேலே, மொய்த்துப் பறக்கும் கருவண்டுகளென இரு கண்கள் சுழன்று வெளியே நோக்கின. அவ்வழகிய கண்கள் சென்ற திசையிலே —

விரிந்து பரந்த விளைநிலங்களெல்லாம் வறண்டு வெடித்துக் காணப்பட்டன. தோட்டம் துரவுகளெல்லாம் தீய்ந்து காய்ந்து தோற்றமளித்தன; கனி தரும் மரங்களெல்லாம் மொட்டைமொட்டையாகப் பட்டையுரிந்து கருகிக் காட்சியளித்தன; மலர் தரும் வனங்களெல்லாம் வாடித் துவண்டு வதங்கிக் கிடந்தன. காடு கழனிகளின் புள்ளடிக்கல், நாகுலக்கல், திருவாழிக்கல் முதலான எல்லைக் கற்களெல்லாம் தாறுமாறாய்ப் பிடுங்கி எறியப்பட்டு விட்டிருந்தன. அவற்றுக்கப் பால் சீர்குலைந்த ஏரிக்கரைகள், சிதிலமான மதகுகள், சேறு குழம்பிய குளங்கள், தூர்ந்து மேடான கூவல்கள்! இவற்றையொட்டி அமைந்திருந்த சில சிற்றூர்களும் பேரூர்களும் தீக்கிரையாகிய கோலத்தில் பாழ்த்துக் காணப்பட்டன. அவற்றில் குடி வாழ்ந்த மக்கள், இருக்க இடமின்றிப் பசியும் பிணியுமாக மரத்தடிகளிலும் பாதையோரங்களிலும் இடிபாடுற்ற கோயில் மண்டபங்களிலும் படுத்துக் கிடந்தனர். மற்றும் சிலர் தட்டுமுட்டுப் பொருள்களோடு ஆடு மாடுகளையும், குமலி, கர்த்தபங்களையும் ஓட்டிக் கொண்டு



வேற்றூர்களை நோக்கிச் சாரி சாரியாகப் போய்க்கொண்டிருந்தனர். குண்டுங் குழியுமாகப் பறிந்து சீர்கேடுற்றுக் காணப்பட்ட அந்த நெடுஞ்சாலையின் இரு மருங்கிலும் வரிசை வரிசையாய் வளர்த்து விடப்பட்டிருந்த நிழல்தரு மரங்களெல்லாம் கப்பும் கிளையுமாக வெட்டிச் சாய்ந்து கிடந்தன. ஆங்காங்கே அமைக்கப் பெற்றிருந்த ஆதுலசாலைகளும், அறக்கோட்டங்களும், கங்கச் சாவடிகளும்.

வழிக் காவல் நிலையங்களும், செலவுச் சத்திரங்களும், சுமைதாங்கிக் கற்களும் கவனிப்பாரற்ற நிலையில் இடிந்தும் தகர்ந்தும் பாழடைந்தும் தோற்றமளித்தன. எங்கு பார்த்தாலும் மாண்டு மடிந்த மனித மண்டையோடுகளும், யானை - குதிரை முதலானவற்றின் சிதைந்த எலும்புக் கூடுகளும் சிதறிக் கிடந்தன. அவற்றிடையே உடைந்து நொறுங்கிய பல்வேறு போர்க் கருவிகள் துருப் பிடித்துக் கறுத்து மண்ணோடு மண்ணாய் மட்கிக் காணப்பட்டன.

இப்படி, அந்த எழிலார்ந்த இரு விழிகள் நோக்கிய திசையெல்லாம் பயங்கரப் பரிதாபக் காட்சிகளே பரக்கத் தோற்றமளித்தன.

இவற்றை மேலும் மேலும் பார்க்கப் பிரியப்படாததாலோ என்னவோ, அவ்வழகிய விழிகள் இமைப் போர்வைக்குள் முடங்கின. சிவிகையின் திரையை விலக்கிப் பற்றியிருந்த செவ்வல்லி மலர்க்கரமும் அதனை இழுத்து மூடி விட்டு மறைந்தது.

தமக்குப் பின்னால் ஏதோ ஒரு பலம் பொருந்திய புயற்காற்று தம்மை விரட்டித் தள்ளிக்கொண்டு வருவதுபோல் அத்தனை விறுவிறுப்பாக விரைந்து கொண்டிருந்த சிவிகை தூக்கிகள், ஏனோ தம் நடை வேகத்தைச் சற்றே தளர்த்திப் பயப்பிராந்தியுடன் பின்னால் திரும்பிப் பார்த்தனர்.

அந்த நெடுஞ்சாலையின் மிகத் தொலை தூரத்தில், காய்ந்த கொட்டாங்கச்சியைக் கற்பாறைமீது ஒரே சீராகத் தட்டுவது போன்ற ஓசையை எழுப்பி ஓடி வந்து கொண்டிருந்தது ஒரு செந்நிறப் புரவி. தீயை மிதித்துக்கொண்டு வருவதுபோல் ஓடி வந்த அப்புரவியின் பின்னால் அந்தத் தீயிலிருந்து எழும் புகைச் சுருளெனப் புழுதிப் படலம் கிளம்பிப் படர்ந்தது.

இந்தக் காட்சியைக் கண்ட சிவிகை தூக்கிகள் தமக்குள் ஏதோ கண்சமிக்ஞை செய்துகொண்டு முன்னிலும் அதிதுரிதமாக நடக்க ஆரம்பித்தார்கள்.

புழுதிக் கூடாரமிட்டுப் பாய்ந்தோடி வந்த அப்புரவியின்மேல், சுமார் நாற்பது வயது மதிக்கத் தக்க ஓர் அதிகாயபாகுவான வீரர் அமர்ந்திருந்தார். பகட்டான ஆடையணிகளுடன் செருக்கும் மிடுக்குமாகத் தோற்றமளித்த அவ்வீரரின் முகத்தில் இயற்கையாகவே ஒரு குரூரச் சாயல் கன்றி காணப்பட்டது. அந்தக் குரூரத் தோற்றத்துக்கு ஏற்பத் தம் குதிரையை வலியெனச் செலுத்தி வந்த அவர், சிவிகையை நெருங்கியதும் கடிவாளக் கசையை இறுகப் பற்றி முரட்டுத்தனமாக இழுத்தார். இதனால் தட்டுக்கெட்டுத் திமிறிய குதிரை பெருங்குரலெடுத்துக் கனைத்துக் கொண்டே நெம்பி நிமிர்ந்து ஒரு வட்டம் போட்டுச் சுழன்று நின்றது.

இதமாக அதன் முதுகைத் தட்டிக் கொடுத்துச் சிவிகையோரமாகப் பெருநடை போடச் செய்த அவ்வீரர், அந்தச் சிவிகையையும் அதைத் தூக்கிச் செல்லும் ஆட்களையும் மாறி மாறி விழித்துப் பார்த்தார். பிறகு தம் இடது காலால், சிவிகைதூக்கிகளிலொருவனின் விலாப் பக்கம் இடித்து, ''ஏனடா, நாகோதரா! பொழுது சாய்வதற்குள் பல்லவபுரத்தை அடைந்துவிட வேண்டும் என்று நான் உனக்குச் சொல்லவில்லையா? இன்னமும் இரண்டு காதத் தொலைவை வைத்து நகர்ந்துகொண்டிருக்கிறாயே!'' என்று அடித்தொண்டையில் கடுகடுத்தார்.

ஏற்கனவே கூன் விழுந்திருந்த தன் முதுகை மேலும் கூனலாக்கிக் கொண்டு கால்கள் நடுக்கமுற நடந்தவாறே ஏதோ கூற வாயெடுத்தான் நாகோதரன் என்ற அந்தச் சிவிகைதூக்கி.

அதே சமயம், வெண்முகிலை நீவிக் கொண்டு வெளிப்படும் நிறைமதிபோல் சிவிகையின் வலப் பக்கத் திரைச் சீலையைத் தன் செவ்வல்லிக் கரத்தால் விலக்கிப் பிடித்த வண்ணம் வெளியே எட்டிப் பார்த்தாள் ஓர் அதியற்புதப் பேரழகி!

புரவி மீதிருந்த வீரர் சட்டென்று கீழே குதித்திறங்கி, ''இளவரசி உத்தம சீனியாருக்கு, வில்வேலியின் வணக்கம் உரித்தாகும்!'' என்று பணிவுடன் தலை தாழ்த்தி நிமிர்ந்தார்.

வில்வேலி என்ற அவ்வீரரால் உத்தம சீனி என விளிக்கப்பட்ட அந்த எழிலார் இளநங்கை, ''வாருங்கள் ஐயா, வணக்கம்!'' என்று குழலினுமினிய குரலில் கூறித் தன் குவளை மலர்க் கண்களால் அவரை ஒரு கணம் கூர்ந்து நோக்கியவள், ''தளபதியார் எங்களைப் பின் தொடர்ந்து வருவார் என நான் எதிர்பார்க்கவில்லையே?..'' என்றாள் நெஞ்சை அள்ளும் சுந்தரப் புன்முறுவலுடன்.

இடக் கையை இடுப்பின்மேல் ஊன்றி வலக் கையால் கடிவாளக் கசையைத் துவளப் பற்றிக்கொண்டு புரவியை நடத்தியவாறு அதனுடன் கம்பீரமாக நடந்து வந்த தளபதி வில்வேலி, ''ஆம், அம்மணி! நானும்தான் இப்படிப் புறப்பட்டு வருவேன் என்பதை எதிர்பார்க்கவில்லை. நேற்றுக் காலை உங்களைக் காஞ்சியிலிருந்து பல்லவபுரத்துக்குப் பயணப்படுத்தி அனுப்பிய பின்,

# கால்கேட்டின்மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத் அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்க




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கே
டெண்டல் கிரீம் துர் நாற்றத்தையும்
சொத்தையையும் உண்டாக்கும் பெ
களில் 85 சத விகிதத்தை ஒழிக்கிற

கால்கேட் உடனடியாக வாய்த் துர்
நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களி
அகற்றுகிறது என்பதையும், உண
சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல்
பற்களைத் துலக்கும் முறையால்,
பற்பசை வரலாற்றிலேயே இதுவரை
கண்டிராத பெருமளவில், ஏராளமா
வர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்
படுகிறது என்பதையும் விஞ்ஞான
பரீட்சைகள் நிரூபித்துள்ளன: இ
சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான்
உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளி
தால் மட்டும் போதாது—சாப்பிட்
வுடன் வழக்கமாக கால்கேட்
டெண்டல் கிரீமினுல் உங்கள் பற்க
நன்றாகத் துலக்குங்கள். இதன்
வீரியமும், ஊடுருவும் தன்மையுமு
நுரை பற்களின் இடைவெளிகளி
புகுந்து, சொத்தைக்கும், துர்
நாற்றத்துக்கும் காரணமாக இருக்
அழுகிய பதார்த்த அணுக்களை
அகற்றுகிறது.

கால்கேட்டில் நிறைந்திருக்கும் நறும
சுகமணத்திற்காக, குழந்தைகள்
அதனுலேயே பல் துலக்க
விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பி னுல், இந்த பலன்கள் அனைத்தை யும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெ வும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையு விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.**

மதியத்துக்கு மேல் உறையூரிலிருந்து உங்கள் பெரிய தந்தையாரும் எங்கள் சளுக்கியப் பேரரசருமான இரணரசிகர் விக்கிரமாதித்த வல்லபர் அவசரச் சேதியொன்றைத் தூதுவன் மூலம் அனுப்பி வைத்தார்....'' என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே இளவரசி உத்தமசீலி குறுக்கிட்டு, ''என்ன சொன்னீர்கள்? எனது பெரிய தந்தையார் இப்போது உறையூரிலா இருக்கிறார்?'' என்று சற்றே வியப்புடன் வினவினாள்.

''ஆம், இளவரசி! அப்படித்தான் அவர் தம் சேதியில் குறிப்பிட்டிருந்தார்....''

''அவ்வாறானால் நான் இப்போது பல்லவபுரத்துக்குப் பயணமாகி வருவது அவருக்குத் தெரியாதா?''

''நன்றாகத் தெரியும், அம்மணி! வேங்கியிலிருந்து காஞ்சி வந்து சேர்ந்திருக்கும் உங்களைப் பல்லவபுரத்துக்கு அனுப்பி வைக்க வேண்டுமென்பது முந்தைய திட்டம். அதன்படித்தான் நீங்களும் பயணமானீர்கள். ஆனால், மாமன்னரவர்கள் ஏனோ அந்தத் திட்டத்தை மாற்றி உங்களை நேரே உறையூருக்கு அனுப்பி வைக்கும்படி அவசரச் சேதி விடுத்து விட்டார். அதனால்தான் காஞ்சிக் கோட்டையைக் காவல் காக்கும் பொறுப்பை ஏற்றிருந்த நான், அந்தப் பொறுப்பை எங்கள் இளவரசர் விநயாதித்தரிடம் ஒப்படைத்து விட்டு உடனே பயணமாகி இதோ வந்து சேர்ந்திருக்கிறேன்.''

கண்ணிமைகள் படபடக்க அதரங்களை நெளித்துக் குவித்தபடி ஒருகணம் ஏதோ யோசனை செய்த உத்தமசீலி, ''நல்ல வேளை! இந்த விவரம் தெரியாமல் நான் பல்லவபுரத்துக்குப் போயிருந்தால் அங்கே என்னென்ன குழறுபடிகளெல்லாம் ஏற்பட்டிருக்குமோ!'' என்றாள் உள்ளூறப் பயந்த குரலில்.

''அப்படியெல்லாம் எதுவும் நடக்காது, இளவரசி! ஏனென்றால், பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையை இப்போது முழுக்க முழுக்கக் காவல் காத்து வருவது எங்கள் சளுக்கிய வீரர்களே. நீங்கள் அங்கு சென்றிருந்தால் அவர்கள் எல்லாவிதச் சௌகர்யங்களும் செய்து கொடுத்து உங்களை உறையூருக்கு அனுப்பி வைத்திருப்பார்கள்!'' என்று பெருமையாகச் சொன்ன தளபதி வில்வேலி, ''ஆயினும் நீங்கள் விவரமறியாமல் அங்கு சென்று மனத்தளவிலாவது ஒரு சிறு துன்பமும் அடையக்கூடாதே என்பதற்காகத்தான், மாமன்னரின் கட்டளைப்படி இதோ நானே உங்களைப் பின்தொடர்ந்து வந்திருக்கிறேன்!'' என்றார். சற்று நேரங் கழித்து மீண்டும் அவர், ''ஒரு விஷயம் கேட்க மறந்து விட்டேனே!... உங்கள் தந்தையார் எங்கள் மன்னருக்கு, ஏதேனும் செய்தி கொடுத்தனுப்பியிருக்கிறாரா, இளவரசி?'' என்று மிகவும் அக்கறையாக விசாரித்தார்.

''ஆமாம், ஐயா! ஒரு முக்கிய ஓலை கொடுத்திருக்கிறார்'' என்று மெல்லிய குரலில் சொன்ன உத்தமசீலி, ''அது சரி, வில்வேலியாரே! பல்லவபுரத்தில் தங்கியிருந்த என் பெரிய தந்தையார், திடீரென்று உறையூருக்குச் செல்லக் காரணம் என்ன?'' என்று வினவினாள்.

இதைக் கேட்டுச் சிறிதே திணறி விட்ட சளுக்கியத் தளபதி தம்மைச் சமாளித்துக்கொண்டு, ''அந்தக் காரணமா?.... அது மிகச் சாதாரணமானதுதான் இளவரசி!'' என்று மழுப்பலாகக் கூறிச் சிரித்தவர், சிவிகைதூக்கிகளை விறைப்பாக ஏறிட்டு நோக்கி, ''பொழுது சாய்ந்து விட்டதே, போங்களடா சீக்கிரம்!'' என்று கடுகடுத்தார்.

## அத்தியாயம் இரண்டு

# வராகத்தை மிதித்த வாலிபன்

மேற்றிசைத் தொலை தூரத்துக்கு அப்பால் ஓங்கி நின்ற ஞாழற்கோயில் ஒன்றின் கும்பத்துக்குப் பொற்பரிவட்டம் சூட்டிக்கொண்டிருந்தது மாலைச் சூரியன். அந்த அற்புத அழகுக் காட்சியை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டு வந்தாள் இளவரசி உத்தமசீலி.

இந்நேரம்வரை குதிரையின் கடிவாளக் கசையைப்பற்றிய வண்ணம் நடந்து வந்த தளபதி வில்வேலி, அவரது விரட்டலால் விரைந்து ஓடத் தொடங்கிய சிவிகை தூக்கிகளுடன் சேர்ந்து நடக்க மாட்டாமல் குதிரைமேல் தாவியேறி அமர்ந்து கொண்டார். இப்போது சிவிகையின் பக்கவாட்டிலேயே குதிரை பெருநடை யிட்டுச் செல்ல ஆரம்பித்தது.

''இளவரசியாருக்கு இந்தப் புதிய நாட்டில் இத்தனை நீண்ட பயணம் செய்வது மகிழ்ச்சி மிக்க இனிய அநுபவமாயிருக்கும், அப்படித்தானே?'' என்று கலகலப்பான குரலில் வினவினார் வில்வேலி. சற்றுமுன் அவள் கேட்ட

கேள்விக்குச் சாயான மறுமொழி தராமல் மழுப்பியதை மறக்கடிப்பதற்காகவே அவர் இப்படிப் பேச்சை ஆரம்பித்தார்.

''ஆம், ஐயா! என் வாழ்நாள் முழுவதும் மறக்க முடியாத அநுபவமாகத்தான் இருக்கிறது இந்த நீண்ட பிரயாணம். ஆனால், நீங்கள் சொல்வது போல் இது மகிழ்ச்சி மிக்க அநுபவமல்ல; மருட்சி மிக்க அநுபவம். துயரம் செறிந்த அநுபவம்'' என்று எங்கோ பார்த்தவாறு கூறினாள் உத்தமசீலி.

திடுக்குற்றவர் போல் திரும்பிய வில்வேலி, ''என்ன, இளவரசி? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று அவசரமாகக் கேட்டார்.

கண்ணொளி மங்கச் சோர்வுடன் பெருமூச்சு விட்ட உத்தமசீலி மெல்லிய குரலில் சொன்னாள்: ''உண்மைதான் ஐயா! வேங்கியிலிருந்து நான் புறப்பட்டபோது இந்தப் பல்லவ நாட்டைப் பற்றி ஏதேதோ பெரிதாகக் கற்பனை பண்ணியிருந்தேன். பாலும் தேனும் பாய்ந்தோடும் நாடு, செல்வம் கொழிக்கும் சிங்கார நாடு, காணுமிடமெல்லாம் கற்பகச் சோலைகளாகவே காட்சி தரும் நாடு — என்றெல்லாம் பலர் சொல்லக் கேள்விப்பட்டு, அந்த என் கற்பனைச் சித்திரத்தை மேலும் வனப்பாக்கிக் கொண்டு, அத்தகையதொரு குபேர நாட்டைக் காணப் போகிறோம் என்ற பேராவலுடன் வந்தேன். ஆனால், இந்நாட்டின் எல்லையை அடைந்தது முதலே இங்கு கண்டு வரும் காட்சிகள் அனைத்தும் எனது அந்த அழகிய கற்பனையை எள்ளி நகையாடுவதுமல்லாமல், அவை ஒவ்வொன்றும் ஒரு பயங்கர ஏமாற்றப் பேரிடியாகவே என் உள்ளத்தைத் தாக்கி வருகின்றன. இதோ, நீங்களே பாருங்களேன்! வறண்டு வெடித்த நிலங்கள்; காய்ந்து தீய்ந்த கழனிகள்; கருகித் துவண்ட தோட்டங்கள்; பட்டுப் போன மரங்கள்; பாழடைந்த குளங்கள்; சேறு குழம்பிய ஏரிகள்; சிதிலமான கிணறுகள்; இடிந்து தகர்ந்த கோயில்கள்; இடிக்கப் பெற்ற மண்டபங்கள்; எரிந்து போன வீடுகள்! இந்தப் பாழ்கடலைக் காட்சிகளைப் பார்ப்பதா மகிழ்ச்சி மிக்க இனிய அநுபவம் என்கிறீர்கள்?''

வில்வேலி இதைக் கேட்டு விலாப் புடைக்க நகைத்தார். கையிலிருந்த கடிவாளக் கசையால் குதிரையின் பிடரியில் அப்படியும் இப்படியுமாகச் சாடிக் கொண்டே, ''ஓ, ஓ!.. இளவரசியார் சொல்ல வந்த விஷயம் இதுதானா? நான் வேறு என்னமோ ஏதோ என்று பயந்தே விட்டேன்!'' என்று கூறி மீண்டும் கடகடவெனச் சிரித்த அவர், சட்டென்று சிரிப்பை நிறுத்தித் தம் பருத்த உடலைப் பயங்கரமாக ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டு சினம் செறிந்த அடித்தொண்டையில் கரகரத்தார்: ''ஆம், இளவரசி! இந்தப் பல்லவ நாட்டைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டவை யெல்லாம் உண்மைதான். அவற்றைக் கொண்டு உங்கள் மனத்தில் தீட்டியிருந்த கற்பனை ஓவியமும் மிகையற்றதுதான். ஆனால், அந்தப் பழைய ஓவியத்தை அழித்து, இன்று காணும் இப் புதிய ஓவியமாகத் தீட்டிய பெருமை, உங்கள் அருமைப் பெரியப்பா விக்கிரமாதித்த வல்லபரையே சாரும்! ஆகா, இவ்வரிய இலட்சிய ஓவியத்தைக் காணவும், இதனை இந்த விதமாகத் தீட்டி முடிக்கவும் அவர் எத்தனை இரவு பகல் ஊண் உறக்கம் ஒழித்திருப்பார்; உருகிக் கண்ணீர் வடித்திருப்பார்; மறுகி மனம் வெடித்திருப்பார்! அவருடைய கனவு நனவாகி விட்டது! அவர் தீட்ட விரும்பிய இடுகாட்டு ஓவியத்தைத் தீட்டியே முடித்து விட்டார்! வாழ்க, விக்கிரமாதித்தர்! வாழ்க, எங்கள் சளுக்கிய சாம்ராஜ்யம்!''

பித்தம் தலைக்கேறியவர் போல் வலக்கையை மேலுயர்த்தி உரத்த குரலில் இப்படிக் கூவிய வில்வேலி பெருமிதப் புன்முறுவலுடன் கம்பீரமாக நிமிர்ந்து சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தார். அவர் முகத்தில் மகிழ்ச்சியும் கோபமும் மாறி மாறிப் பரம்படித்தன.

''இல்லை, இல்லை! இந்த ருத்திர ஓவியத்தை முதலில் தீட்டியவர் விக்கிரமாதித்த வல்லபர் அல்ல; மமதை கொண்ட இப் பல்லவ நாடுதான் இத்தகையதோர் ஓவியத்தை முதன் முதலில் தீட்டிக் களித்தது! எங்கே? எப்போது? வடக்கே நருமதையாறு முதல் தெற்கே வட பெண்ணையாறு வரை விரிந்து பரந்த மாபெரும் சளுக்கிய சாம்ராஜ்யத்தின் கோநகரான வாதாபியில்! எங்கள் வணக்கத்துக்குரிய மாவீரர் புலிகேசியின் ஆட்சிக் காலத்தில்!.... ஹா, அந்தப் பயங்கர ஓவியத்தின் பாதித் தோற்றத்தைக்கூட இன்னும் இங்கே நான் பார்க்கவில்லையே! இருக்கட்டும், இருக்கட்டும்; விரைவிலே இதை முற்றாக்கி முடிப்போம்!'' — கல்லைக் கொட்டி அரைப்பது போல் பல்லைக் கரகரவெனக் கடித்துப் பீறிய வில்வேலி, சட்டென்று திரும்பி இளவரசியைக் கனிவுடன் நோக்கி, ''உத்தமசீலியாரே! உங்களால் இந்த 'ஓவியத்தை' ரசிக்க முடியாமல் இருப்பதுபற்றி நான் வருந்தவில்லை. ஏனென்றால், இதன் மூல ஓவியத்தை நீங்கள் காணாதவர். அது வரையப் பெற்ற

# மெல்லிளம் சருமத்திற்குப் போஷாக்கு அளிக்க

# மெரோலின்

சுகாதார டியோடரண்ட் டாய்லட் சோப்

பூரண சருமப் பாதுகாப்பு இப்பொழுது கைக்கு எட்டியுள்ளது. சுத்தம் செய்வது தவிர மெரோலின் உடல் நாற்றங்களை நீக்குகிறது. சரும ஆரோக்கியத்தைப் பூர்த்தி செய்கிறது. அழகு மிளிரச் செய்கிறது. அதன் மருந்து சக்தியும் நாற்றம் போகும் சக்தியும் உடல் சுத்தத்துடன் ஆரோக்கியமும் அளிக்கின்றன.




தயாரிப்பு

வெஜிடபிள் சோப் ஒர்க்ஸ்

கள்ளிக்கோட்டை

காலத்தில் வயிற்றுக் கருவாய்க்கூட இருந்திருக்க மாட்டார்கள். அதனால் தான் இதன் அருமை பெருமைகளை அறிந்து அநுபவிக்க உங்களால் இயலவில்லை. ஆயினும் ஒரு வேண்டுகோள், அம்மணி! இனிமேலாவது இம்மாதிரி காட்சிகளைக் கண்டு மருட்சியுறாதீர்கள்; மகிழ்ச்சியடையும் வகையில் மனத்தைப் பக்குவப்படுத்திக் கொள்ளுங்கள்!'' என்றார் சிறு பிள்ளைக்குப் பாடம் சொல்லித் தருவது போல.

உத்தமசீலியின் அழகிய முகம் அனல் பட்ட மலரென வதங்கிச் சுருங்கியது. போர் அரக்கனின் கோரத் தாண்டவத்தால் பாழ்த்துக் கிடந்த அந்தப் பிரதேசத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த அவள், அங்கிருந்து தன் பார்வையைப் பெயர்த்தெடுத்துக்கொண்டு திரும்பி, ''ஏன் ஐயா! பல்லவபுரத்தில் தங்கியிருந்த என் பெரிய தந்தையார் ஏதோ ஒரு சிறிய காரணத்தை முன்னிட்டு உறையூருக்குப் போயிருக்கிறார் என்றீர்களே, அந்தக் காரணத்தை நான் அறியலாமா?'' என்று இதமான குரலில் கேட்டாள்.

தளபதி வில்வேலி அவளை வியப்புடன் ஏறிட்டு நோக்கினார். பிறகு மெல்லச் சிரித்தவாறு, ''இளவரசியார் எந்த விஷயத்திலும் மிக முன்னெச்சரிக்கையோடு இருப்பார் என்று நினைக்கிறேன்! கிரீட குலத்தில் பிறந்தவர்களெல்லாம் அப்படித்தான் இருக்கவேண்டும்! பாராட்டுக்குரிய பயிற்சி!'' என்றார் கூடார்த்தமாக.

''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் உங்கள் பேச்சை நான் நம்பாமல் உண்மையை ஊடுருவ முயல்கிறேன் எனக் குற்றம் சாட்டுவது போலல்லவா இருக்கிறது?'' என்று வீணை முரல்வதைப்போல் நகைத்த உத்தமசீலி, ''அப்படியெல்லாம் தவறாக நினைக்காதீர்கள் ஐயா! வெறும் விஷயத் தெளிவுக்காகத்தான் அந்த விவரத்தைக் கேட்கிறேன்'' என்றாள்.

அவளுடைய பேச்சுத் திறனைக் கண்டு உள்ளூற வியந்த வில்வேலி, ''அது மிகச் சாதாரணமானதுதான் இளவரசி! எங்கள் பேரரசர் விக்கிரமாதித்தர் காஞ்சிக் கோட்டையைக் கைப்பற்றியதும், அங்கிருந்த பல்லவ அரச குடும்பத்தினரைச் சிறைப் பிடித்துக் கொண்டுபோய்ப் பல்லவபுரம் அரண்மனையில் அடைத்து வைத்திருந்தார். அவர்களில் பல்லவ மன்னன் பரமேசுவர வர்மனின் தாயாரான போற்றிநங்கை என்பவளும், அவனது ஒன்றுவிட்ட தம்பியான கோவிந்த வர்மன் என்பவனும் முக்கியமானவர்கள். அந்தக் கோவிந்த வர்மன், ஐந்து நாட்களுக்குமுன் சிறைக் காவலிலிருந்து தப்பியோடி விட்டானாம். அதனால்தான் நம் மன்னர் பிரான் தமது தற்காப்புக்காகப் பல்லவபுரத்தை விட்டு உறையூருக்குச் சென்றிருக்கிறார். தப்பிச் சென்ற இளவரசன் கோவிந்தனைப் பிடித்து வர, நாலா திசையிலும் நமது வீரர்கள் விரைந்திருக்கிறார்கள். விரை





வில் அவன் பிடிப்பட்டு விடுவான்'' என்றார் அலட்சியமாகத் தோளைக் குலுக்கிக்கொண்டு.

இந்த விவரங்களைக் கேட்ட உத்தமசீலியின் பூவுடல் மெல்ல நடுக்கமுற்றது. ''அப்படியானால் பரமேசுவர வர்மன் எங்கு சிறை வைக்கப்பட்டிருக்கிறான்?'' என்று அவசரமாக வினவினாள்.

''ஓ..... அந்த விவரமும் இளவரசியாருக்குத் தெரிய வேண்டுமா?'' என்று கேட்டு ஒரு கணம் தயங்கிய வில்வேலி. ''அதுதான் இப்போது எங்கள் முன் உள்ள பெரிய பிரச்னை! ஏனென்றால், காஞ்சிக் கோட்டையை நாங்கள் கைப்பற்றியதுமே பரமேசுவரவர்மன் எங்கோ தலைமறைவாகி விட்டான்!'' என்றார் கரகரத்த குரலில்.

உத்தமசீலி தன் இளநுங்கு மோவாயை வருடிய வண்ணம் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தாள். அவளுடைய

பிரமை நிலையைக் கடைக்கண்ணால் கவனித்த வில்வேலி கடகடவெனச் சிரித்துக் கொண்டே, ''இளவரசியார் எதைப் பற்றி யோசிக்கிறார் என்பதை என்னால் ஊகிக்க முடிகிறது. 'பல்லவ மன்னனும் அவனுடைய இளவலும் தலைமறைவாகியிருக்கும் இந்தச் சூழ்நிலையில், தாம் வந்த காரியத்தை வெற்றிகரமாகச் செயல்படுத்த முடியுமா என்று யோசிக்கிறீர்கள், அப்படித்தானே?'' என்று கேட்டார்.

''இல்லை, ஐயா! அதைப் பற்றியெல்லாம் நான் சிறிதும் கவலைப்படவில்லை. என் பெரிய தந்தையார் தமது பல்லாண்டுக் கால வெஞ்சினக் கனவு வசந்த நனவாக மாறியிருக்கும் இந்தத் தருணத்தில் இதுபோன்ற பெரிய பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டிய நிலையிலிருந்தாலும், இவற்றிடையே சிறு பெண்ணாகிய என்னைப் பற்றியும் என் வருகையைப் பற்றியும்கூட அவர் இத்தனை அக்கறை செலுத்தி உங்களை அனுப்பி வைத்திருக்கிறாரே என்பதை எண்ணித்தான் வியந்து கொண்டிருக்கிறேன்.''

''உண்மைதான், இளவரசி!'' என்று உற்சாகத்தோடு தலையசைத்த வில்வேலி தொடர்ந்து சொன்னார்: ''ஆனால் உங்கள் மீதும் உங்களின் அருமைத் தந்தையார் விஷ்ணுவர்த்தனர் மீதும் எங்கள் மாமன்னர் விக்கிரமாதித்தர் வைத்திருக்கும் பேரன்பு எத்தகையது என்பதை அறிந்தவர்கள் இதுபற்றிச் சிறிதும் வியப்படைய மாட்டார்கள். இந்த மாசற்ற அன்பு இன்று நேற்று ஏற்பட்டதா? மாபெரும் சளுக்கிய சாம்ராஜ்யத்தை உருவாக்கித் தந்து காலஞ்சென்ற எங்கள் பேரரசர் புலிகேசியவர்கள், தமது சாம்ராஜ்யத்தின் கிழக்குப் பகுதியை ஒரு தனி நாடாகப் பிரித்து, தம் முதல் தம்பியாரான குப்ஜ விஷ்ணுவர்த்தனரிடம் கொடுத்து அசலபுரத்தை (நாசிக்) தலைநகராகக் கொண்டு ஆளும்படி செய்தது போல, மாண்டொழிந்த மகேந்திர பல்லவனிடமிருந்து கைப்பற்றிய ஆந்திர நாட்டைத் தம் ஆளுகைக்குள் வைத்துக் கொள்ளாமல், அதனை அவரது இளைய தம்பியும் உங்கள் பாட்டனருமான முதலாம் விஷ்ணுவர்த்தனரிடம் ஒப்படைத்து வேங்கியைத் தலைநகராகக் கொண்டு ஆளும்படி செய்தாரே, அன்று வேர் பாய்ந்த அன்பாயிற்றே இது! மாமன்னர் புலிகேசிக்குப் பின் அவரது வீரப் புதல்வரான எங்கள் விக்கிரமாதித்த வல்லபர் சளுக்கிய பார்த்திபரானார்; முதலாம் விஷ்ணுவர்த்தனருக்குப் பின் அவரது அருமைச் செல்வரான உங்கள் தந்தை இரண்டாம் விஷ்ணுவர்த்தனர் ஆந்திர நாட்டின் அரசரானார். ஆயினும் அவர்கள் தம் தந்தையாரிடையே நிலவிய அன்பின் உறவை எந்தக் காரணத்தைக்கொண்டும் வழுவ விடாமல் இன்றளவும் அதை வளர்த்தே வருகிறார்கள். இதற்கு எத்தனையோ எடுத்துக்காட்டுகள் உண்டு என்றாலும், இப்போதைக்கு ஒன்றை மட்டும் கூறுகிறேன்: குலப்பழி தீர்க்கும் குறிக்கோளில் சாவா வாழ்வா என்ற வினாவோடு இந்தப் பல்லவ நாட்டின்மீது படையெடுத்து வந்த எங்கள் மாமன்னர் விக்கிரமாதித்தர், தேவையிருந்தும்கூடத் தம் ஒன்றுவிட்ட தம்பியார் விஷ்ணுவர்த்தனரிடம் படையுதவியையோ, பொருளுதவியையோ கோரவில்லை; அவரை இந்தப் போரில் ஈடுபடச் செய்யவுமில்லை. காரணம், தம் பொருட்டுத் தமது தம்பியாரும் அவரது நாடும் வீண் சிரமங்களுக்கு உள்ளாகக் கூடாது என்ற அன்பின் பெருநோக்குதான். இவையெல்லாம் ஒருபுறமிருந்தாலும், பெண் மகப்பேறு பெறாத எங்கள் மாமன்னர் உங்களைத்தான் தமது சொந்த மகளாக எண்ணிப் பேரன்பு செலுத்தி வருகிறார். அதிலும் நீங்கள் இந்தப் பல்லவ நாட்டிலே மேற்கொள்ள வந்திருக்கும் காரியம் அவர் மனத்தை வெகுவாக ஈர்த்துள்ளது. எனவேதான், எத்தனை எத்தனையோ அலுவல்கள் இருந்தும்கூட, அவற்றிடையே உங்களைப் பற்றியும் இவ்வளவு அக்கறை காட்டுகிறார் அவர்.''

வில்வேலியின் பேச்சை வெகு கவனமாகக் கேட்டு மகிழ்ச்சிப் பரவசத்தில் ஆழ்ந்திருந்த உத்தமசீலி, தான் அமர்ந்து வந்த சிவிகை ஏனோ நின்று போனதை உணர்ந்து அவசரமாக வெளியே எட்டிப் பார்த்தாள்.

யோகியரின் உள்ளம்போல் நீண்டு சென்ற அந்த நெடுஞ்சாலை ஓரிடத்தில் திரிசூல வடிவிலே மூன்று கிளைகளாகப் பிரிய, அம் முச்சந்தியில் தயங்கி நின்று கொண்டிருந்தனர் சிவிகை தூக்கிகள். அவர்களிடம் ஏதோ அதட்டிக் கேட்டுக் கொண்டே முன்னால் சென்று நின்ற வில்வேலி திகைப்புடன் சுற்றுமுற்றும் பார்த்தார்.

''நாகோதரா! என்ன நடந்தது? ஏன் இங்கே நின்று விட்டாய்?'' என்று சற்றே குழம்பிய குரலில் கேட்டாள் உத்தமசீலி.

''ஒன்றுமில்லை, இளவரசி!... இந்த மூன்று பாதைகளில் எந்தப் பாதையிலே திரும்பி, உறையூருக்குச் செல்வதென்று தெரியவில்லை! அதனால்தான்...'' என்று அச்சம் கலந்த பணிவுடன் இழுத்தான் நாகோதரன்.

''தளபதியாருக்கும் அது தெரிய வில்லையா?''

''ஆம், தேவி! அவரும் இந்தப் பாதையில் இன்றுதான் முதன் முதலாக வருகிறாராம்.''

சிவிகையின் நாற்புறத் திரைகளையும் விலக்கி விட்டுச் சுற்றிலும் திரும்பிப் பார்த்தாள் உத்தமசீலி. கண்ணுக்கெட்டிய தூரம்வரை பார்த்துக் காணப்பட்ட அந்தப் பிரதேசத்தில் மனித நடமாட்டமே தென்படவில்லை. மாலைச் சூரியன் மறைந்து, பையப் பைய இருள் சூழ்ந்து வந்துகொண்டிருந்தது.

முச்சந்தியில் நின்று அங்குமிங்குமாகப் பார்த்துக்கொண்டிருந்த வில்வேலி, ஏதோ ஒரு முடிவுடன் அவசரமாகச் சிவிகையை நோக்கி வந்தார். ''இளவரசி! இங்கே எதிர்பாராவிதமாகப் பாதைக் குழப்பம் ஏற்பட்டுவிட்டது. சிரமம் கருதாது ஒருசில விநாடிகள் பொறுத்திருங்கள். அதோ தெரியும் அந்தச் சிற்றூருக்குப் போய் யாராவது ஒரு வழிகாட்டியைத் தேடிப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்துவிடுகிறேன்'' என்று சொல்லி விரைந்தார்.

மனித வாடையே அற்றுப் போய் வெறிச்சோடிக் கிடந்தது அந்தச் சிற்றூர். இடிந்தும் எரிந்தும் பாழடைந்தும் காணப்பட்ட இல்லங்கள் ஒவ்வொன்றையும் பார்த்தவாறே தெருத் தெருவாகச் சுற்றி வந்தார் சளுக்கியத் தளபதி வில்வேலி. வலை போட்டுச் சலிப்பதுபோல் தேடிப் பார்த்தும் ஓர் ஆளைக்கூட அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. எங்கேனும் ஓரிடத்தில் யாராவது ஒரு மனித உருவம் தென்பட்டு, அங்கே அவர் விரைவதற்குள் அவ்வுருவம் மாயமாய் மறைந்து விடும். இது அவருக்குப் புதிய அநுபவம் அல்ல; பல்லவக் குடிமக்கள் சளுக்கிய வீரர்களைக் கண்டாலே குலை நடுங்கி ஓட்டம் பிடித்து ஒளிந்து கொள்வதை அவர் பல தினங்களாகப் பார்த்து வருகிறார். அப்போதெல்லாம் அந்தக் காட்சி அவருக்குப் பெருமையாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கும். ஆனால் இப்போதோ அது வேதனையையும் தவிப்பையும் அளித்தது. என்ன செய்வது என்று தெரியாமல் குழம்பிச் சோர்ந்தார் வில்வேலி.

இருள் திரை மெல்ல மெல்ல விரியத் தொடங்கியது. அந்த இருட்டும் வேளையில், அங்கே நடுச் சாலையில் வேங்கி இளவரசியை நிற்க வைத்துவிட்டு வந்திருக்கிறோமே என்ற நினைவு வேறு அவர் மனத்தை அச்சுறுத்தியது. இருளின் கருமை தடிக்கத் தடிக்க, அச்சிற்றூரின் சீரழிந்த தெருக்களில் குதிரையைச் செலுத்திச் செல்வதே அவருக்குச் சிரமமாக இருந்தது. இன்னும் கொஞ்ச நேரம் இப்படியே சுற்றியலைந்துகொண்டிருந்தால் அப்புறம் இங்கிருந்து அந்த நெடுஞ்சாலைக்கு வழி கண்டுபிடித்துப் போவதே தடுமாற்றமாகி விடும்போல் தோன்றியது. ஆயினும் அம்முச்சந்தியில் பிரியும் சாலைகளின் விவரம் அறிய யாராவது ஓர் ஆளைக் கண்டு பிடித்தாக வேண்டுமே!

மேற்றிசையின் தொலைதூரத்துக்கு அப்பால் மற்றொரு சிற்றூர் புகைமூட்டத் தோற்றத்தில் தென்பட்டது. அச்சிற்றூரை நோக்கிப் புரவியைத் திருப்பிக் கொண்டு விரைந்தார் வில்வேலி.

சுமார் முந்நூறு குடிதாங்கிக் கோல் தூரம் சென்ற அவர், சட்டென்று தம் குதிரையை இழுத்துப் பிடித்துக்கொண்டு கீழே குதித்தார். காரணம், அச்சிறிய பாதையின் இடப் பக்கவாட்டில் சுமைதாங்கிக் கல் ஒன்று இருப்பது தெரிந்தது. அச்சுமை தாங்கிக் கல்லின் மேல் யாரோ ஒருவன் படுத்துக் கொண்டிருப்பதும் புலப்பட்டது.

இந்த வேளைகெட்ட வேளையில் யார் அங்கே தன்னந்தனியாகப் படுத்திருப்பான் என்ற யோசனையில் தயங்கி நின்ற வில்வேலி, வீடு வாசல் இழந்த யாரேனும் ஒரு கிராமவாசியாக இருக்கலாம் என்ற முடிவுடன், அவனை எழுப்பி அந்த முச்சந்திச் சாலைகளின் போக்கு விவரத்தை அறியத் தமது குதிரையைச் சற்றுத் தொலைவிலேயே நிறுத்தி விட்டு, அச்சுமை தாங்கிக் கல்லை நோக்கி ஓசைப்படாமல் நடந்து போய், அங்கு படுத்துக் கிடக்கும் மனிதனை உற்றுப் பார்த்தார்.

ஆடு மேய்க்கும் இடையன் போல் தோற்றம் அளித்த ஒரு வாலிபன் இடக் கையை மடித்துத் தலைக்கு அணையாக வைத்துக்கொண்டு, இரு கால்களையும் நெடுக நீட்டி ஒருக்களித்துப் படுத்துக் கிடந்தான். அவனுடைய வலக்கை அணைப்பில் குறுவாள் கத்தியுடன் கூடிய ஒரு நீண்ட மூங்கில் கழி இருந்தது.

தன்னை மறந்த உறக்கத்தில் லயித்துக் கிடந்த அவ்வாலிபனைத் தலை முதல் கால் வரையில் உற்றுப் பார்த்து வந்த வில்வேலி, ஏதோ தீயை மிதித்தவர்போல் திடுக்குற்று ஓரடி பின்னால் நகர்ந்து, பரபரப்புடன் மீண்டும் கூர்ந்து நோக்கினார்.

அந்த வாலிபன் அணைத்துப் பற்றியிருந்த நீண்ட கழியின் பின் முனையில், வராகச் சின்னம் பொறித்த கொடியொன்று கட்டப் பெற்றிருந்தது. அழுக்கேறிக் கிழிந்த அந்தக் கொடித் துணியை விரித்து அதன்மேல் தன் இரு கால்களையும் நீட்டிச் சுக நித்திரையில் ஆழ்ந்து கிடந்தான் அவன்! (தொடரும்)









## கண்ணுன கண்ணே......!

உலகில் உள்ள ஜீவராசிகள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதமான கண்கள் உண்டு. அந்தக் கண்கள் இயங்கும் விதத்திலும், அமைப்பிலும் சக்தியிலும் மட்டும் மாறுபட்டிருக்கும்.

மேலே சில விசித்திரமான கண்களின் படங்களைப் பார்க்கிறீர்கள். முதலில் உள்ளது மரங்களில் வசிக்கும் ராட்சதத் தவளை. அதன் கண்ணைப் பாருங்கள். ஆகாரத்தைத் தேடும்போது அதன் கண்கள் உருண்டையாக ஒன்றுசேர்ந்து முன்னுல் பிதுங்கியது போல் இருக்கும் (வலது பக்கத்திலுள்ள தவளை) ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும் போது உள்ளடங்கியிருக்கும் (இடப் பக்கத்தில் உள்ள தவளை)

இரண்டாவது படம் ஆப்பிரிக்காவில் உள்ள ஓணானுடையது. இதன் விழிகள் குடம் போன்ற அமைப்பில் வைத்துப் பாதுகாக்கப்படுகிறது. ஓணானின் ஒரு கண் முன் பக்கத்திலுள்ளவைகளைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது மற்றக் கண் பின் பக்கத்தில் நடப்பதைக் கவனிக்கும். இரண்டு கண்களையும் தனித் தனியே இயக்கும் ஆற்றல் அவைகளுக்கு உண்டு. நாலா பக்கமும் சுழலும் தன்மையுடையவை அதன்கண்கள்.

மூன்ருவது படத்தைப் பார்த்தால் ஒன்றுமே புரியவில்லையல்லவா? அது ஒரு மாட்டு ஈயின் கண்ணின் படம். அது ஒரு கண்ணு? இல்லை. 'காம்பவுண்ட் ஐ' என்று சொல்லப்படும் கூட்டுக் கண் அது. அதில் மொத்தம் 7,000 பளிங்குகள் இருக்கின்றன. மிக நுண்ணிய சலனத்தையும் கூட ஈயின் கண் கிரகித்து விடும். கண்ணின் மேல் பகுதி பெரிய பிரகாசமான கரடுமுரடான பொருள்களின் பிம்பத்தை அதன் மூளைக்கு அனுப்பும். கண்ணின் கீழ்ப் பகுதி அதே பொருளின் நுட்பமான குறிப்புகளைக் கிரகித்துக் கொள்ளும் சக்தி படைத்தது.

நான்காவது படம் ஒரு சிலந்தியின் தலை. அதில் இருக்கும் எட்டுக் கண்களைப் பார்த்தீர்களா? ஒரே சமயத்தில் எட்டுத் திக்கிலும் உள்ள பொருள்களையும் அதனுல் காண முடியும். கீழே உள்ள நீண்ட ரோமங்கள் ஸ்பரிசவுணர்ச்சியுடையவை.

பிரகாசமான ஒளியைக் கண்டு நம் கருவிழி'வட்டம் சுருங்கிக் கொள்ளும். அதே போல் ஒவ்வொரு ஜீவராசியின் விழிகளிலும் ஒளிக்கு மாறுதல் ஏற்படும். கீழேயுள்ள முதல் படத்தைப் பாருங்கள். அது வேட்டையாடும் பல்லியின் விழி. ஒரு மெல்லிய தோல், நான்கு ஊசி முனைத் துவாரங்களை மட்டும் ஒளி உட்செல்லுவதற்காக விட்டு விட்டு விழியின் இரு பக்கத்திலிருந்தும் வந்து போர்த்திக் கொண்டிருக்கிறது.

அடுத்த படம், தவளையின் கண். கீழ் இமையிலிருந்து ஒரு மெல்லிய தோல் திரையை மேலுக்குச் செலுத்தித் தன் விழிகளை மூடிக் கொண்டிருக்கும் நிலை. இந்த நிலையிலும் சிறிது ஒளி உட்செல்ல அதில் வரிக் கோடுகள் இருப்பதைப் பாருங்கள். கடைசிப் படம் கடலின் அடியில் வாழும் 'ஸ்கேட்' என்ற ஒரு வகைப் பிராணியின் விழிகளின் மேல் இமையிலிருந்து ஒளியைக் கட்டுப்படுத்திவிடத் தொங்கும் தோல். இதுபோல் விழிகளை மறைக்கும் விநோதமான உறைகளைப் பலவித ஜீவராசிகளிலும் காணலாம். இனி நீ காணும் பிராணிகளின் விழிகளை உற்றுப்பார். எத்தனையோ அதிசயங்களைக் காணலாம்.







அடேயப்பா! எத்தனை விதமான கதைகள், நவ நவமான கற்பனைகள்! படங்கள் சொல்லும் கதைப்போட்டிக்கு நீங்கள் எழுதி அனுப்பியிருந்த கதைகள் எல்லாமே அற்புதமாக இருந்தன. ஆனால் அத்தனையையும் விருந்தில் வெளியிட முடியாதே! உங்கள் கற்பனையையும் கதைப் போக்கையும் படித்தபிறகு நான் திட்டமிட்டு வைத்திருந்த கதை கூட எனக்குப் பிடிக்க வில்லை. எந்தக் கதைக்குப் பரிசு தருவது என்பதை முடிவு செய்வதும் கஷ்டமாகப் போய் விட்டது எனக்கு. கடைசியில் பம்பாயைச் சேர்ந்த சீனிவாசன் என்ற அம்பியின் கதைக்குப் பரிசு தருவதென்று தீர்மானித்தேன். உங்கள் சகோதரன் பரிசு பெற்றால் உங்களுக்கு மகிழ்ச்சிதானே?

—வாண்டுமாமா

பரிசு பெற்ற அம்பியின் விலாசம்:

எஸ். சீனிவாசன் C/o பி. எஸ். சேஷாத்திரி, முதல் மாடி, 2-ம் அறை, விஷ்ணுசதன் (பண்டிட் பில்டிங்) ப்ளாட் 459 பாவுதாஜி ரோடு, மாதுங்கா, பம்பாய் - 19.

பரிசு பெற்ற படக் கதை

# புத்தி வந்தது!

டாலி ஒரு பொல்லாத நாய்க்குட்டி; அதனால் குறும்பு செய்யாமல் ஒரு நிமிஷம்கூட இருக்க முடியாது.

ரஜனியின் பாட்டு வாத்தியார் வந்ததும், இதுதான் சமயம் என்று அவளுடைய செல்ல நாய்க்குட்டியான டாலி வீட்டிலிருந்து நழுவியது. என்ன துஷ்டத்தனம் செய்யலாம் என்று யோசித்துக் கொண்டே தோட்டத்தில் சுற்றி வந்தது.

கோழிக் குடிலின், வலைக் கம்பி அடைப்பில் ஒரு பக்கத்தில் பிய்ந்திருப்பதை டாலி கண்டதும் அதற்குள் நுழைந்து உள்ளே சென்றது. அங்கே சில பெட்டைக் கோழிகள் கவாரசியமாக வம்பளந்து கொண்டிருந்தன. பக்கத்துத் தோட்டத்துப் பெட்டைக்கோழிகளைப் பற்றிய அக்கப்போர்தான்!

டாலியின் திடீர்க் குரைப்பைக் கேட்டு அவை பயந்து விட்டன. அதிர்ச்சியினால் அங்கும் இங்கும் சிதறி ஓடின.

அவை ஓடுவதைக் கண்டு டாலிக்குக் குஷி பிறந்து விட்டது. இன்னும் தீவிரமாகத் துரத்த ஆரம்பித்தது.

கறுப்புச் சேவல்தான் அந்தக் கோழிக் குடிலுக்கே தலைமைச் சேவல்.

ஓடி வரும் பெட்டைக் கோழிகளையும், அதைத் துரத்திக் கொண்டு வரும் டாலியையும் பார்த்ததும் கறுப்புச் சேவலுக்கு எல்லாம் விளங்கி விட்டது.

"துஷ்ட நாயே! பெட்டைக்கோழிகளிடம் ஏன் தொல்லை கொடுக்கிறாய்? அவை உனக்கு என்ன கெடுதல் செய்தன?" என்று கோபமாகச் சேவல், டாலியைப் பார்த்துக் கேட்டது.

"நான் அப்படித்தான் செய்வேன், நீ யார் என்னைக் கேட்பதற்கு?" என்று டாலி இறுமாப்பாகக் கூறியது.

சேவலுக்குக் கோபம் கோபமாய் வந்தது. "அப்படியா சங்கதி! என்னிடம் உன் வாலை ஆட்டினால் என்ன ஆகும் தெரியுமா? நான் பரிசுகள் பெற்ற சண்டைச் சேவலாக்கும்" என்று எச்சரித்தது.

"இவர் இந்த ஓட்டைப் பயமுறுத்தல்களுக்கெல்லாம் பயப்பட மாட்டார், உன்னால் ஆனதைப் பார்" என்று சொல்லிக்கொண்டே துரத்தத் தொடங்கியது டாலி.

சேவல் மட்டும் சும்மாயிருக்குமா? தன் பலமான கூரிய மூக்கினால் ஓங்கி டாலியின் முதுகில் குத்திக் கொண்டே அதைத் துரத்திச் சென்றது.

பாட்டு வாத்தியார் போனதும் ரஜனி டாலியைக் காணாமல் தேட ஆரம்பித்தாள். நாலைந்து நாட்களாக ஊரில் கார்ப்பரேஷன் ஆட்கள் தெரு நாய்களைப் பிடித்துச் சென்று கொண்டிருந்ததால் அவளுக்கு மிகக் கவலையாய் விட்டது. தோட்டத்தில் கோழிக்குடிலின் உள்ளே நடக்கும் கலாட்டாவைப் பார்த்ததும் ரஜனிக்கும் வேடிக்கையாக இருந்தது!

சேவலிடம் கொண்ட பயத்தின் அதிர்ச்சியில், வந்த வழியை மறந்து விட்ட டாலியைக் கறுப்புச் சேவல் ஓட ஓட விரட்டிக் கொண்டிருந்தது. ரஜனியைக் கண்டதும்தான் டாலிக்குப் போன உயிர் திரும்பி வந்தது.

கோழிக் குடிலின் தட்டிக் கதவின் மேல் தன் முன்னங் கால்களை வைத்துக் கொண்டு ரஜனியைப் பரிதாபமாகப் பார்த்தது டாலி. ரஜனி வந்து விட்டதால் ஏதும் அறியாதது போல் சேவல் தன் பாட்டில் இரை பொறுக்குவது போல் இருந்தது. கதவைத் திறந்து டாலியைத் தூக்கிக் கொண்டாள் ரஜனி.

"திருட்டு நாயே! உனக்கு நன்றாய் வேணும். இனிமேல் இப்படித் துஷ்டத்தனம் செய்யாதே" என்று அதைச் செல்லமாகக் கடிந்து கொண்டபடி அழைத்துப் போனாள். டாலியும் இனிமேல் யாருடைய வம்புக்கும் போவதில்லை என்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டது!



## பாட்டில் பீரங்கி!

அணு யுகத்தில் வாழும் நீங்கள் பீரங்கிச் சண்டைகளைப் பற்றிச் சரித்திரப் புத்தகத்தில்தான் படிக்க முடியும். அனலைக் கக்கி அழிவை உண்டாக்கிய பீரங்கிகளைப் பொருட்காட்சிசாலைகளில்தான் இப்போது காண முடிகிறது. ஏன், நீங்களேகூட ஒரு பீரங்கியைத் தயாரிக்கலாமே! ஒரு பாட்டிலை எடுத்து அதில் கொஞ்சம் எலுமிச்சம் பழச் சாற்றை ஊற்றுங்கள். பாட்டிலைப் படுக்க வைத்தால் பழச் சாறு கீழே வழியாத அளவுதான் அது பாட்டிலில் இருக்க வேண்டும். இனி பத்திரிகைக் காகிதத்தில் (நியூஸ் பிரிண்ட்) டீஸ்பூன் அளவு பேக்கிங் பவுடரை வைத்துச் சுருட்டி அதைப் பாட்டிலுக்குள் போட்டுக் கார்க்கைக் கொண்டு மூடிவிட்டுச் சட்டென்று பாட்டிலை இரண்டு உருண்டையான முழுப் பென்சிலின் மீது படுக்க வையுங்கள். கார்க் மூடி 'ப்ளாங்' என்ற சத்தத்துடன் தெறித்து எட்ட விழும்.



பீரங்கி வெடித்ததும் எப்படிப் பின்னால் நகருமோ, அப்படிப் பாட்டில் பின்பக்கமாக உருண்டு ஓடுவதைக் காண்பாய்.

அமிலத்தின் சேர்க்கையால் பேக்கிங் பவுடரிலிருந்து உற்பத்தியான ஏராளமான கரியமிலவாயு வெளியேறும் முயற்சியில் கார்க்கை உதைத்துத் தள்ளுகிறது. காற்று வெளியேறிய வேகத்தில் பாட்டில் உருளுகிறது.

## நீராவிப் படகு

உங்கள் வீட்டில் பெரிய தண்ணீர்த் தொட்டி இருக்கிறதா? அதில் நான் சொல்லித் தரப்போகும் நீராவிப் படகை ஓடவிட்டு மகிழலாம்.

அக்காவிடமிருந்து ஒரு காலி பவுடர் டப்பாவைக் கேட்டு வாங்கிக் கொள். அதன் அடியில் ஓரத்தில் சிறு துவாரம் செய்து கொள். உன்னுடைய அலுமினிய சோப்புப் பெட்டியின் அடிப் பாகத்தை எடுத்துக்கொள். அதில், படத்தில் காட்டியுள்ளபடி பவுடர் டப்பா நிற்கும்படி கம்பிகளை வளைத்துப் பொருத்து. இனி பவுடர் டப்பாவினுள் அரை பாகத்துக்கு வெந்நீரை ஊற்றி மூடித் துவாரம் மேலே இருக்கும்படி அதைச் சோப்புப் பெட்டியின் மீது (கம்பியின் உதவி கொண்டு) படுக்க வை. பவுடர் டப்பாவுக்கும் சோப்புப் பெட்டிக்கும் நடுவில் ஒரு சிறிய மெழுகு வத்தியைக் கொளுத்தி வை. இந்தப் படகை அப்படியே தொட்டி நீரில் மிதக்க விடு. மெழுகு வத்தி பவுடர் டப்பாவில் உள்ள வெந்நீரைக் கொதி நிலைக்கு உயர்த்திய தும், டப்பாவின் அடிப் பாகத்தில் செய்துள்ள



துவாரத்தின் வழியே 'குப் குப்' என்று நீராவியை விட்டுக் கொண்டு படகு, வேகமாகத் தொட்டி நீரில் சுழல ஆரம்பிக்கும் அழகைக் கண்டு நீ மகிழலாம். இது எதனால் என்று சொல் பார்க்கலாம்.

---

உலோகப் பாத்திரங்களைத் தொட்டால் உயிருக்கே ஆபத்து ஏற்படக்கூடிய இடங்கள் உலகில் இருக்கின்றன. உயிர் போவதா? என்று வியப்படைகிறீர்களல்லவா? குளிர் மிகக் கடுமையான துருவப் பிரதேசங்கள், இமயமலையின் சிகரம் இங்கெல்லாம் உலோகங்கள் உஷ்ணத்தை வெகு சீக்கிரம் கிரஹித்துக் கொள்ளும் தன்மை வாய்ந்ததாக இருக்கும். இப்பிரதேசங்களில் நாம் உலோகப் பாத்திரங்களைத் தொட்டால் நம் உடலிலுள்ள உஷ்ணத்தை வெகு வேகமாக இவை அபகரித்துக்கொண்டு விடும். தொட்ட இடம் மரத்து ரத்தம் செத்து உணர்வற்றுப் போகும்.



உடலின் உஷ்ணம் பறிபோனால் இங்கு வாழ முடியாது. ஆகவே துருவப் பிரதேசங்களிலும் இமயமலை உச்சியை அடைய முயல்பவர்களும் தங்கள் உடல் முழுவதும் உறை அணிந்து கொண்டிருப்பார்கள். வெறும் கையால் பாத்திரங்களைத் தொட மாட்டார்கள்.

சரித்திரத்திலே சொல்லப்படும் கற்கால மனிதர்கள் இப்போதும் உலகில் காணப்படுகிறார்கள். ஆஸ்திரேலியாவில் வாழும் பூர்வ குடி மக்கள் இன்னும் அந்தக் கற்கால நிலையிலேயேதான் வாழ்ந்து வருகிறார்கள். இவர்களுக்கு உலோகங்களைப் பற்றித் தெரியாது. வில்லும் அம்பும் கூட இவர்களின் கற்பனைக்கும் அப்பாற்பட்ட ஒன்று. இவர்கள் வாழுமிடங்களோ கற்களால் ஆனவை. இவர்களின் ஆயுதம் ஈட்டி. இதன் முனையில் கூரான கல்லையோ அல்லது எலும்பையோ தான் வைத்துக் கட்டி வீசுவார்கள். வீடு என்று சொல்லும்படியாக எதுவும் இவர்களுக்கு இல்லை. சட்டி பானைகளின் உபயோகம் தெரியாது. நிலத்தைப் பண்படுத்தி உழுது விளைவிக்கவோ, மிருகங்களைப் பழக்கிப் பயன்படுத்திக் கொள்ளவோ தெரியாது. ஆனால் இவர்களின் எண்ணிக்கை மிகமிகக் குறைவு.



சென்ற இதழில் வெளியான 'முயன்றால் முடியாதது உண்டோ?' கணக்குகளுக்கு விடை:—

(1) 50, 1, 20 - 4, 10, 25 - 5, 100, 2.

(2) நாணயங்கள் வரிசைப்படி (1) - 10, (2) - 25, (3) - 1, (4) - 5. நயா பைசாக்கள்.

(3) அம்புக் குறியிட்ட வட்டத்திலிருந்து, 10, 15, 20, 25, 30, 35, 40, 45.

# பாமாலிவ் லவண்டர்

## வசீகரிக்கும் நறுமணம்....

## பெருமிதத்தையும், அழகையும் அளிக்கிறது!







வசீகரம்...பாமாலிவ் லவண்டர் டால்கம்
பெருமிதத்திற்கும், அழகிற்கும் உற்ற நண்பன்.
சிறிது பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பின்மேல்
தூவிக்கொண்டால், அதன் இனிய நறுமணம்
உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள். பாமாலிவ்
உபயோகித்து எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும்,
நறுமணத்துடனும், அழகுடனும் விளங்குங்கள்.

**பாமாலிவ் டீலக்ஸ்—மயக்கும்
17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை!**

# வேங்கடத்துக்கு

## முன்னுரை

'**வே**ங்கடம் முதல் குமரி வரை' என்ற தல வரலாற்றுக் கட்டுரைத் தொடர் முடிவுறுகிற சமயத்தில், தமிழ் அன்பர்கள் பலர், "தமிழ் நாட்டுத் தலங்களைப் பற்றி எழுதியது போலவே, வடநாட்டுத் தலங்களைப் பற்றியும் எழுத வேண்டும்; அங்கெல்லாம் சென்றால், என்ன என்ன பார்க்க வேண்டும் என்பதையெல்லாம் சொல்வாரில்லை. ஆதலால் அதையும் தாங்களே எழுத வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள். நான் அதற்கு முன் டில்லிக்கும் ஆக்ராவுக்கும் இரண்டு முறை சென்றிருக்கிறேன். சிம்லாவுக்கும் அதற்கு வடக்கேயுள்ள நார்க்கண்டா வரையும் சென்று திரும்பியிருக்கிறேன். பம்பாய், பூனா முதலிய நகரங்களுக்கும் இரண்டு மூன்று தடவைகள் சென்றதுண்டு. ஆக்ராவுக்குக் கிழக்கே சென்றதில்லை. அதோடு கட்டுரை எழுதும் அளவுக்குச் செய்திகளும் சேகரித்ததில்லை; படங்களும் எடுத்ததில்லை. ஆதலால் அன்பர்களது ஆசி பெற்று என் நெடுநாளைய ஆசையைப் பூர்த்தி செய்ய மார்ச்சு மாதத்தில் கோவை நண்பர்கள் இருவருடன் எனது வடநாட்டு யாத்திரையைக் காரிலேயே தொடங்கினேன். கிட்டத்தட்ட இரண்டரை மாத காலம், எண்ணாயிரம் மைல்களுக்கு மேல் சுற்றி, எண்ணற்ற தலங்களைப் பார்த்து விட்டுத் திரும்பியிருக்கிறேன். காஷ்மீர், அஸ்ஸாம் ராஜ்யங்களைத் தவிர மற்ற ராஜ்யங்கள் எல்லாவற்றையுமே சுற்றினேன். புகைப்படங்கள் எடுத்தேன். தல வரலாற்றை விவரமாகவே தெரிந்துகொண்டேன்.

ஒன்றே ஒன்று! வடநாட்டில் க்ஷேத்திராடனம் செய்வதை விடத் தீர்த்தாடனம் செய்வதே சிறப்புடையது என்று கருதப்படுகிறது. புராணப் பிரசித்தி உடைய கோயில்கள் இல்லாவிட்டாலும், சரித்திரப் பிரசித்தியும் கலைப் பிரசித்தியும் உடைய கோயில்கள் நிறைய இருக்கின்றன. எத்தனையோ கோயில்கள் மகம்மதியர்களால் இடித்துத் தரைமட்டமாக்கப்பட்டிருந்தாலும், எஞ்சி நிற்பவையே இந்தியாவின் கலைச் சிறப்பை எடுத்துக் காட்டக் கூடியவைகளாக இருக்கின்றன. எங்கு பார்த்தாலும் சைவமும் வைணவமும் கலந்து உறவாடிக் கொண்டிருக்கும் சிறப்பு சொல்லி மாளாது. சிவலிங்க வழிபாடு சிறந்து விளங்குவது போலவே, கண்ணன் இராமன் முதலிய அவதார மூர்த்திகளின் வரலாற்றோடு தொடர்பு கொண்ட தலங்களும் பல உண்டு. இன்னும் இந்தியாவின் கலைப் பொக்கிஷங்களான அஜந்தா, எல்லோரா, எலிபெண்டா குடைவரைகள் என்ன? கஜுராஹோ, புவனேசுவரம், கோனாரக் முதலிய கலைக் கோயில்கள்தாம் எத்தனை எத்தனை?

அதோடு, பௌத்தமும் சமணமும் உருவாக்கிய கலைக் கோயில்களும் எண்ணிறந்தவை. சமயஉணர்ச்சியையும் தேசீய ஒருமைப்பாட்டை எவ்வாறெல்லாம் நமது முன்னோர்கள் வளர்த்திருக்கிறார்கள் என்றெல்லாம் அறிந்த போது விம்மிதம் உற்றேன்; பெருமிதம் அடைந்தேன். நான் கண்டவற்றையும், கேட்டவற்றையும், அனுபவித்து அறிந்தவற்றையும் பற்றி வாசகர்களாகிய உங்களுக்குச் சொல்லவே இந்த 'வேங்கடத்துக்கு அப்பால்' என்ற கட்டுரைத்தொடரை ஆரம்பிக்கிறேன்.

ஒரு சில அன்பர்கள் "இக்கட்டுரைத் தொடர் பிரயாணக் கட்டுரையாகவே அமையலாம். தங்கள் பிரயாண அனுபவங்கள் பலருக்கும் பயன்படுவதாக இருக்குமே" என்று எழுதுகின்றனர். ஆனால் இவைகளைப் பிரயாணக் கட்டுரைகளாக எழுதும் நோக்கம் எனக்கில்லை. வழக்கம் போல் தலம் தலமாகச் சென்று, நின்று, நிலைத்து விளங்குவதாகவே கட்டுரைகள் இருக்கும். என் பிரயாண அனுபவங்களை 'எண்பது நாட்களில் இந்தியாவைச் சுற்றி' என்ற தலைப்போடு ஒரு தனிப் புத்தகமாகவே எழுதத் திட்டம்.



# அப்பால்



தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

'வேங்கடத்துக்கு அப்பால்' என்று கட்டுரைத் தொடரின் தலைப்பு அமைந்தாலும், நமது தல யாத்திரை மைசூரில் உள்ள நஞ்சன்கோட்டில் தொடங்குகிறது. காரணம் எனது தல யாத்திரை கோவையிலிருந்து தானே தொடங்கியது? சரி, வாசகர்களாகிய நீங்களும் இனி என்னுடன் சேர்ந்து யாத்திரையைத் தொடங்கலாம் அல்லவா? என்ன வருகிறீர்களா?

## 1. நஞ்சன்கோடு ஸ்ரீகண்டேசுவரர்

மக்களது பாவங்களை யெல்லாம் துடைக்கவே இயேசுநாதர் சிலுவையில் ஏறித் தம் உயிரையே தியாகம் செய்தார் என்பர். இதைவிட அரியதொரு செயலையே இறைவன் மக்களுக்காகச் செய்திருக்கிறான் ஒரு காலத்தில். கதை சுவையானதொன்று. அமுதம் பெற விரும்பிய தேவர்கள் பாற்கடலைக் கடைய விரும்பினர். அரக்கர்களையும் உடன் அழைத்துக் கொண்டனர். மேரு மலையை மத்தாக நாட்டி, வாசுகியையே கயிறாகக் கொண்டு கடைந்தனர். ஆனால் அமுதம் வருமுன்னே ஆலகால விஷமே எழுந்தது பாற்கடலிலிருந்து. நஞ்சைக் கண்டதும் தேவர்களும் அரக்கர்களும் அஞ்சி ஓடி ஒளிந்தனர். நஞ்சின் வெம்மையைத் தாங்க மாட்டாமல் தான் அவர்கள் அங்கிருந்து வெளியேறினர். இந்த நேரத்தில் இறைவனான சிவபெருமான் அங்கு வந்து சேருகிறான். எல்லோர் உயிரையும் குடிக்கும் நஞ்சினைத் தன்னுடைய கரத்தில் ஏந்தித் தானே உண்டு விடுகிறான். நஞ்சு வயிற்றுக்குள் சென்று நாயகனையே முடித்து விடக் கூடாதே என்று கருதி, பக்கத்தில் இருந்த உமை அத்தனின் கழுத்தை விட்டு வயிற்றுள் இறங்குமுன்பே கழுத்தைப் பிடித்து அமுக்கி நஞ்சினை அங்கேயே நிறுத்தி விடுகிறாள். அதனாலேயே இறைவனது கண்டம் கரியதாயிற்று. நஞ்சுண்ட கண்டன் என்ற பெயர் ஒன்றும் இறைவனுக்குப் புதிதாகச் சேர்கிறது.

இப்படி இறைவன் நஞ்சுண்டு தேவர், அரக்கர், மக்கள் எல்லோரையும் காத்த சீலத்தைச் சுந்தரமூர்த்தி நாயனார் திருப்புன்கூர் தேவாரப் பதிகத்தில் பாராட்டிப் பாடுகிறார்:—



கோல மால் வரை
மத்தென நாட்டி
கோளரவு சுற்றிக்
கடைந்து எழுந்த
ஆல நஞ்சு கண்டவர்
மிக இரிய
அமரர்கட்கு அருள்
புரிவது கருதி
நீலமார் கடல்
விடந்தனை உண்டு
கண்டத்தே வைத்த
பித்த! நீ செய்த
சீலம் கண்டு நின்
திருவடி அடைந்தேன்
செழும் பொழில்
திருப்புன்கூர் உளானே

இப்படி அன்று நஞ்சை உண்டு தேவர்களையும் மற்றவர்களையும் இறைவன் காவாவிட்டால், இவ்வுலக மக்களெல்லாம் எப்படி உயிர் பிழைத் திருப்பார்கள் என்றே கேட்கிறார் குற்றாலத் தலபுராணம் பாடிய திரிகூட ராஜப்ப கவிராயர்:—

பாரோடும் விண்ணோர்கள்
பறந்தோட, புரந்தரனார்
பதிவிட்டு ஓடத்
தேரோடும் கதிர் ஓட
மதி யோட, விதி யோட
திருமால் மேனி
காரோடத் தொடர்ந் தோடும்
கடல் விடத்தைப் பரமன்
உண்டு
காவா விட்டால்
ஆரோடி நீர் இருப்பீர்?
எங்கோடி உயிர்
பிழைப்பீர்?
அறிவிலீர்காள்!

என்பது தான் அவரது கேள்வி. ஆம்! நஞ்சைக் கண்டதும் தேவர்கள் எல்லாருமே ஒருவரையொருவர் விஞ்சியவராய் அல்லவா ஓடிக்கொண்டிருக்கிறார்கள். அந்த நேரத்தில் அல்லவா எல்லோரையும் ஓட ஓட அடிக்கும் நஞ்சையே உண்டு உலகத்தையே காக்கிறார் நீலகண்டர். இந்த நீலகண்டரைத் தமிழ் நாட்டுத் தலங்களில்



பாட்னு ரெவின்யூ போர்டு அங்கத்தினர் திரு கே. ராமன் ஐ. ஸி. எஸ். அவர்களின் புதல்வி சௌ கோமதிக்கும் திரு வேங்கட ராமனுக்கும் கல்யாணம் நடைபெற்றது.



'டெக்கான் கிரானிகிள்' மானேஜிங் பார்ட்னர் திரு கே. ஆர். நந்தகோபால் அவர்களின் சகோதரர் திரு கோவிந்தராஜுலுக்கும் சௌ நளினிக்கும் திருமணம் நடந்தது.

---

பல இடங்களில் தேடினேன். நீலகண்டம் என்ற திருநாமத்தோடு ஓர் இடத்திலாவது அவர் என் கண்ணுக்கு அகப்படவே யில்லை. கடைசியாக ஆசாமியைக் கண்டுபிடித்தேன். அந்த அண்டைநாடான மைசூர் ராஜ்யத்தி லுள்ள நஞ்சன்கோடு என்ற தலத்தில்.

நஞ்சன்கோடு என்ற உடனேயே நமக்கு ஞாபகம் வருவது அங்கு செய்யப்படும் பல் பொடிதான். அதனால்தான் நஞ்சன்கூடு என்று அந்த ஊரை அழைக்கிறார்களோ என்னவோ? மேலும் நஞ்சன்கோடு என்று அழைப்பதற்கும் பக்கத்தில் மலை ஒன்றையும் காணோம். நஞ்சுண்ட கண்டன் இருக்கும் ஊரானதால் நஞ்சன்கோடு என்று பெயர் பெற்றது போலும். இந்த ஊர் மைசூர் சாம்ராஜ் நகர் ரயில் பாதையில் மைசூருக்குத் தெற்கே பன்னிரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. மைசூரிலிருந்து காரிலும் போகலாம். பஸ்ஸிலும் போகலாம். கோயில் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து நாலு பர்லாங்கு தூரத்தில் இருக்கிறது. மைசூர் சாம்ராஜ் நகர் பெரும் பாதையை அடுத்து இருக்கிறது. கோயிலுக்குச் செல்பவர்கள் காலை ஒன்பது மணி முதல் ஒரு மணிக்குள் செல்ல வேணும். அதன் பின் கதவை அடைத்து மாலை 5.30 மணிக்குத்தான் திறக்கிறார்கள். பலத்த போலீஸ் பாரா எல்லாம் இருக்கிறது. கோயில் பிரமாண்டமான கோயில். மதில் சுவர்கள் எல்லாம் உயரமானவை. மதில் சுவரில் எல்லாம் சிவனது மூர்த்தங்கள் சுதையால் செய்யப்பட்டிருக்கின்றன. அவை மதிலுக்கே ஓர் அழகைத் தருகின்றன. கோயில் வாயிலைப் பெரியதொரு கோபுரம் அழகு செய்கிறது. இந்தக் கோபுரம் மின்விளக்கு ஒளியால் மேலும் அழகு செய்யப்பட்டிருக்கிறது. அந்தக் கோபுரத்தையும் முந்திக் கொண்டு ஒரு மண்டபம் நல்ல சிமிண்டால் கட்டியது போல இருக்கும். ஆனால் சிமிண்ட் நிறத்தில் உள்ள கல்லால் சமைத்த தூண்கள்தான் அம் மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன. அந்த மண்டபத்தையும் வாயிலையும் கடந்தே உள்ளே செல்ல வேண்டும். அங்குள்ள வெளிப்பிராகாரம் அவ்வளவு விசாலமானதல்ல. கோயில் மண்டபத்தின் முகப்பில் ஒரு நந்தி இறைவனை நோக்காமல், நம்மை எதிர்கொண்டழைப்பது போல் பிரதான சந்நிதிக்குக் கொஞ்சம் வடபக்கமாய் இருக்கும். அதனை அலங்கார நந்தி என்கின்றனர். பெயருக்கு ஏற்ப நல்ல அழகான நந்தி. கருங்கல்லில் செய்தது. இந்த நந்தியைத் தொழுது விட்டு, தென் பக்கமாகத் திரும்பிக் கோயிலின் தெற்குப் பிராகாரத்தில் நடக்கலாம். அங்கெல்லாம் சிறு சிறு கூடங்கள். ஒவ்வொரு கூடத்திலும் மூன்று மூன்று விக்கிரகங்கள். அறுபத்து மூன்று நாயன்மாரையும், மற்றைய தேவர்களையும் அங்கே பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். எல்லோரையும் 'நாதர் நாதர்' என்றே அழைக்கிறார்கள். இந்தப் பிராகாரத்திலேயே இக்கோயிலைப் புதுப்பித்த மும்முடி கிருஷ்ண தேவராயர் தம் மனைவியர் நால்வருடன் எழுந்தருளியிருக்கிறார். இந்த மண்டபத்துக்கு எதிரேதான் அவர் பிரதிஷ்டை செய்த தண்டபாணி நிற்கிறார். இந்தத் தண்டபாணியின் வடிவில் ஒரு விசேஷம். அவர் தலைக்கு மேலே ஐந்து தலை நாகம் குடையாக விரிந்து நிற்கிறது. எட்டியிருந்து பார்த்தால் கண்ணன் வடிவு போலவே இருக்கும். அருகில் போய்ப் பார்த்தால்தான் அது தண்டபாணியான முருகன் வடிவு என்று தெரியும். அவர் காலடியில் உள்ள பீடத்திலுமே மும்முடி கிருஷ்ண தேவராயரது வடிவம் செதுக்கப்பட்டிருப்பதையும் காணலாம். இந்தத் தண்டபாணியைத் தரிசித்தபின் மேலே நடந்தால் கன்னி மூலையில் வடக்கு நோக்கியவராய் ஒரு விநாயகர் இருக்கிறார். இவரைப் பிரசன்ன கணபதி என்கிறார்கள். நல்ல காத்திரமான வடிவம். இவர் வெண்ணெய், சந்தனம் எல்லாம் சாத்திக் கொண்டிருப்பார். மேலைப் பிராகாரத்திலே பல லிங்க வடிவங்கள்—அவைகளில் முக்கியமானவர்கள் சகஸ்ர லிங்கர், முருனேசுவரர், பாதாளேசுவரர், தீர்த்தேசுவரர், அக்ரேசுவரர் என்பவர்களே. இவர்களையும் வணங்கி விட்டு வடக்குப் பிராகாரத்தையும் கடந்து அர்த்தமண்டபத்துக்கு வரலாம். அங்கிருந்து நஞ்சுண்டேசுவரரைத் தரிசிக்கலாம். இவரை ஸ்ரீ கண்டேசுவரர் எனவும் அழைக்கின்றனர். இன்றைய நாகரிக உலகில் நடப்பது போல, நஞ்சுண்டகண்டேசுவரர் என்ற பெயர் நீளமாக இருப்பதால் பெயரை ஸ்ரீ கண்டன் என்று சுருக்கி வைத்துக் கொண்டார் போலும். இவருக்குப் படைக்கும் நைவேத்தியத்தில் சிறப்பானது சுகண்டித சர்க்கரை. கற்கு, சர்க்கரை, வெண்ணெய் மூன்றையும் கலந்து வைத்திருப்பதே சுகண்டித சர்க்கரை. அன்று அவர் உண்ட நஞ்சு கண்டத்திலேயே நின்று விட அதை

ஜீரணிக்கவே இப்படிச் சுக்கையும் வெண்ணெயையும் சர்க்கரையோடு கலந்து உண்டு வருகிறார் போலும்.

நஞ்சுண்ட ஸ்ரீகண்டரைத் தரிசித்தபின் அன்னையின் சந்நிதிக்குச் செல்லலாம். அன்னையைப் பார்வதி என்றே அழைக்கின்றனர். அன்னை சர்வாலங்கார பூஷிதையாகவே இருக்கின்றாள். அவள் அணிந்திருக்கும் நகைகளின் மதிப்பு ஒரு கோடி ரூபாய் என்கின்றனர். அத்தனை நகைகளையும் மூல அம்பிகைக்கே சாத்தி வைத்திருக்கின்றனர். இதனைப் பார்த்தபின்தான், இந்தக் கோயிலுக்கு இத்தனை போலீஸ் பாதுகாப்புகள் எல்லாம் ஏன் ஏற்படுத்தியிருக்கிறார்கள் என்று தெரிந்தது. இந்த அன்னையின் சந்நிதிக்கு வடபுறம் ஒரு சிறு கோயிலுள் ஒரு லிங்கம் பிரதிஷ்டை ஆகியிருக்கிறது. இதனை மரகதலிங்கம் என்றும் ஹைதர் லிங்கம் என்றும் அழைக்கின்றனர். மைசூரை ஹைதர் அலி ஆளுகிற போது அவனது பட்டத்து யானை குருடாகியிருக்கிறது. அவன் பிரார்த்தித்துக் கொண்டபடி நஞ்சுண்டேசுவரர் அந்த யானையின் குருட்டை நீக்கியிருக்கிறார். அதற்காக ஹைதர் பிரதிஷ்டை செய்த லிங்கம் இது என்று வரலாறு கூறுகிறது.

அன்னைக்கும் அத்தனுக்கும் இடையிலே ஒரு சந்நிதி. அந்தக் கோயிலில் நாராயணன் நிற்கிறார். இவரையே தேவ தேவன் என்கின்றனர். 'தேவர்கோ அறியாத தேவ தேவன்' என்ற பெயர்தான் எவ்வளவு இனிமையாக இருக்கிறது. இவர் கோயிலுக்குப் பின் சண்மசர் சந்நிதி இருக்கிறது. அந்தச் சந்நிதிக்கு மேலேயுள்ள மண்டபத்தில் ஒரு வில்வ மரம் தழைத்து ஓங்கி வளர்ந்திருக்கிறது.

இந்தக் கோயிலின் முக்கியமான திருவிழா ரதோத்சவம்தான். கோயிலின் வட பக்கத்தில் உள்ள காலி இடத்தில் தேரை நிறுத்தி வைத்திருக்கிறார்கள். ரதம் நீண்டு வளர்ந்திருக்கிறதே ஒழிய, வளர்ச்சிக்கேற்ற பருமனுடையதாக இல்லை. அலங்காரம் பண்ணிப் பார்த்தாலும் காம்பீர்யம் இராது. ஏதோ நெட்டை நெட்டையாகத்தான் தெரியும். இந்தக் கோயில் மிகவும் புராதனமான கோயில். பழைய காலத்தில் சிறிய கோயிலாக இருந்து பின்னால் விரிவாக்கப்பட்டிருக்க வேண்டும். காரச சூரி நந்தி ராஜா என்பவரே விரிவாக்கியவர்களில் முதல்வர் என்று வரலாறு கூறுகிறது. பின்னால் இவான் பூர்ணையா என்பவர் மேலும் விரிவாக்கியிருக்கிறார். என்றாலும் மூன்றும் கிருஷ்ண ராஜ உடையாரே இன்றைக்கு இருக்கும் பெரிய கோயிலைக் கட்டியவர் எனத் தெரிகிறது. இக்கோயில் பதின்மூன்று பதினான்காம் நூற்றாண்டுகளிலே தான் விரிவடைந்திருக்க வேண்டும். இக்கோயிலில் 1529-ம் வருஷத்துக் கல்வெட்டு ஒன்றும் 1643-ம் வருஷத்துக் கல்வெட்டு ஒன்றும் இருக்கின்றன. முந்தையது விஜயநகர மன்னன் கிருஷ்ண தேவராயர் காலத்தியது. பிந்தியது தளவாய் விக்கிரம ராஜா காலத்தியது என்று சரித்திர ஏடுகள் கூறுகின்றன.

கோயிலுக்குக் கொஞ்சம் வடபுறம் தள்ளிக் கபினி நதி ஓடுகிறது. இங்கேதான் குண்டுல நதி கபினியுடன் கலக்கிறது. பின்னர் இந்தக் கபினி நரசபூர் பக்கம் காவிரியுடன் சென்று கலக்கிறது. கபினி நதிக் கரையில் பரசுராமருக்கு ஓர் ஆலயம் இருக்கிறது. தமிழ் நாட்டில் பரசுராமர் ஆலயம் மிக மிக அபூர்வம் தானே. ஆதலால் அக்கோயில் சென்று பரசுராமரையும் வணங்கியே திரும்பலாம். பரசுராமர் மிகவும் கோபக்காரர் ஆயிற்றே. அதனால் அவரை வணங்காமல் திரும்பி விடக்கூடாதுதான். இக்கோயில் லிங்கம் கட்டிகள் என்ற வீர சைவர்களால் பராமரிக்கப்படுகிறது. இங்கு ஒரு பெரிய மந்திரஸ்தாபனம் ஆகியிருக்கிறது என்கின்றனர்.

இத்தலத்தில் ராகவேந்திர சுவாமிகளால் நிர்மாணிக்கப்பட்ட மாத்வர்கள் மடம் ஒன்றிருக்கிறது. இந்த மடம் பதினைந்தாம் நூற்றாண்டில் ஸ்தாபிக்கப்பட்டு இன்று வரையில் மடாதிபதிகள் இருந்து வந்திருக்கின்றனர். துவைத தத்துவத்தை விளக்கும் அரிய நூல்கள் பல இவர்கள் எழுதியிருக்கிறார்கள். இங்குள்ள செப்பேடு ஒன்று 1580-ம் ஆண்டில் எழுதப்பட்டிருக்கிறது. அதன் மூலம் மாத்வர்களது குரு விஜயேந்திரர், தஞ்சை அப்பைய தீட்சிதர், காஞ்சிபுரத்து வைஷ்ணவ மதாச்சாரியரான தத்தாச்சாரியர் மூவரும் தஞ்சை நாயக்க மன்னரான செவப்ப நாயக்கர் சபையில் தங்கள் தங்கள் மதாச்சாரத்தைக் குறித்துத் தர்க்கித்தனர் என்று தெரிகிறது. வெற்றி யாருக்குக் கிடைத்ததோ? நமக்கு ஏன் அந்த விசாரணை எல்லாம். நாம் நஞ்சுண்டகண்டனை வணங்கி அருள் பெற்ற மன நிறைவோடேயே திரும்பலாம். (தொடரும்)

---

கொழும்பு, 'வீரகேசரி' டைரக்டர்கள் சபைத் தலைவர் திரு சுப்பிரமணிய செட்டியார் அவர்களின் புதல்வர் திரு அரசகேசரிக்கும் சௌ. சிட்டாளுக்கும் திருமணம் நடந்தது.



காருகுறிச்சி திரு என். எஸ். ராமசுவாமி அய்யர் அவர்களின் குமாரர் திரு மணிக்கும் சௌ. லக்ஷ்மிக்கும் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.



# ஒட்டப்பந்தயம் 5

கதை: எஸ். சுந்தரராஜன்

சித்திரம்: செல்லம்

தன் மகள் பாரிஜாதம் டாக்டரைக் காதலிக்கிறள் என்பதை அறிந்த பசுபதியின் உடல் பூரண குணமடைந்து விடுகிறது!







எசமான், கும்பிடுறேன்! பட்டணத்து வைத்தியர் இங்கே இருக்காருன்னு கேள்விப்பட்டு வந்திருக்குங்க.

என்ன சமாசாரம்?

எம் பொஞ்சாதி இடுப்பு நோவு கண்டு துடியாத் துடிக்குது. ஐயா வந்து ஏழையைக் காப்பாத்தணும்.

ஐயையோ, பிரசவ கேஸா! ஆயுதக் கேஸுன்னு மருந்து வச்சி சொல்ற-னா ஏமே!

போய் வாருங்கள் டாக்டர் பாவம். என்ன யோசனை?

இன்னும் மீசையே உதவிக்கு நர்ஸ் இருந்தால் வசதி-யாக... பரவாயில்லை ஆறுமுகம் கிளம்பு.


பத்சு, தைரியமாப்போ, 'வெந்நீரைக் கொண்டா, ஒத்தடம் கொடு' அப்படி இப்படின்னு அதிகாரம் பண்ணு, போதும்.
வைத்தியம்...?
அதைக் கடவுள் பண்ணுவார்....


உண்மையில் கடவுள் தான் வைத்தியம் பண்ணினார். பத்சு வீட்டினுள் நுழைந்ததும்...
குவா... குவா....!
பார்த்தியாடி பட்டணத்து டாக்டர் மகிமையை? வீட்டுக்குள்ளே காலடி வைச்சதுமே குழந்தை பொறந்துட்டுது!


எல்லாரும் கொஞ்சம் விலகி நில்லுங்க.
இந்தாப்பா, இனிப் பயமில்லே. இந்த மருந்தை வாங்கிக்கோ.


ஐயா, எம்பொஞ்சா-திக்கு உயிர் கொடுத்த தெய்வம் நீங்க.
அப்படிச் சொல்லாதே நானா பிரசவம் பார்த்தேன்?
நல்லாயிருக்கு. உங்க கைராசியாலே தான் ஆபத்து இல்லாம...


ஆறுமுகம் எல்லாம் சொல்லி வைத்த-மாதிரி நமக்குச் சாதகமாகவே முடிகிறதே... ஆச்சரியமாக இல்லே.
இதைத்-தான்டா அதிர்ஷ்டம் என்று சொல்லு-வது.


இதே சமயத்தில் பங்களாவில்...
என்னப்பா பாண்டித்துரை! பட்டணத்தில் ஒரேயடியா டேரா போட்டுட்டே.
சொந்தவேலை கொஞ்சமிருந்தது. டாக்டர் சேகரை அனுப்பினேன். ஆனா அவர் எங்கேயோ போய்ச்சேர்ந்-துட்டார்.


அதுதான் இல்லே. நம்ம ஊர் ஸ்டேஷனில் இறங்க மறந்து தூங்கிக் கொண்டிருந்தவரை நான் போய் எழுப்பிக் கூட்டி வந்துவிட்டேன். விருந்தாளி!


டாக்டர்! டாக்டர்! மூன்றே நாளில் என் முதுகு வலி போன இடம் தெரியல்லியே
டாக்டர் சேகர் இங்கே வந்தாரா? இருக்கமுடியாது. அவர்தான், வரும் வழியில் ரயிலிலிருந்து தவறி விழுந்து இறந்துவிட்டாரே...


என்...ன...?


அப்படியானால் இங்கே வந்தது போலி டாக்டரா?
சந்தேகமென்ன? டாக்டர் சேகர் இறந்து போனதால் தானே இதோ, வேறு டாக்டரை அழைத்து வந்திருக்கிறேன்.


யாரோ காலிப்பயலுக. டாக்டரா வேஷம் போட்டு ஏமாத்தி இருக்காணுங்க... டேய், வீரா, வேலாண்டி, கருப்பா எல்லாரும்
பய வரட்டும் எசமான். தொலுக்கித் தள்ளிப் புடறோம்.


அப்பா, அவரை ஒன்றும் செய்ய வேண்டாம். உங்கள் முதுகு வலி குணமாகிறதே.
ஐயோ, அதை நெனச்சாத்தான் உடம்பு நடுங்குது. மனசிலே தோணின மருந்தை எல்லாம் எழுதிக் கொடுத்தான்.
விஷத்தைக் கொடுத்திருந்தால் என்ன ஆவது?


அதே சமயம் - மாட்டு வண்டி பங்களாவிற்குள் நுழைகிறது.
அதோ வருகிறார்கள். எல்லோரும் மறைவாக நில்லுங்கள்.
ஐயோ! ஆபத்தை நோக்கி சாவகாசமாக வருகிறார்கள்!



(தொடரும்)




### அத்தியாயம் 2

## சுத்த வீரன்

துறைமுகத்தை விட்டு வெளியே வந்த வடிவேலு, ராணுவ வீரர்கள் சிலர் சாலை ஓரமாக அணிவகுத்து நிற்பதைக் கண்டான். யுத்த காலத்தில் இது போன்ற காட்சிகள் சர்வ சாதாரணமானவைதான். என்றாலும் அங்கிருந்தவர்களுள் தன்னுடைய நண்பர்கள் ஓரிருவரையும் அடையாளம் கண்டு கொண்டதும் அவன் நடையின் வேகம் தணிந்தது. இன்னும் சற்றுக் கூர்ந்து கவனித்தான் வடிவேலு. சந்தேகமேயில்லை, அவனுடைய 'கம்பெனி'யைச் சேர்ந்த சுமார் நூறு பேர்களும் அங்கே இருந்தார்கள்!

'எதற்காக?' என்று எண்ணமிட்டான், விடுமுறையில் ஹார்பருக்கு வந்திருந்த வடிவேலு. நண்பனை வழி அனுப்பி வைப்பதற்காக இந்தத் தனிச் சலுகையைக் கோரிப் பெற்றிருந்தான் அவன். முகாமை விட்டுக் கிளம்புகிற வரையில் அன்றைக்குத் தங்களுக்கு வேலை தரப்படும் என்பதாக அந்த 'செக்ஷனி'லிருந்த யாருமே எதிர்பார்க்கவில்லை. அத்தகைய செய்தி ஏதும் வந்ததாகத் தெரியவில்லை. 'ஆனாலும் லெப்டினன்ட் மைக்கேல் கூடவா மேலிடத்து உத்தரவுகளைப்பற்றி முன்கூட்டியே அறியாமலிருந்திருப்பார்? முக்கிய அலுவல்கள் எங்களுக்காகக் காத்திருக்கும் போது, அதைக் காரணமாகச் சொல்லித் தடை விதிப்பதற்குப் பதில் என்னைத் தட்டிக் கொடுத்துக் கண் சிமிட்டிப் போய்வருமாறு சைகை காட்டினாரே! துணிச்சலான ஆசாமிதான்!'

அரை மணி நேரத்துக்கு முன்னால் துறைமுக வாயிலுக்குள் வடிவேலு நுழைந்து செல்கையில் இவர்களில் யாருமே அவன் கண்களுக்குத் தட்டுப்படவில்லை. அப்படியிருக்கத் திடீரென்று இங்கே எப்படி முளைத்தார்கள் இந்த வீரர்கள்? ஒருவேளை கடைசி நிமிஷத்தில் வந்த திடீர்க் கட்டளையாக இருக்குமோ? சற்றுத் தொலைவில் 'ரெட் கிராஸ்' லாரிகள் சிலவும் நின்றன.. அவற்றின் அருகே 'ஸ்ட்ரெச்சர்' தூக்குபவர்களும் முதலுதவி செய்பவர்களும் வைத்திய நிபுணர்களும் ஆயத்தமாக நின்றனர்.

ஸுபேதார் கேவல்சிங் பார்வையில் விழுந்து விட்டான் வடிவேலு. விரைப்பாக நடந்து போய் லெப்டினன்ட் மைக்கேலிடம் வடிவேலு இருக்கும் திசையைக் கண்ஜாடையாலேயே சுட்டிக் காட்டிவிட்டுத் தானிருக்க வேண்டிய இடத்துக்கே திரும்பினான் அவன்.

விடுவிடுவென்று வடிவேலுவிடம் வந்தான் மைக்கேல். "இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய் நீ?"

"துறைமுகத்துக்கு வருவதற்காகத்தான் நான் லீவு வேண்டுமென்று கேட்டேன். என் நண்பனொருவன் இந்தியாவுக்குப் பயணமாகிறான் இன்றைக்கு."

"கப்பலில் ஏறி விட்டானல்லவா?"

"ஓ — யெஸ்."

"அப்படியானால் இன்னும் எதற்காக இங்கே தாமதிக்கிறாய்?"

"அவசியமானால் நான் இப்போதே டியூட்டியில் சேர்ந்து விடுகிறேன். ஆட்சேபணை இல்லை."

"வேண்டாம் கிடைத்த சந்தர்ப்பத்தை நன்றாகப் பயன்படுத்திக்கொள். சிங்கப்பூரைச் சுற்றிப் பார்! சினிமாவுக்குப் போ, கிளப்புகளுக்குள் நுழைந்து விட்டு வா. குடி, கூத்தாடு, எதை

வேணுமானாலும் செய்; ஆனால் வெட்டிப் பொழுது போக்கும் முழுச் சோம்பேறி போல் இங்கே சுவரில் சாய்ந்து கொண்டிராதே. போய்விடு சீக்கிரம்!''

தன்னை அங்கிருந்து துரத்தி அடிப் பதிலேயே மைக்கேல் கண்ணும் கருத்துமாய் இருப்பதாய்த் தோன்றியது வடிவேலுவுக்கு. தயங்கினான் அவன்.

''எந்த வினாடியிலும் லெப்டினன்ட் கர்னலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன் நான். ஓடு!'' என்றான் மைக்கேல்.

ஒரு சல்யூட் அடித்து விட்டு அங்கிருந்து விரைந்தான் வடிவேலு.

மைக்கேலுடைய பரபரப்புக்குக் காரணம் புரிந்தது அவனுக்கு. அந்த உயர்தர ராணுவ உத்தியோகஸ்தர் அங்கு வந்ததும் யதேச்சையாகத் தன்னைக் கண்டு விட்டு ஏதேனும் விசாரித்தால், பின்னர் மைக்கேலின் பாடு திண்டாட்டமாகும். வடிவேலுவிடம் அதிகார வரம்பை மீறி விசேஷ அனுதாபம் காட்டியதற்காக மைக்கேலை அவர் கோபித்துக் கொள்ளவும் செய்யலாம்.

மனத்துக்குள்ளேயே மைக்கேலை வாழ்த்தினான் வடிவேலு. அவனுடைய சகாக்களைப் போலவே சிலையாகச்சமையுமாறு அவனையும் இழுத்துப் போடாமல், 'இந்த ஒரு நாளை வடிவேலு மனம் போன போக்கில் சந்தோஷமாகக் கழிக்கட்டுமே?' என்று பெருந்தன்மையுடன் விட்டு விட்டானல்லவா மைக்கேல்? என்னதானிருந்தாலும் தன்னிடத்தில் தனியானதோர் அபிமானம் மைக்கேலுக்கு இருக்கத்தான் செய்கிறது என்று நினைத்தான். இதனால், அசைக்காத போதிலும் விழிகளை உருட்டிப் பொறுமை குடிகொண்ட பார்வையில் அவனை ஊடுருவத்தான் செய்தனர்.

''முட்டாள்கள்!'' என்று தனக்குள்ளேயே கூறிச் சிரித்தான் வடிவேலு. சகாக்களை விட்டு வெகு தூரம் வந்து விட்ட தைரியத்தில் சீட்டி அடித்துக் கொண்டே நடந்தான். உண்மையில் மைக்கேலுக்குத் தன் மீது ஓரளவுக்குப் பற்றுதல் விழுந்திருந்தால் அது எதனால் என்பது வடிவேலுவுக்கு நன்றாகத் தெரியும். முகஸ்துதியினால் உண்டானதல்ல அது. முரட்டுத்தனத்தினால் ஏற்பட்டது. மைக்கேலை எதிர்க்கிற நெஞ்சுறுதி வடிவேலுவுக்கு இருந்தது. அதுவே மைக்கேல் அவனிடம் தனி அன்பு செலுத்தத் தூண்டுகோலாகவும் அமைந்தது! இதை மைக்கேல் ஒருகாலும் தனக்குத்தானே கூட ஒப்புக் கொள்ளவே மாட்டான்; ஆனால் அது தான் நிஜம். ஆடுகளைப் போல் அடங்கி ஒடுங்கி நடப்பவர்களையே கட்டி மேய்த்தவனுக்கு இளம் சிங்கத்தைப் போல சீறி கொண்டு எழுகிற ஒருவனையும் சமாளிக்க வேண்டியிருப்பதில் ஓர் அலாதி இன்பம்!

முதன் முதலாக அப்படி அவனிடம் தான் சீறி எழுந்த சந்தர்ப்பத்தை எண்ணிப் பார்த்தான் வடிவேலு. மலாயாவுக்கு வந்து சேர்ந்த சில நாட்களுக்



காக்காய் பிடிக்கும் கலையில் கைதேர்ந்தவன் என்று வடிவேலுவைப் பற்றி அவன் தோழர்கள் சிலர் முடிவு கட்டிவைத்திருந்தார்கள். சற்று முன்னால் கூட அவனுடைய செக்ஷனைச் சேர்ந்த மற்றச் சிப்பாய்கள், விதி முறைகள் இடம் தராததால் உடலை

# பனாமா

## அழகு சாதனங்கள்

பனாமா அழகு சாதனங்கள் உங்களுக்கு அருமையான முகப்பொலிவைத் தருகின்றன. பனாமா அழகு சாதனங்களான முகப் பவுடர், டால்கம் பவுடர், பிராக்ரான்டால்க், ஷெப்ரான் ஸ்னோ, போமேட் உங்களை அழகுறச் செய்வதன்றி உங்களுடைய தோலையும் வளமுறச் செய்து பாதுகாக்கிறது. உங்களுடைய அருமையான கூந்தலுக்கு பனாமா பிரிலியன்டைனைத் தவிர வேறு சிறந்தது இல்லை.

அந்த
எழிலான
பார்வைக்குத்தான்!




வைஜயந்திமாலா
''ஜவானி-இ-ஹவா''வில்

பனாமா பிரைவேட் லிட்
கல்கத்தா-பம்பாய்-புது டில்லி

ஸோல் ஏஜன்டுகள்

லாலா கோபிகிருஷ்ண கோகுலதாஸ், 114, தங்கசாலை வீதி, சென்னை-1

குள்ளாகவே நடைபெற்றது அந்தச் சம்பவம்.

துப்பாக்கி பிரயோகப் பயிற்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஸுபேதார் கேவல்சிங் மளமளவென்று உத்தரவுகளைக் கக்கிக் கொண்டிருந்தான். அவன் சொற்படி கேட்டுச் சிப்பாய்கள் தரையில் குப்புற விழுந்து, துப்பாக்கியின் அடிப்பாகத்தைத் தோளில் பொருத்தி, தொலைவில் இருந்த பலகையைக் குறி பார்த்துச் சுட்டார்கள். பலகையில் சிறிதும் பெரிதுமான வட்டக்கோடுகள் வரையப்பட்டிருந்தன. வெளிப்புறத்தில் பெரிய வட்டமும் பின்னர் சிறுத்துக் கொண்டே வந்து மையத்தில் மிகச்சிறியதொரு வட்டமுமாக அமைந்திருந்தன. மையத்தைக் குண்டினால் துளைக்க முயலுவதே வீரர்களின் வேலை இப்போது.

வடிவேலுவின் முறை வந்தது. பூமியில் படுத்து அணுவளவும் பிசகாமல் சுட வேண்டுமென்கிற ஆர்வத்தோடு இலக்கின் மீது குறி வைத்தான் அவன்.

'டுமீல்! டுமீல்!' என்று அவனுக்கு மிக அருகில் தரையில் குண்டுகள் பாய்ந்தன. அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்த அவன், மைக்கேல் கைத் துப்பாக்கியின் தோட்டாக்களை வெடித்துத் தீர்த்துக் கட்டியிருப்பதைக் கண்டான்.

''எதிரியின் ஆறு குண்டுகள் உன் உடலைத் துளைத்து விட்டன. நீ செத்து விட்டாய்'' என்று ஆங்கிலத்தில் கூறினான், கால்களை அகட்டி வைத்து நின்று கொண்டிருந்த மைக்கேல். ரிவால்வரை அதன் உறைக்குள் மீண்டும் செருகிப் பித்தானைப் போட்டு விட்டுக் கைகளைத் தூக்கக் கட்டினான்.

''நீ ஆற அமரக் குறி வைத்துச் சுடும் வரையில் ஜப்பான்காரன், 'ஐயோ பாவம்!' என்று காத்திருப்பானா? உன் சடலத்தைத் தன்னுடைய பூட்ஸ் காலால் மிதித்து அரைத்துத் துவைத்துக் கொண்டு அவன் வெகு தூரம் முன்னேறிப் போயே போய் விட்டான்!''

ரோசம் பொத்துக் கொண்டு வந்தது வடிவேலுவுக்கு. மீண்டும் அந்தப் பயிற்சியைக் குறுகிய காலத்தில் செய்து காட்டினான். அவசரப்பட்டதில் குறி தவறி விட்டது.

மைக்கேல் வெறுப்புடன் சிரித்தான். ''என்ன கற்றுக் கொடுத்தார்கள் உங்களுக்கு இந்தியாவில்? அரைகுறைப் பயிற்சி பெற்ற உதவாக்கரைகளாகப் பொறுக்கி எடுத்து இங்கே அனுப்பினார்களா ஜப்பானியருடன் போராட?'' என்று கேட்டான். சோல்ஜர்கள் அனைவரையுமே தன்னெதிரே வந்து நிற்குமாறு பணித்தான். ''ஜப்பானியச் சிப்பாய்களை இலேசுப்பட்டவர்களாக நினைக்காதீர்கள்! பலத்த ஏமாற்றத்துக்குள்



''என்னங்க! வியாபாரம் எப்படி இருக்கு?''
''வியாபாரமே இல்லிங்க! 'ஈ' ஓட்டிக்கிட்டு இருக்கேன்!''
''கையில் என்ன டப்பி?''
''கடையிலே ஓட்டறதுக்கு ஒரு 'ஈ'கூட இல்லாம ஓட்டியாச்சு! அதுக்குத்தான் புதுசா 'ஈ' பிடிச்சுக்கிட்டுப் போறேன்.''

ளாவீர்கள். உங்களை எச்சரிக்கிறேன்! அலட்சியமாயிருக்காதீர்கள்!'' என்றான். பிறகு மற்ற அனைவரையும் உற்றுக் கவனிக்குமாறு சொல்லி விட்டு வடிவேலுவுக்கு மட்டும் பயிற்சி அளிக்கத் தொடங்கினான்.

பத்து நிமிஷங்களுக்குள் போதும் போதும் என்றாகி விட்டது வடிவேலுவுக்கு. 'இவனென்ன ராணுவ லெப்டினண்டா? அல்லது எமகிங்கரனா?'

அத்துடன் அவனை விட்டுவிடவுமில்லை மைக்கேல். செகண்டுகளைக் கணக்காக அளந்து விடுகிற கடிகாரமொன்றைப் பையிலிருந்து எடுத்தான் அவன். அதில் கண்களைப் பதித்தவாறே வடிவேலுவுக்குக் குறி பார்த்துச் சுடுமாறு கட்டளையிட்டான். அதற்கு அவன் எடுத்துக் கொண்ட நேரத்தைக் கணித்தான்.

''சரியாக மூன்றரை விநாடிகள் ஆகியிருக்கின்றன. மிகவும் அதிகம். இதில் ஒரு விநாடியையாவது கட்டாயமாகக் குறைத்தாக வேண்டும் நாம். அதுவரை உனக்குத் தொந்தரவு கொடுக்கத்தான் போகிறேன்! ரெடி! பயர்!''

இன்னும் இருபது முப்பது தடவை பூமியில் விழுந்து எழுந்த பிறகு வடிவேலுவினால் தாங்க முடியவில்லை. இரைக்க இரைக்க நின்றான் அவன். கல்நெஞ்சத்தைப் பிரதிபலிக்கும் புன்முறுவலுடன், ''அரை விநாடியைத் தானே குறைத்திருக்கிறோம்?'' என்றான் மைக்கேல்.

வடிவேலுவுக்குப் பொறுக்கவில்லை. வந்தது வரட்டும் என்று அசாத்தியமான நெஞ்சழுத்தத்துடன் அவன் துப்

பாக்கியை மைக்கேலின் பக்கமாக நீட்டி விட்டான், 'செய்து காட்டுங்கள்!' என்று சவால் விடுகிற பாணியில்.

கொடூரமானதொரு காட்டுப் பூனையினுடையது போல் மைக்கேலின் கண்கள் கோபத்தில் பளபளத்தன. அந்தக் கூர்நோக்கிலே கட்டுண்டு இமைகளைப் படபடப்பதைக் கூட மறந்து திகைத்த வடிவேலு, அஞ்சாமல் மைக்கேலை ஏறிட்டுப் பார்ப்பது போல் காட்சியளித்திருக்க வேண்டும். அதனால் தானோ என்னவோ ஆத்திரத்துடன் தாறுமாறாக இரையவில்லை மைக்கேல். துப்பாக்கியை வடிவேலு கொடுத்து விடத் தயாராக இருந்த போதிலும் இடது கையினால் அலட்சியமாய் அதைப் பிடுங்கிக் கொள்ளவே செய்தான். வடிவேலுவின் விழிகளுக்கெதிரே இப்போது தங்கச் சங்கிலியின் நுனியில் தொங்கிய ஒரு கடிகாரம் அசைந்தாடியது. 'சோதனைக்கு உட்படத் தீர்மானித்து விட்டானா மைக்கேல்?' அதிசயமடைந்தவனாகக் கடிகாரத்தைப் பெற்றுக்கொண்டு சித்தமாக நின்றான் வடிவேலு. அவன் கட்டளைக்குக் கீழ்ப்படியக் காத்திருந்தான் மைக்கேல்!

''ரெடி! பயர்!''

வாயைப் பிளந்தான் வடிவேலு! சரியாக ஒன்றரை விநாடிதான் எடுத்துக் கொண்டிருந்தான் மைக்கேல். தோட்டா இம்மியளவு கூடப் பிசகாமல் இலக்கைத் தாக்கியிருந்தது.

'அடேயப்பா! எவ்வளவு அரிய சாதனை!' வியப்பு சற்று அடங்கியதும் மதிப்பையும் மரியாதையையும் கண்கள் பிரதிபலிக்க மைக்கேலைப் பார்த்தான் வடிவேலு. அப்படியே அவனைக் கட்டிப் பிடித்துத் தூக்கித் தோள் மேல் வைத்துக் கொண்டு கூத்தாடுமாறு மனம் அவனை உந்தியது.

மைக்கேல் உடலில் ஒட்டிக் கொண்டிருந்த புல்லையும் மணலையும் தட்டிக் கொண்டு வடிவேலுவை அணுகினான். மகிழ்ச்சி விகசித்த முகத்தால் அன்புடன் அணைக்கிற நோக்கினால் மைக்கேலிடம் தன் பாராட்டைத் தெரிவித்தான் வடிவேலு. 'பளார்' என்று அவன் கன்னத்தில் ஓர் அறை விழுந்தது.

''ஆங்கிலேய அதிகாரியை அவமதித்த அந்த ஆணவம் அழிய வேண்டும்!'' என்று பயங்கரமாகக் கூச்சல் போட்டான் மைக்கேல்.

போற்றப் போன வடிவேலுவுக்குப் பரிசாகக் கிடைத்த பலமான பூசை பேரதிர்ச்சியைத் தந்தது. முதலில். பிறகுதான் மைக்கேல் கொடுத்த சூடு குருதியைக் கொதிப்படைய வைத்தது. தேகத்தில் ஓடிய ஒவ்வொரு துளி இரத்தத்திலிருந்தும் தன்மான உணர்ச்சி கொப்பளித்துப் பொங்கி எழுந்தது.

''நீ எதை விரும்புகிறாய்?'' என்று எதிர்த்துப் பேசினான் வடிவேலு. ''நன்றாகப் பயிற்சி பெற்ற கோழைகளையா? அல்லது வீரர்களையா? முடுக்கிவிடப்பட்ட யந்திரம் போல் நீ கண்ணிமைக்கும் நேரத்தில் செயல்படுகிறாயே, அப்படி நான் இயங்காமலிருக்கலாம். ஆயினும் நான் சுத்த வீரன்! தெரிந்ததா? நான் சுத்த வீரன்!''

''நன்கு பயிற்சி பெற்று இயந்திரம் போல் இயங்கும் கோழை என்று குத்திக் காட்டுகிறாயா என்னை?'' கடிகாரத்தின் சங்கிலியை ஒரு விரலில் அழுத்தமாகச் சுற்றியவாறே மைக்கேல் கம்பீய குரலில் ஆனால் கண்டிப்பான தொனியில் கூறினான்: ''நீ இதற்காகக் கஷ்டப்படப் போகிறாய்! உன் கால்களை ஒடிக்காமல் விட மாட்டேன் நான்! இந்தப் 'பினரேன்' கமாண்டர் யார்? இத்தகைய அதிகப் பிரசங்கிகளை அடக்கி ஆள வகையில்லாமல் எதற்கு இருக்கிறான்? தொலைத்து விடுகிறேன் அவனை!''

ஸுபேதார் கேவல் சிங் வெலவெலத்துப் போனதாய்க் காட்டிக் கொள்ளவில்லை. அமைதியாகவே மைக்கேலின் ஏச்சுக்களை ஏற்றுக் கொண்டான்.

திரும்பிச் சென்றான் மைக்கேல், வடிவேலுவுக்குப் பன்னிரண்டு மணி நேரக் காவல் உத்தியோகத்தைக் கொடுத்து விட்டு.

## அத்தியாயம் 3

# தண்டனை

இலேசான விஷயமல்ல அது. காலை எட்டு மணிக்கு ஆரம்பித்து இரவு எட்டு மணி வரை வடிவேலு ராணுவ முகாம் வாயிலில் குறுக்கேயும் நெடுக்கேயும் அலைய வேண்டும். விநாடிப் பொழுது ஓய்வு கிடையாது. தாகவிடாய் தீர்க்க முடியாது. அன்ன ஆகாரமின்றித் தண்டனையை அனுபவிக்க வேண்டும் அவன். கனமான அந்தத் துப்பாக்கியைச் சுமந்து கொண்டு உடலைச் சிறிதளவும் தளர விடாமல் தடிப்பான பூட்ஸ் கால்களால் 'லெப்ட்—ரைட்' போட்டவாறே அரை நாளைக் கழிப்பதென்றால் அதைவிடச் சித்திரவதை வேறென்ன வேண்டும்? 'மனிதனை இயந்திர மாக்கும் முயற்சியில் முதல் படியா இது? ஆண்டவனே!

# ரூ.5,395 பரிசுகளாக வெற்றி பெறுங்கள் 'ஆஸ்ப்ரோ' திறமைப் போட்டி

இந்த கண்ணாடி ஜாடியில் எவ்வளவு 'ஆஸ்ப்ரோ' வில்லைகள் அடங்கும் என்பதைக் கணக்கிடுங்கள்!

ஜாடியின் பரிமாணங்கள்:-
25 செ. மீ. x 52 செ. மீ.
நான்கு 'ஆஸ்ப்ரோ' வில்லைகள் கொண்ட ஒவ்வொரு பட்டையின் பரிமாணங்கள்:
13 செ. மீ. x 3·9 செ. மீ.



## முதற்பரிசு:



12 வருட தேசிய இட்ட சேமிப்பு பத்திரம். தற்போதைய மதிப்பு ரூ.2,000. 12 வருடங்களுக்குப் பின் ரூ.[illegible],300.

## இரண்டாவதுபரிசு:



மர்பி ரேடியோ மதிப்பு
மதிப்பு ரூ.865.00

## மூன்றாவதுபரிசு:



உஷா தையல் மிஷின்
மதிப்பு ரூ.530.00

## தகுதிப்பரிசு:



50 பேர்களுக்கு பவுண்டன் பேனாக்கள். மதிப்பு ஒவ்வொன்றும் ரூ.14.00.

அருகாமையிலிருக்கும் உங்கள் ஆஸ்ப்ரோ வியாபாரியிடம் எல்லா விபரங்களும், பிரவேசக் கூபன்களையும் பெற்றுக்கொள்ளவும்.




**தலைவலி, ஜுரம், ஜலதோஷம் மற்றும் ப்ளூவிற்கு 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள் - மீண்டும் நிச்சயமாக சுகம் பெறுங்கள்**

ஒரு நிக்கொலஸ் N தயாரிப்பு

தரத்திற்கும் தூய்மைக்கும் நிக்கலஸ் பெயரும் உத்தரவாதம்.

A.G.150 TML


THE INDIAN OVERSEAS BANK LIMITED, MADRAS
IOB

இதைத் தாங்குவதற்குரிய சக்தியை எனக்குக் கொடு!'

மைக்கேலின் பழி தீர்க்கும் படலத்துக்கு உச்சி வெய்யில் துணை செய்தது. 'பொருத்தமாய்த்தான் சொன்னார்கள் பாடை பறைக்கும் வெய்யிலென்று.' — இப்படி எண்ணினான் வடிவேலு. சற்று நேரத்தில் அவன் ஒரே ஒரு விஷயத்தைத் தவிர வேறு எதைப் பற்றியும் சிந்திக்கும் திறனையே இழந்து விட்டான்.

'தண்ணீர்!' — தண்ணீருக்காக அவன் தவித்தான், திண்டாடினான்; ஏங்கினான், ஏமாற்றமடைந்தான். நினைக்க நினைக்கத் தாகம் அதிகரித்தது. வடிவேலுவின் நா வறண்டு போயிற்று. கூட்டி விழுங்கித் தொண்டையை நனைத்துக் கொள்ள எச்சில் கூட அகப்படவில்லை. வியர்த்துக் கொட்டியது; நெற்றி விண்ணென்று தெறித்தது. குளிர்ந்த காற்றாவது வீசக் கூடாதா? இலைகளின் சிறு சலசலப்புச் சத்தம்கூட எழவில்லை. உலகம் முழுவதையும் வியாபித்துச் சகல ஜீவராசிகளுக்கும் உயிரூட்ட வேண்டிய காற்று என்ன, செத்தா விட்டது?

அசந்து போய் அமர்ந்தாலோ, அந்தண்டை இந்தண்டை போனாலோ தண்டனை நீடிக்கப்படும் என்பது தெரியுமாதலால் பெருமுயற்சி செய்து இன்னும் நடந்து கொண்டே இருந்தான் வடிவேலு. 'அதோ சற்றுத் தூரத்தில் தென்படும் அந்த ஓட்டு வீட்டின் ஜன்னல் வழியே மைக்கேல் எந்தக் கணத்தில் எட்டிப் பார்ப்பான் என்று யார் அறிவார்கள்?

'ஆஹா! இதென்ன? தனக்குப் பின்னால் யாரோ நடந்து வருகிற ஓசை கேட்கிறதே! யாராயிருக்கும்?' 'கேட்'டின் ஒரு முனைக்குச் சென்று அரை வட்டமாகத் திரும்பிய வடிவேலு, தனக்குப் பின்புறம் வந்தவனை இப்போது நேருக்கு நேராய்ச் சந்தித்தான். அவனை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தவன் கேவல் சிங்தான். ஒரு நாடாவின் இரு நுனிகளாலும் கட்டப்பட்டு அவன் தோளிலிருந்து தொங்கி இடுப்புக்குப் பக்கத்தில் ஊசலாடியது குடி நீர் நிரப்பி வைக்கும் ஒரு டப்பா.

''லெப்ட், ரைட்! லெப்ட், ரைட்! லெப்ட், ரைட்!'' கேவல் சிங் ஏதோ ஒரு மகாமந்திரம் போல் இந்த வார்த்தைகளை உச்சரித்தான். வடிவேலுவின் உலர்ந்து போன நா நீண்டது. உதடுகளை ஒரு முறை தடவி விட்ட அதனைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டான். அவன் கண்கள் கேவல்சிங்கிடம் கேவலம் ஒரு கோப்பை நீருக்காகக் கெஞ்சின.

அது கிடைத்து விடும் போலும் தோன்றியது. ''லெப்ட், ரைட்'' போடுவதை நிறுத்தி விட்டு, கேவல்சிங்,



**கணவன்:** லக்ஷ ரூபாய் பணம் வந்த மாதிரி சொப்பனம் கண்டேன்!

**மனைவி:** உடனேயே முழிச்சுண்டுட்டேளாக்கும்! அந்தப் பணத்தை உடனே பாங்கியில் கட்டிவிட்டல்லவா முழிச்சிருக்கணும்!

**கணவன்:** அடி அசடே! நடுராத்திரியிலே எந்தப் பாங்கு திறந்திருக்கும்? அதான் பொழுது விடிந்து கட்டிக் கொள்ளலாம் என்று எழுந்து விட்டேன்!

டப்பாவின் டம்ளர் போன்ற அமைப்பு கொண்ட மூடியைத் திறந்து அதனைக் குளிர்ந்த நீரினால் நிரப்பினான். கோப்பையில் தண்ணீர் ததும்பியது. வடிவேலுவின் முகத்தில் ஆர்வம் ததும்பியது. கடமையை மறந்து வினாடிப் பொழுது அவன் கேவல்சிங்கின் அருகே நிற்க நினைத்தான்.

''லெப்ட், ரைட்! லெப்ட், ரைட்!'' தயங்கவோ தாமதிக்கவோ அவனை அனுமதிக்காத ஸுபேதார், கோப்பையிலிருந்த நீரினைத் தன் கண்களில் தெளித்துக் கழுவிக்கொண்டான். ஊசி முனை அளவுக்குக் கூரியதாயிருந்த மீசையைத் திரித்துத் தடவி விட்டான். தாடியைத் தட்டி ஒழுங்குபடுத்தினான். டப்பாவை லேசாகக் கவிழ்த்துப் பிடித்துக் கொண்டான். மெல்லிய தாரையாகத் தண்ணீர் தரையில் விழுந்தது. அடங்காத தாகத்துடன் பூமி அதனைப் பேராசையோடு ஈர்த்துப் பருகியது.

தனக்குக் கெட்டபெயர் தேடித் தந்த வடிவேலுவிடம் வஞ்சம் தீர்த்துக் கொண்டு போய் விட்டான் கேவல்சிங்.

வீரன் வடிவேலு கோழையாகிக் கண்ணீர் பெருக்கினான். அந்த உப்பு நீர் கூட அவன் நாவுக்கு எட்டவில்லை. அவையும் முத்து முத்தாகக் கன்னங்களில் உருண்டு நிலத்தில் தான் சொட்டின.

மழை மட்டும் அன்றைக்குத் தக்க சமயத்தில் வராமலிருந்திருந்தால் வடிவேலு அங்கேயே வலுவிழந்து மயங்கி விழுந்

இருப்பான். திடுமென்று, பயங்கர யுத்த களத்தை நினைவூட்டும் வகையில் கரும் புகை மண்டலமாக மேகங்கள் நாலாபுறமும் சூழ்ந்தன. தீயிலே வெந்து கொண்டிருந்த வடிவேலுவிடம் கருணை கொண்டவனாக வருணன் தன் கைவரிசையைக் காட்டலானான்.

அத்தனை வெப்பத்துக்கும் காரணம் இதுதானா? மழையை முன்விட்டா மனிதனை இத்தனை நேரமாக வறுத்தெடுத்தது பொல்லாத வானம்? உடலும் உள்ளமும் குளிர வடிவேலு வாயைத் திறந்தவாறே மழையில் நனைந்து நடந்தான். அமுதத் துளிகளாக நீர் அவன் நாவில் சிந்தி அதனை ஈரமாக்கியது.

இந்த இன்பம் நீடிக்கவில்லை. வேறு ஓர் அபாயம் வடிவேலுவை இப்போது ஆட்கொண்டது. மழைக்குத் தகுந்த முன்னேற்பாடுகளுடன் தண்டனையை அவன் மேற்கொள்ளவில்லையே? தண்ணீரில் ஊறிய உடல் உறைந்து விடப் பார்த்தது. அதைத் துரிதப்படுத்துவதற்கென்றே ஊதக் காற்று சதி புரிந்தது.

ஒவ்வோர் அடியையும் அவன் மரணா வஸ்தையுடன் போராடியபடி எடுத்து வைத்தான்.

நன்றாக இருட்டி நீண்ட பொழுதாகி யிருக்க வேண்டும். உண்மையிலேயே அப்படித்தானா அல்லது தனக்குத்தான் அத்தகைய பிரமை உண்டாகிறதா? எங்கோ வெகு தூரத்தில் கடிகாரம் மணி அடிக்கும் ஓசை கேட்டது. 'இப்போது நேரமென்ன? ஏழா, எட்டா? ஒரு வேளை ஒன்பதே ஆகியிருக்குமோ? அசட்டுத்தனமாகத் தேவையில்லாத போதிலும் நான் பாட்டுக்கு இங்கே அலைகிறேனே?'

ரெயின்கோட் போன்ற தக்க பாதுகாப்புக்களுடன் ஒரு சிப்பாய் வந்தான், வடிவேலுவுக்கு விடுதலை அளித்துக் காவல் பணியைத் தான் தொடர.

தள்ளாடியபடியே சென்றான் வடிவேலு; தன் கூடாரத்துக்கு அல்ல. நேராக மைக்கேலின் இருப்பிடத்தை அடைந்தான். மிகுதியிருந்த பலத்தை ஒன்று திரட்டி, கதவைத் தள்ளித் திறந்து கொண்டு நுழைந்தான்.

'கடகட' வென்று பற்கள் தாளம் போட, உடல் குளிரில் நடுங்க, கேசத்திலிருந்தும் தேகத்திலிருந்தும் மழை நீர் தரையில் சொட்டிக் குளமாய்த் தேங்க, அவன் பரிதாபக் கோலத்தில் காட்சியளித்தான். மிகுந்த பிரயாசைப்பட்டு உதடுகளை அசைத்தான் வடிவேலு: ''இருப்பிதானா உங்களுக்கு?''

மைக்கேல் ஒரு பெருமூச்சுடன் தான் உட்கார்ந்திருந்த நாற்காலியை விட்டு எழுந்தான். சுவரில் பதிக்கப்பட்டிருந்த அலமாரியினுள்ளிருந்து துண்டு ஒன்றை உருவி அவன் பக்கமாக வீசினான். தன்னுடைய 'டிரஸ்ஸிங் கவுனை'யும் எடுத்து மேஜை மீது போட்டான். ''உடம்பைத் துடைத்துக் கொள்; அந்த ஆடைகளைக் களைந்து விட்டு இதை அணிந்து கொள். இல்லாவிட்டால் ஜுரம் வந்து விடும்.''

மைக்கேல் உத்தரவு பிறப்பித்ததும் உணவு வந்து சேர்ந்தது வடிவேலுவுக்கு. அறுசுவை உண்டி! அவனைப் போன்ற சாதாரண சிப்பாய், அதிலும் ஓர் இந்தியச் சிப்பாய், கரு நிறம் கொண்டவன் தனக்குக் கிடைக்கும் என்று கனவிலும் கருத முடியாத பெரிய விருந்து!

அள்ளி அள்ளித் திணித்துக் கொண்டான் வடிவேலு. பாதி வயிறு நிரம்பியதும் சாப்பிடுவதை இடையில் நிறுத்தி மைக்கேலை ஏறிட்டு நோக்கினான்: ''எதற்காக நீங்கள் இதை யெல்லாம் எனக்காகச் செய்கிறீர்கள்?''

''பரிவு காட்டக் கூடாதுதான்!'' என்றான் மைக்கேல். ''நான் ஓர் இந்தியனிடம் அனுதாபத்துடன் இப்படி நடந்து கொண்டதாக என் ஆங்கிலேயத் தோழர்களுக்குத் தெரிந்தால் ஏளனம் செய்து சிரிக்க மாட்டார்கள்; கோபம் கொண்டு என் மீது நடவடிக்கை எடுப்பார்கள்! உத்தியோக உயர்வு ரத்து செய்யப்படலாம்! அல்லது இருக்கிற பதவியும் போய் விடலாம். அவர்கள் மத்தியிலிருந்து என்னையே தீண்டத்தகாதவனாக விலக்கி வைத்தாலும் வியப்படைவதற்கில்லை. ராணுவத்திலிருந்தே விரட்டி அடிக்கவும் ஏற்பாடுகள் நடக்கலாம்!''

எள்ளளவும் அவன் நிலையை மிகைப்படுத்தி வர்ணிக்கவில்லை என்பதை வடிவேலு நிதர்சனமாக அறிந்திருந்தான். வெள்ளைத் தோல் படைத்தவன் ஆளப் பிறந்தவன். கருப்பு மனிதன் அடிமையாக உழல வேண்டியவன். ஆண்டவனுடைய நியதி அது. இல்லையானால் அவன் உலகிலுள்ள எல்லாரையுமே வெள்ளையராய் விளங்கச் செய்திருக்கக் கூடாதா? சீதோஷ்ண நிலைகளா? அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? விஞ்ஞானிகளின் கூற்றில் உண்மை இருப்பதாகவே வைத்துக் கொண்டாலும், இறைவன் இங்கிலாந்தைக் குளிர்ப் பிரதேசமாகவும் இந்தியாவை உஷ்ணம் மிக்க நாடாகவும் ஏற்படுத்தியது எதனால்?

அது வரையில் பத்து விரல்களுக்கு இடையிலும் மெல்ல உருண்டு கொண்டிருந்த 'பைப்'பைப் பற்ற வைப்பதில் தன் முழுக் கவனத்தையும் செலுத்தினான் லெப்டினன்ட் மைக்கேல். மெல்லிய கம்பியினால் துவாரத்தில் ஒட்டிக்

# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும் சில தயாரிப்புகள்தான்
சிறந்த குணமும், பல வருடங்களாக நம்
பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம்
பெற்றிருக்கின்றன. இந்த நம்பிக்கையான தன்
மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில்
எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75
வருடங்களுக்கு மேலாக சிபார்சு
செய்யப்பட்ட உலகமறிந்த
தாயரிப்பும் ஆகும்.

அதிகாரம்பெற்ற தயாரிப்பாளர்கள் :

**டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் ( மான்யுபாக்சரிங் ) பிரைவேட் லிமிடெட்**

கொண்டிருந்த சாம்பலைக் குத்திக் கிளறியும், சிறிய துணியினால் துடைத்தும் உதடுகளைக் குவித்து ஊதியும் அதனைச் சுத்தப்படுத்தினான். இவ்வளவும் போதாமல் இறுதியாக அதன் அகன்ற பகுதியை உள்ளங் கையில் கவிழ்த்துத் தட்டவும் செய்தான். மெல்லிய பிரம்புக் கீற்றுக்களால் தயாரிக்கப்பட்ட சிறிய பையைத் திறந்து பதமான புகையிலையைச் சரியான அளவுக்கு எடுத்து நிதானமாகப் பைப்பின் வாயில் வைத்து அதன் மீது ஆள் காட்டி விரலால் அவசியமான அழுத்தம் கொடுப்பதில் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டான். பின்னர் பைப்பின் காம்பைப் பற்களுக்கிடையில் வைத்துக் கடித்தபடி 'லைட்டரை' ஏற்றிப் புகையிலைக்கு நெருப்பு வைத்தான். நாலைந்து முறை சுவாரசியமாகப் புகையை உள்ளுக்கிழுத்துக் கக்கிய பிறகு பைப்பின் அடிவாரத்தால் வடிவேலுவை அடுத்தடுத்துக் குத்த யத்தனிப்பது போல் கரத்தை அசைத்தபடியே கூறினான். ''ஏதனாலோ உன்னை எனக்கு ரொம்பவும் பிடித்துப் போயிருக்கிறது. இருபது அல்லது இருபத்திரண்டு வயதில் எனக்கும் உன்னைப் போலவே வாய்த்துடுக்கு அதிகமாக இருந்ததுதான் காரணமோ என்னவோ! ஆனால் வயதில் பத்து வருஷங்கள் கூடியதோடு அத்தனை ஆண்டு அனுபவமும் சேர்ந்திருக்கிறது எனக்கு இப்போது. மேலதிகாரிகளிடம் பதில் பேசக்கூடிய ஆள் பட்டாளத்தில் இருப்பது பயப்பட வேண்டிய விஷயம் என்பதை உணர்ந்திருக்கிறேன். அந்த மனப்பான்மையை வேரோடு பிடுங்கி எறிய என்னாலானதைச் செய்வேன்!''

''எனக்கும் உங்களைப் பிடித்திருக்கிறது'' என்று உண்மையை மறைக்காமல் ஒப்புக் கொண்டான் வடிவேலு, பன்னிரண்டு மணி நேரம் பட்டினி கிடந்தபின் வயிறு முட்ட உண்ட திருப்தியோடு.

சாய்வான ஒரு நாற்காலியில் சாவதானமாக அமருமாறு அவனுக்குச் சைகை காட்டினான் மைக்கேல். நூற்றுக்கணக்கான சிகரெட்டுகள் அடங்கிய மரப் பெட்டியொன்றை அவன் எதிரே திறந்து காட்ட வடிவேலு ஒன்றைப் பொறுக்கி எடுத்துக் கொண்டான். மைக்கேல் பெட்டியை மேஜையில் திரும்பவும் வைத்து விட்டுத் தானும் அதன்மீதே ஓர் ஓரமாய் உட்கார்ந்தான்.

சிகரெட்டைப் புகைத்தவாறே ''எதனால் எனக்கு உங்களைப் பிடித்திருக்கிறது என்று நீங்கள் என்னைக் கேட்கவில்லையே?'' என்றான் வடிவேலு. ''கடுமையான தண்டனையைத் தேடாமல் தயங்காமல் எனக்குத் தந்தீர்களல்லவா? அதனால்தான்! அப்படி என்னை வாட்டி



**வக்கீல்**: (குற்றவாளியைப் பார்த்து) நீ 'கில்டி'யா 'நாட் கில்டி'யா?

**நீதிபதி**: ஓய்! அவரே தான் குற்றவாளி என்பதை ஒத்துக் கொண்டு சொந்த செலவிலேயே ஜெயில் டிரெஸ்ஸெல்லாம் தைத்துப் போட்டுக் கொண்டு வந்திருக்கிறார் நீர் போய்.... நீ 'கில்டி'யா 'நாட் கில்டி'யா என்று கேட்கிறீரே!

**குற்றவாளி**: அது என்னவோ நமக்குத் தெரியாதுங்க! என்னை எல்லோரும் 'கில்லாடி'ன்னுதான் சொல்லுவாங்க.

---

வதைத்திரா விட்டால் கணப் பொழுதில் குறி பிசகாமல் கட்டபோது உங்களிடம் எனக்கு உண்டான மதிப்பு பன்மடங்காய்ப் பெருகியிருக்கிறது! அது மட்டுமா? வாய்க்கு ருசியான இந்தப் பண்டங்களும் எனக்குக் கிடைத்திருக்காது!'' வயிற்றை ஆசையோடு தட்டிக் கொடுத்தபடியே, ''வாழ்க, தண்டனை!'' என்றான் வடிவேலு.

''நான் என்ன செய்யட்டும்? ராணுவத்தில் நாங்கள் அதிகப்பிரசங்கித்தனத்தை அநுமதிப்பதற்கில்லை. அடக்கி ஒடுக்கத்தான் செய்வோம்!''

''அனாவசியமாக நான் இனிமேல் ஒரு வார்த்தை பேசினால் கேளுங்கள்!''

''எனக்கு நம்பிக்கை யில்லை; நீ அவ்வளவு சுலபமாய்த் திருந்தி விடுவாயென்று.''

வடிவேலு லெப்டினென்டைச் சில வினாடி பார்த்து விழித்தான். பின்னர் தாங்கமுடியாமல் குபீரென்று சிரித்தான். 'சுலபமாய்த் திருந்த மாட்டேனுமே நான்? எனக்கு அளிக்கப்பட்டதைக் காட்டிலும் கடுமையான தண்டனை கூட இருக்க முடியுமா? நல்ல வேடிக்கை இது...!''

''சிரி வடிவேலு, சிரி!'' என்றான் மைக்கேல். ''இப்படிச் சிரித்துக் கொண்டேயிருந்துதான் இந்த நாட்டைக் கோட்டை விடப் போகிறீர்கள். சரணாகதி என்று எதிரிகளின் கால்களில் விழப் போகிறீர்கள். உன்னைப் போலவேதான் இங்கேயுள்ள பிரிட்டிஷ் சேனைத் தலைவர்கள் பலரும் ஜப்பானியரைக் குறித்துக் கேவலமாக எண்ணிச் சிரித்துக் கொண்டிருக்கிறார்கள். விரைவிலேயே

ஜப்பானியன் இவர்களை அடித்து விரட்டப் போகிறான், பார்! இரவுக் கேளிக்கைக் கிளப்புகளில் 'ஸ்டென்காக்'களைக் குடித்து விட்டுக் கூத்தாடும் சீனப் பெண்களைப் பார்த்துச் சிரிக்கும் நேரம் போக மிகுதிப் பொழுது இருந்தால் இங்கிலாந்திலிருந்து வந்துள்ள இந்தத் தளபதிகள் ஜப்பானியரை மஞ்சள் நிறக் குள்ளர்கள் என்றும் பயங்கொள்ளிகள் என்றும் பரிகாசம் செய்கிறார்கள். சீக்கிரத்திலேயே உலகம் நையாண்டி செய்யும், இவர்களைக் கண்டு! தங்களளவுக்கு யாரும் உயர முடியாது என்று இறுமாந்து மார் தட்டும் ஆங்கிலேய அதிகாரிகளை ஜப்பானியக் குள்ளன் தன்னை விடத் தாழ்ந்து போகுமாறு மட்டம் தட்டப் போகிறான்!

''எனக்கு எப்படித் தெரியும் என்று கேட்கிறாயா வடிவேலு? நான் நேரில் பார்த்திருக்கிறேன். ஜப்பானிய ராணுவத்தின் முன்னேற்றத்தைத் தடுக்க முடியாமல் ஷியாங்காய் ஷேக்கின் பராக்கிரமம் மிக்க படைகளே பின்வாங்க நேர்ந்ததையும் சீன மக்கள் பட்ட துன்பத்தையும் கண்கூடாகக் கண்டிருக்கிறேன்! சீனப் பெண்களின் பரிதாப ஓலத்தைக் கேட்டிருக்கிறேன். சீனாவில் ஜப்பானியர் யுத்தம் புரிய ஆரம்பித்துக் கிட்டத்தட்ட மூன்று வருஷங்கள் ஆகப் போகின்றன. என்று முடியுமோ தெரியவில்லை. துறைமுகங்களை ஒவ்வொன்றாக இழந்து தலைநகர் நான்கிங்கையும் பறிகொடுத்து விட்டு மேற்கே ஓடிச் சுங்கிங்கைத் தாற்காலிகத் தலைநகராக்கிக் கொண்டார் ஷியாங். ஜப்பானியர்கள் வடக்கே சீனாவின் பெரும் பகுதியைத் தம் வசப்படுத்திக் கொண்டபோது அருகில் இருந்து பார்த்தவன் நான். ஜப்பானியப் போர் முறைகளை அனுபவ பூர்வமாக உணர்ந்தவன். எனக்கு மட்டும் இன்று அதிகாரம் இருந்தால் இப்போதுள்ள திட்டங்களை யெல்லாம் தீக்கிரையாக்கிவிட்டுப் புது வழிகளை வகுப்பேன். பட்டாளத்தினர் பெற வேண்டிய பயிற்சிகளை மாற்றி அமைப்பேன்: காடுகளிலும் மலைகளிலும் போராடக் கற்க வேண்டியதைக் கட்டாயமாக்குவேன். கொரில்லா யுத்தம், ஜப்பானிய 'ஜிஜுட்ஸு' சண்டை முறையவற்றைப் பயிலுவதற்கு முதலிடம் தருவேன். அப்படியிருக்க என்னைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாமல், வெறும் லெப்டினண்டாய் அமர்த்தியிருக்கிறார்கள்!

''வேண்டும் எனக்கு! இதுவும் வேண்டும்; இன்னமும் வேண்டும்! தாய்நாட்டுச் சேனைக்குத் தலைமை தாங்கி ஜப்பானியத் தாக்குதலுக்கு அவர்களைத் தயார்ப்படுத்த வேண்டுமென்கிற நோக்கத்தோடு ஷியாங்கின் ராணுவத்தில் வகித்த உயர் பதவியை உதறித் தள்ளி விட்டு வந்தேன் பார்! அதற்குக் கை மேல் பலன் கிடைத்து விட்டது எனக்கு!'' மேஜையை ஓங்கி அறைந்தான் அவன். வார்த்தைகளைப் பல்லுக்கிடையில் போட்டு அரைத்து வெளிவிட்டான்: ''மைக்கேல்! ஒரு சாதாரண லெப்டினண்ட்!''

திடீரென்று விழித்துக் கொண்டவனாக, ''நான் என்ன உளறிக் கொண்டிருக்கிறேன்?'' என்றான் மைக்கேல் பீதியுடன். ''சற்று அதிகமாகவே விஸ்கி இறங்கி யிருக்கவேண்டும் வயிற்றுக்குள். வடிவேலு! நான் கூறியதை யெல்லாம் மறந்து விடு!''

வடிவேலுவிடம் எந்தவிதமான சலனத்தையும் காணோம். அவனைக் கிட்டத்தில் வந்து மெல்ல உலுக்கினான் மைக்கேல். வடிவேலுவின் தலை மட்டும் ஒரு புறத்திலிருந்து மறு புறத்துக்கு உருண்டது. மெல்லிய குறட்டை ஒலியும் எழுந்தது.

மென்னகையில் மைக்கேலின் முகம் மலர்ந்தது. (தொடரும்)

ஆகஸ்ட்

25ம்

முதல்

சென்னை :

சித்ரா

கிரௌன்

சயானி

மற்றும்

தென்னிடமெங்கும்



வசுமதி

பிக்சர்ஸ்



# காத்திருந்த கண்கள்

டைரக்ஷன் :

டி.பிரகாஷ்ராவ்

பாடல்கள் : கவிஞர் கண்ணதாசன்

இசை : விஸ்வநாதன் - ராமமூர்த்தி

எடிட்டிங் : என்.எம்.சங்கர்

ஆர்ட் : ஏ.கே.சேகர்

காமிரா : கமால் கோஷ்





தயாரிப்பு :

T.K.ராமசாமி

உலக உரிமையாளர்கள் :—

விஜயஸ்ரீ பிக்சர்ஸ்

சென்னை-17.

# மோகா

மோகா கிணற்றடியில் துவைக்கும் கல்லின் மேல் உட்கார்ந்து வானத்தையே வெறிச்சென்று பார்த்துக் கொண்டிருந்தாள். தலைக்கு மேலே கிளை ஒன்றில் இரு குயில்கள் தங்கள் பாஷையில் 'கிச்' 'கிச்' என்று அளவளாவிக் கொண்டிருந்தன. தினம் பத்து அடித்தால் சாப்பாட்டு இலைக்கு ஓடி வரும் நாய் புழைக்கடை வேலியினுள் நுழைந்து வந்து விட்டது. வேலைக்காரி அன்று வராததால் தேய்க்க வேண்டிய பாத்திரங்கள் அப்படி அப்படியே பற்றும் பசையுமாகக் கரி யேறிக் கிடந்தன.

சுற்றிலும் இவ்வளவு இருந்தும் மோகா வானத்தைப் பார்ப்பானேன்? அநாதையாக விட்டு விட்டு எப்போதோ விலகிப் போன பெற்றோரை வானத்தில் தேடுகிறாளா? இனியும் இந்த உலகத்தில் இருக்க வேண்டாம், என்னை அழைத்துக் கொண்டு போங்கள் என்று மௌன பாஷையில் கூவி அழைக்கிறாளா?

காலையிலிருந்து எத்தனை நேரம்தான் அவள் அப்படித் துவைக்கிற கல்லின் மேல், ஊற வைத்த துணி மேல் உட்கார்ந்திருந்தாளோ அவள் அறியாள்.

திடீரென்று மாமியின் குரல் கணையாக வந்து விழுந்தது.

''ஏண்டி, மோகா. நான் உன்கிட்டே என்ன சொன்னேன், நீ என்ன செய்கிறாய்?''

மாமியின் சத்தம் கேட்டதேயொழிய வார்த்தைகளோ, அவற்றின் அர்த்தமோ அவளுக்கு விளங்கவில்லை. அவள் வாய் திறக்காமலே இருந்தாள்.

மாமி அருகில் வந்தும் எழுந்திருக்க வேண்டும் என்று தோன்றவில்லை. இம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் சாதாரணமாக மாமி அவள் முதுகிலோ, கன்னத்திலோ அடிப்பாள். இன்றைக்கு அப்படிச் செய்யவில்லை. ஒடிந்து கிடக்கிற மனத்தைத் தூளாக்கினாள்.

''ஏண்டி ருதிராட்டமா வயசு இருபதாச்சு. எந்தக் கோட்டைக்குள்ளே போய் எந்த ராஜாவைப் பிடிக்கப் பார்க்கிறே? காலு சரியா இருந்தா எவன் கழுத்திலேயாவது கட்டித் தொலைச்சிருக்கலாம். சரி, சரி. சீக்கிரம் பாத்திரங்களைத் தேய். நாங்க புறப்பட்டுப் போறோம். கார் கூட வந்தாகி விட்டது. ....''

மோகா மாமியை ஏறிட்டுப் பார்த்தாள். கண்களில் விஷம் தேங்கி நின்றது. பதினான்கு வருடங்களை இந்த மாமியுடன் கழித்தாகி விட்டது. அவளுடைய அதிகாரத்துக்குப் பணிந்து பணிந்து என்ன சுகத்தைக் கண்டாள்? அப்பா செத்ததும் அம்மா செத்ததுமா துக்கம்? தான் சாகாதது அல்லவா கொடுந் துக்கம்?...

''என்னடி அப்படிப் பாக்கிறே? தேய், தேய்....'' பட்டுப் புடவையின் ஜரிகை சூரிய ஒளியில் மின்னியது.

மாமி போய் விட்டாள்.

அடுத்தாற் போல் மாமா.

''என்னம்மா, மோகா, இன்னும் குளிக்காம, நெத்திக்குக் கூட இட்டுக்காம பரட்டையும் தலையுமாய் உட்கார்ந்திருக்கே?'' மாமா என்றைக்குமே குழைந்து குழைந்துதான் பேசுவார். நாவில் அள்ளிப் பெருகி வழியும் கருணையும் குழைவும் காரியத்தில் இல்லையே? அவளுடைய அம்மா, அவளை இந்த மாமாவிடம் ஒப்படைத்தாள். அதுவும் வெறுங் கையோடா? கற்றை கற்றையாக இருபதாயிரம் ரூபாய் நோட்டுக்களுடன்! எதற்கு? அவள் செத்தாலும், அவள் அண்ணன் தன் பெண்ணை ஆதரவுடன் வளர்த்து வாழ வைப்பார் என்று. மாமா, மோகாவை வாழவா வளர்த்தார்? பிள்ளை காலை ஒடித்தான். மாமி மனசை ஒடித்தாள். மாமா வாழ்க்கையையே ஒடித்து விட்டார்.

இது நாள் வரை எவனைத் தன் தெய்வமாக, ஆதார சக்தியாக வரித்திருந்தாளோ அவன் அவளிடம் வந்து தனக்கே உரித்தான அன்புக் குரலில், ''மோகா! நீ ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறாய் என்று எனக்குத் தெரியும்!'' என்றான்.

மோகா பதில் சொல்லவில்லை,

கைலாசம் அவளையே பார்த்தான். எண்ணெய் காணாத தலை சருகு போல் இருந்தது. என்றுமே ஒளி வீசும் கண்களில் நீர் முட்டி நின்றது. நெஞ்சினுள் பொங்கி வரும் துக்கத்தை அடக்க அவள் தன் உதடுகளைக் கடித்துக்கொண்டாள்.

''என் மோகா என் மேலே கோபமா?'' அவள் தலையை ஆட்டினாள், 'இல்லை' என்று.

''இதோ பார் மோகா... என் அப்பா ஒரு கோழை. அவரை முட்டாளாக்கி விருக்கிறாள் என் அம்மா. அவள் ஒரு ராட்சசி. நான் இரண்டு பேருக்கும் பதில் சொல்ல மாட்டாமல், உனக்கும் தேறுதல் சொல்லத் தெரியாமல் விழிக்கிறேன். இருந்தாலும் நம்பிக்கை இருக்கு....என்னை நம்பு....''

மோகா வாய் திறக்கவில்லை. இந்த மூன்று நாடக பாத்திரங்களை அவள் இன்று நேற்று அறிவாள்? அவளுடைய வாழ்க்கை மேடையிலிருந்து அம்மா என்று மறைந்தாளோ அன்றையிலிருந்து அறிவாளே? இத்தனை காலம் கைலாசத்தை மட்டும்தான் அவள் நம்பியிருந்தாள். 'என் மேல் படர்ந்து கொள்' என்று கொடிக்கு வாக்களித்து விட்டு, பூமியில்

பி.வி.ஆர்.

சிக்கிய மரம் சாய்ந்து விட்டது. இனிமேல் கொடி இருந்தால் என்ன? போனால் என்ன? பூக்கப் போகிறதா, மலரப் போகிறதா?

மணி எப்போதோ பத்தாகி விட்டது. மோகா, கைலாசம் சென்ற திசையிலிருந்து கண்களை வாங்கிக் கிளையை அண்ணாந்து பார்த்தாள். வெள்ளித் தூளைத் தெளித்தாற் போல் மாம்பூ மண்டிக் கிடந்தது. அவளுடைய கண்ணுக்கு மாம்பூ அழகாகத்தான் பட்டது. மாமரத்தின் நிழல் இதமாகத்தான் இருந்தது. அதன் கனியின் ருசியை விழையத்தான் விழைந்தாள். இருந்தும் என்ன? அவளுக்கு அம்மாமரத்தைக் கண்டாலே வெறுப்பு! பத்து வருடங்களுக்கு முன்னால் அது சின்னஞ் சிறு மரமாக இருந்த போதே, அவளுடைய வாழ்வின் எதிர்காலத்தைத் நிர்மாணித்து விட்டதே அது. பல வருடங்கள் பூத்த போதும், அந்த வருடம்தான் காய்த்தது. கைலாசம் ஒரு கிளையிலும் அவள் இன்னொரு கிளையிலும் ஏறி மரத்தின் முதல் கனிகளைப் பறிக்கலானார்கள். ஒரு காய் அவள் இருந்த கிளையில் பொன்னிறத்துடன் பிரகாசிப்பதையும், அதை அவள் எட்டிப் பிடிக்கப் பார்ப்பதையும் கண்ட கைலாசம், எங்கே அவள் கைக்கு அகப்பட்டு விடுமோ என்ற பொறாமையில் தன் கிளையை விட்டு அவள் பின்னால் வந்து, அவள் முதுகையே தாங்கிக் கொண்டு, அக்கனியைத் தொட, — அவள் நிலை தடுமாறினாள். கைலாசத்தைப் பிடித்துக் கொள்ள முயன்றும் முடியாமல் விழுந்தாள்.

முழங்கால் துவைக்கிற கல்லைத் தாக்கியது.

ஊரார் பெற்ற பெண்தானே? மாமியே நொண்டி என்று நாமகரணம் சூட்டி விட்டாள். ஒரு கனியின் ருசியை உணரத் துடித்த கைலாசம் இன்னொரு கனியின் வாழ்க்கையையே நசுக்கி விட்டதை உணரவில்லை. அவன் எப்படி உணர முடியும் அந்த வயதில்?

ஆஸ்பத்திரியில் கண்ணாடிச் சில்லுகளாக இருந்த எலும்புத் துண்டங்களை எவ்வளவு தூரம் ஒட்டிச் சேர்க்க முடியுமோ அவ்வளவு தூரம் செய்தார்கள். மாமா, தங்கை கொடுத்த இருபதாயிரத்தில் ஆயிரம் ரூபாயைச் செலவழித்து விட்டு, தம் பணம் பறிபோனாற் போலக் குமைந்தார். எது எப்படிப் போனால் என்ன, மோகாவுக்கு ஒரு கால் சுவாதீனமில்லாமற் போய்விட்டது.

ஆனால் கைலாசம் பள்ளியிலிருந்து கல்லூரிக்குச் சென்ற பிறகு மாறினான். தன்னால் தான் மோகா அப்படி ஆனாள் என்ற எண்ணம் மனத்தை அரிக்கலாயிற்று.

தினம் தினம் மோகாவுடன் பழகப் பழக, அவளை அவன் நன்றாகப் புரிந்து கொண்டான். வயது ஏற ஏற மோகா காலைச் சாய்த்து நடப்பதே ஒரு தனி அழகாகப் பட்டது. செக்கச் செவேலென்றிருக்கும் அவளுடைய முகமும், அதிலே மஞ்சள் பூசிய கன்னங்களும், குறுகுறுவென்று சிரிக்கும் கண் விழிகளும் அவனை மெய்மறக்கச் செய்தன. ஆனால் —

அவனுடைய பெற்றோர்கள் மந்திராலோசனை செய்தார்கள். மோகாவின் மாமா சபேசம் தாலுகா ஆபீஸில் ஒரு குமாஸ்தா. வாங்கின கடனும், வாங்காத கடனும் போகத்

தொண்ணூறு ரூபாயும் சில்லறையும் தான் சம்பளமாக வந்தது. ஏதோ இப்படி அப்படி என்று மூன்றும் மனிதனுக்குத் தெரியாமல், உள்ளங்கையில் எட்டாக மடித்துக் கொடுக்கும் புண்ணியவான்கள் இருந்ததால் 'மேல்' வரும்படியும் வந்தது. இருந்தும் தரித்திரம் தரித்திரம் தான். இப்படிக் கிடைக்கிற பணத்தில் எவன் தரித்திரம் தீர்ந்திருக்கிறது?

தங்கையின் வட்டிப் பணம் மாதத்துக்கு எழுபத்தைந்து ரூபாய் அவன் இரண்டு பெண்களை விட்டு விட்டுப் போயிருந்தால் கூட அது சாப்பாட்டுக்கும் துணிக்கும் அதிகம்தான்.

சையன் எஸ். எஸ். எல். சி. தேறியதும் தட்டெழுத்துக்கும் குறுக்கெழுத்துக்கும் அனுப்பலாம் என்று திட்டமிட்டார்.

"இந்தக் குடும்பத்துக்கு ஒரு குமாஸ்தா பதவி போதும்....அவனை டாக்டருக்கோ, என்ஜினியருக்கோ படிக்க வையுங்கள்!" என்று மாமி பாகீரதி தன் பிள்ளைக்கு வழி வகுத்தாள்.

"பணம்?"

"உங்க தங்கை எதுக்கு அத்தனை பணத்தையும் உங்களிடம் கொடுத்து வைத்திருக்கிறாள்?" என்று பாகீரதி எதிர்க்கேள்வி போட்டாள். சபேசம் அடங்கிவிட்டார்.

மோகாவின் விதியோ, போதாத காலமோ, கைலாசம் எந்தப் பரீட்சையிலும் முதலாவதாகத் தேறினான். தன் மகனின் எதிர்காலத்தில் அக்கறை கொண்டதோடு அவனுடைய அம்மா, அவனை இன்னும் சிறந்த வரனாக்க வேண்டும் என்று துடித்து, டாக்டர் படிப்புக்கு ஆயத்தமாக்கினான். அவனும் பட்டணம் போனான்.

விதி தொடர்ந்தது.

சர்க்கார் கொஞ்சம் மானியம் கொடுத்து, அவனை மேல் நாட்டுக்கு மேல் படிப்புக்கு அனுப்பி வைத்தார்கள். அதில் ஐயாயிரம் மறைந்தது.

மொத்தத்தில் கைலாசம் ஐந்நூறு ரூபாய் சம்பளத்தில் உத்தியோகம் பார்க்க ஆரம்பிக்கவும், பணம் எல்லாம் கரையவும், சபேசம் வேலையிலிருந்து ஓய்வெடுக்கவும், மோகாவுக்கு வயது இருபதாகவும், மாமியின் திட்டம் மாறவும் சரியாக இருந்தன.

மேல் நாட்டுக்குச் சென்று படித்து வந்தான் என்றாலும் கைலாசம் அப்படி ஒன்றும் பிரமாதமாக மாறி விடவில்லை. அமெரிக்காவில் இருந்து கொண்டே மோகாவுக்குக் காதல் கடிதங்கள் எழுதினான்.

இருந்தும் அவனையும் மீறி, அவன் அம்மா மோகாவின் விதியை நிர்ணயிக்கப் போர்க்களத்தில் குதித்தாள்.

ஓர் இரவு. மோகா படுக்கையில் புரண்டு கொண்டிருந்தாள்.

"கப்பு மாமியைக் கோவிலில் பார்த்தேன். ஹைகோர்ட்டு ஜட்ஜு பொண்ணு ஜாதகம் ரொம்ப நன்னாப் பொருந்தியிருக்காம். கைலாசம் இஷ்டப்பட்டால், சர்க்கார் கொடுத்த மானியத்தைத் திருப்பிக் கொடுத்து, தங்கள் பெண்ணையும் கொடுத்து ஒரு டிஸ்பென்ஸரியும் கட்டிக் கொடுக்கிறாளாம்...."

"ஏண்டி, நான் என் தங்கைக்குச் செய்யற கடனா இது!"

"அவ செத்துப் போய்ப் பதினெஞ்சு வருஷங்கள் ஆகப் போகின்றன. அவ ஆவி கூட வயசாகிச் செத்துப் போயிருக்கும். அப்படியே இருக்கட்டும். உங்க தங்கை பெண்ணைக் நினைந்திலா தள்ளப் போறேளும்?"

"எப்படிக் கல்யாணம் செய்து கொடுக்கிறது இன்னொருத்தனுக்கு....? எவன் ஒரு கால் சுவாதீனமில்லாத பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளுவான்?"

"அப்போ, கைலாசத்துக்குப் பண்ணிக் கொள்ளுகிறதுன்னு முடிவு கட்டிட்டேளா?"

"என் தங்கை இல்லேன்னு, ஏதுடி உன் பிள்ளையை டாக்டராக்கப் பணம்? இன்னிக்கு அவளுக்குச் செய்கிற துரோகத்தையே இன்னொருத்தன் நமக்குச் செய்தால்..."

"கன்னு பின்னுவென்று பேசாதேயுங்கள். உலக ரீதியாகப் பேசுங்கோ. ஜட்ஜு கொடுக்கிற வரதட்சிணைப் பணத்திலிருந்து அவளைக் கல்யாணம் செய்து கொடுப்போம். நாலு காசு சம்பாதிக்கிற பிள்ளே கிடைக்காமலா போயிடுவான்?"

வேதாந்தக் கல் தேவலாயிற்று. பாகீரதி பிள்ளையை மிரட்டினாள். தான் சமுத்திரத்தில் விழுந்து விடுவேன் என்று அழுதாள்.

கடைசியில், பட்டணம் சென்று பெண் பார்ப்பதாக ஏற்பாடு செய்தார்கள்.

ஹைகோர்ட் ஜட்ஜ், தானுகா ஆபீஸ் 'ஓய்வு பெற்ற' குமாஸ்தாவுக்குக் கார் அனுப்பி விருந்தார். அவர்கள் எல்லாரும் போய் விட்டார்கள். வீடே வெறிச்சோடியது. மோகாவுக்கு நான்காவது வீட்டுப் பாட்டி துணைக்கு வந்திருந்தாள்.

"பாவி பண்ணறது எனக்குப் பிடிக்கவில்லே. எட்டு ஜோடி வளையும் காசுமாலேயும் உன் அம்மா வைச்சுட்டுப் போனா. உன் அப்பாவின் சொத்து வேறே. அதையெல்லாம் உன் மாமாகிட்டத்தானே கொடுத்திருந்தான். நீ கேளு உன் பணத்தை. இல்லாட்டா, 'கேஸ்' போடுவேன்னு சொல்லு.... உடனே கைலாசத்துக்கு உன்னைப் பண்ணிப்பா!"

மோகாவுக்கு நாராசமாக இருந்தது. பாட்டி முழிக்கு முன்பே, எழுந்து சமையலறைக்குப் போனாள்.

எல்லாரும் அன்றிரவே திரும்பினார்கள்.

"நீ என்னடா சொல்றே?" என்று சபேசம் கேட்டார்.

அடுத்த அறையில் மோகா கவலையுடன் சாய்ந்து நின்று கொண்டிருந்தாள்.

"நீங்க பார்த்தீர்களா பெண்ணை....?"

"என்னடா இப்படிக் கேட்கிறே... நாம எல்லோரும் ஒரு ஹாலில் தானே உட்கார்ந்திருந்தோம்...."

"நாம போனதும் அவ எழுந்திருக்கக் கூட இல்லே" என்றான் கைலாசம்.

"ஜட்ஜு வீட்டுப் பெண்ணு. அப்படி வளர்ந்துடுத்து. நம்ம வீட்டுக்கு வந்தால் சரியாயிடும்...." என்றாள் பாகீரதி.

"சரி, அம்மா இதையாவது சொல்லு. ஜட்ஜ் மானியப் பணத்தைக் கொடுத்து, சீரும் செனத்தியும் செய்து, பத்தாயிரம் ரொக்கமும் தந்து காரும் வாங்கி, டிஸ்பென்ஸரியும் வைத்துக் கொடுத்து, லட்சம் ரூபாய் வரையில் செலவு செய்கிறேன் என்றால் அதுக்குக் காரணம் வேண்டாமா?"

"ஒரே பொண்ணு. எல்லாம் நன்னு செய்து அவ நன்னு இருக்கணும் என்கிற துடிப்பு...."

"கோபிக்கக்கூடாது அம்மா .... அந்த ஜட்ஜு ஏன் என்னைத் தேர்ந்தெடுத்தார்?"

"பெரிசா படிச்சிருக்கேயென்றுதான்."

"அதுதான் அம்மா கிடையாது...."

பெற்றோர் அவனை ஏறிட்டுப் பார்த்தனர்.

"பின் என்ன?"

"ஏழைக் குடும்பத்திலேயிருந்து வந்தவன். இழுக்கிற இழுப்புக்கு வளைவான் என்று...."

"அப்படித்தான் இருக்கட்டுமே. நீ கலியாணமாகி அங்கேதான் போய்ச் சுகமாக இரேன்...."

"இருக்கலாம் அம்மா. இத்தனை சொத்தையும் பணத்தையும் உன் நாத்தனார் உன் காலடியிலே வைச்சா, மோகாவை மருமகளா ஏத்துக்குவியா?"

"கால் சுவாதீனமில்லாத பெண்ணையா?"

"ஒரு கால்தானே அம்மா. அதுவும் நான் ஒடிச்ச கால். 'ஆமாம்' 'மாட்டேன்'னு ஒன்னு சொல்லு திட்டவட்டமா...."

"....."

"அப்போ இரண்டு காலும் சுவாதீனமில்லாத பெண்ணை எப்படி அம்மா ஏத்துக் கொள்ளு சொல்றே?"

பாகீரதி திடுக்கிட்டுப் பார்த்தாள். சபேசம் துள்ளி நின்றார். "என்னடா, சொல்றே?"

"அவளுக்குக் குழந்தை வாதம் வந்ததில் இரண்டு காலுமே சுவாதீனமில்லாமற் போய் விட்டது அப்பா...."

பாகீரதிக்கு வாய் அடைத்தது.

"உனக்கு யார் சொன்னது? சுத்தப் பொய்" என்றாள் பாகீரதி.

"அவளேதான் அம்மா சொன்னாள். நீயும் அவ அம்மாவும் உள்ளே போனீர்கள். அப்பாவும் ஜட்ஜும் போர்ட்டிகோவுக்குப் போனார்கள், ஏதோ தனியாகப் பேச.... அப்போ அவள் சொன்னாள். 'நீங்க என்னைக் கல்யாணம் செய்துகொண்டு உங்க வாழ்க்கையை வீணாக அடித்துக் கொள்ளாதீர்கள். உங்களுக்குப் பிடிச்ச பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளுங்கள். என் விதி குழந்தையாக இருக்கும்போதே பிறந்து விட்டது' என்று தன் விதியைப் பற்றிச் சொன்னாள்."

தாய் தந்தையர் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

"நான் கிளம்பும்போதே அத்தையைத் தான் வேண்டிக் கொண்டேன். இந்தக் கலியாணம் நடக்கக் கூடாது என்று...."

"சரி. வேறே பார்த்துக் கொள்ளலாம்!" என்று பெருமூச்செறிந்தாள் பாகீரதி.

"இனி பெண் பார்க்க வரச் சொன்னால் நான் இந்த வீட்டுக்குள் காலடி கூட வைக்க மாட்டேன்!" என்றான் கைலாசம்.

"ஆமாம். மோகா மருமகள் இல்லே என்றால் எனக்கு வேறு மருமகளும் இல்லே!" என்றார் சபேசம்.

எல்லாவற்றையும் ஆதியோடு அந்தமாகக் கேட்டுக் கொண்டிருந்த மோகா, விருப்பு வெறுப்பு எல்லைகளையெல்லாம் தாண்டி, எதிலும் ஒட்டாத தன்மையிலிருந்தாள். அவள் கண்முன் ஆயிரமாயிரம் அம்மாக்கள் ஜகஜ்ஜோதியாக நின்றார்கள். மனத்துள் அம்மாவின் ஆசை பேருருவம் எடுத்து நின்றது.

# இடமில்லை! இடமில்லை!!

ஜூன் மாதம் முதல் தேதி. காலை ஒன்பது மணி சுமாருக்கு நானும் என் பிள்ளை ஆனந்தனும் பம்பாயில் மாதுங்கா ஸ்டேஷனில் நின்றுகொண்டிருந்தோம். சூர்யாவிலுள்ள ஓர் உயர்தரப் (பணக்கார) பள்ளியில் அவனைச் சேர்ப்பதற்காகப் புறப்பட்டிருந்தோம். மழை கால ஆரம்பமானகையால் எங்கே திடீரென்று மழை பிடித்து விடுமோ என்று முன்னேற்பாடாக ஆனந்தனின் மழைக் கோட்டு, தொப்பி தவிர எனது குடை, பர்ஸ் முதலியவற்றையும் சுமந்தவண்ணம் நின்றுகொண்டிருந்தேன்.

இப்பள்ளியில் ஆனந்தனைச் சேர்ப்பதற்காகப் பிரசவ ஆஸ்பத்திரி டாக்டர் ஜனன மரண ஆபீஸ் (முனிசிபல்) சர்டிபிகேட்; இப்பள்ளியின் நிர்வாக அதிகாரி ஒருவரின் சிபாரிசுக் கடிதம் அது இது என்று ஆறு மாதங்களாக அலைந்ததை நினைத்தால் இன்னும் எங்கள் கால்கள் வலியென்று கெஞ்சுகின்றன. எப்படியோ கஷ்டப்பட்டு இவைகளைச் சேகரித்துப் பள்ளிக்கு விண்ணப்பித்து, அநேக தடவை பள்ளிக்குச் சென்று எல்லாருடைய கால்களையும் பிடித்ததில் ஒருவிதமாக ஜூன் முதல் தேதியன்று பரீட்சைக்கு அழைத்து வரச் சொல்லிக் கடிதம் வந்தது. காரணம் ஏழு வயது நிரம்பாத அவனை இரண்டாவதுக்கு எடுத்துக் கொள்ள வேண்டுமானாலும் பரீட்சை செய்துதான் எடுப்பார்களாம். 'இவ்வளவு கஷ்டப்பட்டு எல்லாவித சர்டிபிகேட்டுகளும் சிபாரிசுக் கடிதங்களும் சேகரித்திருக்கிறோம்' நல்ல படியாக இவன் பாஸாக வேண்டுமே' என்ற கவலை என்னைச் சதா வாட்டி வதைத்துக்கொண்டிருந்தது.

வண்டியும் வந்தது. குறித்த நேரத்தில் சூர்யா போய்ச் சேர்ந்தோம். பரீட்சை ஆரம்பிக்கப்பட்டது. பரீட்சைக்கு வந்தவர்கள் சிறு குழந்தைகள். ஆகையாலும், பொழுது போதாததாலும் வாயினாலேயே கேள்வி பதில்கள் கேட்கப்பட்டன. ஆனந்தன் நன்றாகப் பதில் சொல்லிக் கொண்டிருந்தது வெளியில் நின்று கொண்டிருந்த எனக்குக் கேட்டது. நிச்சயம் இடம் கிடைக்கும் என்று நம்பி சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தேன்.

பதினைந்து நிமிஷங்கள் கழித்து ஒரு க்ளார்க் வெளியே வந்து பாஸான குழந்தைகளின் பெயர்களைச் சொல்லி உள்ளே போய் அட்மிஷனுக்காக உட்காரச் சொன்னார். என் ஆனந்தன் பெயர் முதலாவதாக இருந்தது. சந்தோஷத்துடனும் பரபரப்புடனும் உள்ளே நுழைந்தேன். பர்ஸில் எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்த்தேன். 'திக்'கென்றது. பர்ஸைக் காணவில்லை! என் முகம் வெளிறி விட்டது. ஆறு மாதங்களாகச் சேகரித்த காகிதங்களும் நூறு ரூபாயும் ஒரு நிமிஷத்தில் போய்விட்டன. என்ன செய்வது, எங்கே போய்த் தேடுவது என்று தெரியாமல் தவித்தேன். வேறு வழியில்லை. மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு பிரின்ஸிபாலிடம் நடந்ததைக் கூறினேன். 'இன்றுதான் கடைசி நாள். இனி எங்களால் ஒன்றும் செய்ய முடியாது' என்று சொல்லிவிட்டார். எவ்வளவோ மன்றாடினேன். கடைசியில் மனமிரங்கி, மறுநாள் பன்னிரண்டு மணிக்கு டூப்ளிகேட் சர்டிபிகேட்டுடன் வர வேண்டும். இதற்குமேல் தாமதித்தால் இடமில்லை' என்றார்.

முதலாவதாகத் தேறிய ஆனந்தன், ஆனந்தப்பட வேண்டியவன். என் நிலைமை அரைகுறையாக அறிந்து தொங்கிய முகத்துடன் என்னுடன் வீடு வந்து சேர்ந்தான். இவ்வளவு பெரிய பம்பாயில் எனது சிறிய பர்ஸ் கிடைக்கும் என்ற நம்பிக்கையே எனக்கில்லை.

இயந்திரம்போல் வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருந்தேன். அப்போது வாசல் கதவு தட்டப்பட்டது. யாரோ ஒருவர் என் கணவர் பெயரைச் சொல்லி, 'இதுதானே அவர் வீடு?' என்று கேட்டார். 'ஆம்' என்றேன். அவர் சட்டென்று தம் பையிலிருந்து ஒரு பர்ஸை எடுத்தார். ''இது உங்களுடையதா? இது எனக்கு இன்று காலை வண்டியில் அகப்பட்டது. யாருடையதோ என்று திறந்து பார்த்தேன். விலாசம் இருந்தது. அதை வைத்துக்கொண்டு இவ்விடம் வந்தேன். இந்தாருங்கள். பர்ஸில் எல்லாம் சரியாக இருக்கிறதா?'' என்றார்.

என் கைகள் என்னையும் அறியாமல் அவரை வணங்கின. கடவுளே அந்த மனிதர் உருவில் வந்து என்னை—இல்லை, என் மைந்தனின் துக்கத்தைத் துடைத்தார். என் மகிழ்ச்சியில் அவருக்கு நன்றி கூறினேனோ இல்லையோ, மறந்தே போய் விட்டது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம்; எனது ஆனந்தனின் கல்விக்கு அஸ்திவாரக் கல் அவரால் நாட்டப்பட்டது என்பதுதான் அது.

மாலதி மாதவன்
மாதுங்கா



எஞ்ஜினீயரிங் கல்லூரிகளில் அட்மிஷனுக்காகத் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களின் எண்கள் வெளியாகியிருந்தன. 'படக் படக்' என்று அடித்துக் கொள்ளும் மனத்துடன் செய்தித் தாளைப் பார்த்தேன். அந்தோ, பரிதாபம்! என்னுடைய எண்ணுக்கு முந்திய எண்ணும் பிந்திய எண்ணும் என்னை விழித்துப் பார்த்துக்கொண்டு வீற்றிருக்க, என்னுடைய எண் மட்டும் மாயமாய் மறைந்திருந்தது! சரி, தொலைகிறது, நம்முடைய காலடிபட எஞ்ஜினீயரிங் கல்லூரிகள் பாக்கியம் செய்யவில்லை என்று சமாதானம் செய்து கொண்டேன்; பி. ஈ.க்கு இடம் இல்லையா, படையெடு பி. எஸ்ஸி.க்கு என்று.

முதல் கோணல் முற்றும் கோணல் என்ற வாக்கு என் வரையில் பலித்து விடும் போல் இருந்தது. கலைக் கல்லூரியில் 'இண்டர்வ்யூ'வுக்குப் புறப்படும்போதே தகராறு. 'நான் முன்னால் போகிறேன் ஸ்டேஷனுக்கு. நீ சாப்பிட்டுவிட்டுப் பின்னால் வா, மார்க் லிஸ்ட், சர்டிபிகேட் எல்லாம் எடுத்துக் கொண்டு. பிறகு சேர்ந்து போகலாம்' என்று கூறிவிட்டு அண்ணா முன்னால் போக (அடடா, இதைச் சொல்ல மறந்துவிட்டேனே! நாங்கள் அப்போது கோவையிலிருந்து ஏழு மைல் தொலைவில் உள்ள குடியலூரில் இருந்தோம்.) என் பாழும் காதில் அது 'மார்க் லிஸ்ட், சர்டிபிகேட் எல்லாம் எடுத்துக் கொண்டு போகிறேன்' என்று அண்ணா சொல்வதாக விழுந்து தொலைத்தது. சாப்பிட்டு விட்டு ஜில்லென்று கிளம்பி விட்டேன். வெறும் கையை வீசிக் கொண்டு கோயமுத்தூரில் இறங்கிய பிறகு தான் அண்ணா கேட்டான்: ''டி. ஸி. சர்டிபிகேட் எல்லாம் எங்கேடா?'' என்று. ''நீ எடுத்துக் கொண்டு வரவில்லையா?'' என்று நான் எதிர்க் கேள்வி போட, அவன் முறைக்க, நான் விழிக்க .... அதையேன் கேட்கிறீர்கள், போங்கள் !

என்னைப் போய்க் கல்லூரியில் இருக்குமாறு சொல்லி விட்டு, மார்க் லிஸ்ட், சர்டிபிகேட் எல்லாம் எடுத்து வர வீட்டுக்குத் திரும்ப ஓடியவன் மதியம் இரண்டு மணிக்கு மேல் தான் திரும்பினான். ஐயகோ! அது வரையில் அறையிலிருந்த பிரின்ஸிபால், அப்போதுதான் வகுப்பெடுக்கக் கிளம்பிப் போக வேண்டுமா? மூன்றரை மணிக்குமேல் திரும்பியவர் ''இனிமேல் இண்டர்வ்யூ கிடையாது. நாளை வாருங்கள்'' என்று கூறிவிட்டார்.

அடுத்த இரண்டு மூன்று நாட்களுக்குத் தினசரி 'நாளைத் தருவார்' ஆக மாறினார் பிரின்ஸிபால். நான்காவது நாள் ஞாபகமாக டி. ஸி. மார்க் லிஸ்ட் எல்லாம் எடுத்துக் கொண்டு கிளம்பினோம். நல்ல வேளை, பதினொரு மணிக்குள் பிரின்ஸிபாலைப் பார்க்க முடிந்தது. ஆயினும் என்ன செய்வது? 'கணிதவியலில் இடம் இல்லை. வேறு ஏதாவது 'குரூப்' எடுத்துக் கொள்'' என்று இயம்பினார் கல்லூரி முதல்வர். 'ஊச்! கணிதவியலைத் தவிர வேறு எதையும் கண்ணெடுத்தும் பாரேன்' என்று நான் கணிதவியலிடம் என் காதலை எடுத்தியம்ப, ''எதற்கும் இன்னொருமுறை வா, பார்ப்போம்'' என்று கூறி வழி அனுப்பி வைத்தார் கல்லூரி முதல்வர்.

இங்கென்று இல்லாத தெய்வங்களை யெல்லாம் வேண்டிக் கொண்டு பிரின்ஸிபாலின் அறைக்குள் நுழைந்தேன். கணிதவியலில் இடம் இருப்பதாகக் கூறியபிறகுதான் மூச்சு ஒழுங்காக வந்தது எனக்கு. சர்டிபிகேட்டுகளை எடுத்து நீட்டினேன். ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டே வந்தவர் திடீரென்று கேட்டார் ''அம்மை குத்திக் கொண்டதற்கு அத்தாட்சி எங்கே?'' என்று. நான் ''இல்லை'' என்று தலையாட்டினேன். ''அது இருந்தால் தான் அட்மிஷன் கிடைக்கும்'' என்று கூறினார் பிரின்ஸிபால். அட, கடவுளே! இன்னும் என் கஷ்டம் தீர்ந்தபாடில்லையா ?

அடுத்த ஏழு நாட்களுக்கு முனிஸிபல் ஆபீஸில் தினம் தவறாமல் ஆஜராகிக் கொண்டிருந்தேன். 'அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டரில்' கையெழுத்துப் போடாத குறை. தினமும் ஒரே பதிலைக் கேட்டுத் திரும்பிக் கொண்டிருந்தேன். 'அம்மைப் பால் இல்லை' என்ற பதில்தான் வந்தது! எட்டாவது நாள் போனபோது எனக்கு முன் பத்துப் பதினைந்து பேர்கள் காத்துக் கொண்டிருந்தார்கள். 'அம்மைப்பால் இல்லை' என்ற பதில்தான் வந்தது அன்றும். அவ்வளவுதான். ஒருவர் 'சடா புடா'வாகக் கிளம்பி, 'அவுட்' வாணமாக மாறினார். ''இதோ சேர்மனிடம் போய்க் கேட்கிறேன். எட்டு நாட்களாக அம்மைப் பால் இல்லாமல் என்ன செய்கிறீர்கள்?'' என்று கிளம்பினார். மறுகணமே, இந்திர ஜாலம், மகேந்திர ஜாலமாக, 'அம்மைப் பால்' அம்மை குத்துபவரின் கைக்கு வந்தது! அவருடைய கோபத்தைக் காட்டி ஆளுக்கொரு திருகுத் திருகி, ஒரு சர்டிபிகேட்டையும் கிறுக்கிக் கொடுத்து எல்லோரையும் வழி அனுப்பி வைத்தார். வாங்கிக் கொண்டு கல்லூரிக்குப் பறந்தேன், 'ஆட்டோ'வில்! இதற்குள் பிரின்ஸிபால் பறந்து விட்டிருந்தார் சென்னைக்கு. (விமானத்தில் தான்) அப்புறம் ஒரு வாரம் கல்லூரிக்கும் வீட்டுக்கும் நடந்து நடந்து, ஐயோ, அதையேன் கேட்கிறீர்கள்! இவ்வளவுக்கும் பிறகு ஒரு சுபயோக சுப தினத்தில் (எனக்கு மட்டும்) கல்லூரியில் இடம் கிடைத்தது என்று வைத்துக் கொள்ளுங்களேன்!

ஆர். நாராயணசாமி
கோயமுத்தூர்



# ஆரியன்

இந்தியாவின் மிகவும்
மேன்மையான டூத் பிரஷ்
நன்ருக சுத்தி செய்கிறது
நீடித்து உழைக்கிறது

பெரியவர்களுக்கு ஏற்ற ஸ்டான்டர்ட் ஸைஸ்களிலும் குழந்தைகளுக்கு ஏற்ற பிரத்யேகமான ஸைஸ்களிலும் கிடைக்கும்.






நீங்கள் விரும்பி வாங்கக்கூடியது
**ஆரியன் பிரஷ்.**

பலனளிக்கும் சோப் நுரைக்கு ஆரியன் ஷேவிங் பிரஷையே
எப்பொழுதும் உபயோகியுங்கள்

---

## புதிய பெரிய டப்பாவில்
# கால்கேட்
# பேபி பவுடர்

அதிகப் பவுடர்...
அழகச் சிக்கனம்...

புதிய சுலபமாக
அழுந்தும் மூடி!

குழந்தையின் நளினமான
சருமத்திற்கு இதமளிக்கிறது!





# 'உண்ணப் புக்கு வாய் மறந்து...'

## தி.சா.ராஜு

"சுபேதார் சாஹிப்பின்டே ஊர் ஏதாணு?"

"சத்தியமங்கலத்துக்குப் பக்கத்திலே உள்ள பள்ளூரி!"

கேள்வி கேட்டது சிப்பாய் அப்புக்குட்டன் வாரியர். விடையிறுத்தது சுபேதார் ஆறுமுகம். அவர்கள் இருவரும் அல்வார் நகரத்திலிருந்து பத்து மைல் தொலைவிலுள்ள சில்லிசைட் என்ற கிராமத்தில் ஒரு பெரிய வேப்ப மரத்தின் மேல் உட்கார்ந்திருந்தனர். மரக்கிளைகளின் மேல் ஒரு பெரிய கயிற்றுக் கட்டிலைப் பழைய டெலிபோன் கம்பிகளினால் பிணைத்திருந்தனர். மரத்தின் அடிக்கிளையில் கவலையைப் போல் பிரிந்திருந்த பகுதியில் ஓர் ஆறு வோல்ட் மின்பெட்டி, உணவுத் தூக்கு, தர்மாஸ் பிளாஸ்க், தோட்டாக்கள். பெட்டியிலிருந்து கம்பி இணைத்துத் தொலை ஒளி வீசும் சக்தியுள்ள விளக்குகளுடன் பிணைத்திருந்தனர். விசையைப் பொருத்தாத காரணத்தினால் எங்கும் இருள் சூழ்ந்திருந்தது.

இருவர் காலிலும் ஷிகாரிச் செருப்பு, அரை நிக்கர், காக்கிச் சட்டை; தலையில் தொப்பியுடன் ஒளி விளக்கும் இணைந்திருந்தது. அதற்குத் தேவையான பாட்டரி அவர்களுடைய சட்டைப் பையில் இருந்தது. சுபேதார் ஆறுமுகம் துப்பாக்கியைத் தோளில் சாய்த்துக் கொண்டு வானத்தைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தார். அங்கே மின்னிய ஒன்றிரு உடுக்கள் அவரைப் பழைய நினைவுகளினூடே சுமந்து சென்றன.

புழுதிக் காற்று வீசிற்று. உஷ்ணமான மணல் காற்று வேனிற் காலத்து வெந்நீர் அடுப்பின் சுகத்தை அளித்தது.

"தூ. எந்த ஒரு ஊராணு சார், உஷ்ணக் காலத்து ஒரே எரி, தணுக்கும் போள் பனிக் கட்டி!" வாரியர் சலித்துக் கொண்டான்.

"அப்புக்குட்டா, மெள்ளப் பேசு, ஆளரவம் கேட்டால் நாம் இரைக்காகக் கட்டியிருக்கும் ஆடு தனியான குரல் கொடுக்கும். இந்தப் பக்கத்துப்புலிகள் வெகு சாமர்த்தியமானவை. தண்ணீர் குடிக்கவே கீழக்கு வராமல் போய் விடும். பிறகு கர்னல் ஸாஹிப்புக்கு என்ன பதில் சொல்லுவது? எனக்கு இந்த வருஷம் லீவு கிடைத்தாற் போலத்தான்."

"சார்! கழிந்த கொல்லம் லீவிலே போயோ?"

"மெதுவாகப் பேசு, அப்புக்குட்டன்! நான் இங்கேதான் உனக்கு அரை அடி தூரத்தில் உட்கார்ந்திருக்கிறேன். போன வருஷம் லீவிலே போனேன். போய் ஏழு நாளைக்கெல்லாம் கோவா ஆபரேஷனுக்காகத் திரும்ப அழைத்து விட்டார்கள்."

"சாருக்கு எத்தரை குட்டிகள்?"

"எனக்குக் கலியாணமாகிப் பன்னிரண்டு வருஷங்களுக்குப் பிறகு குழந்தை பிறந்தது குட்டன். இரட்டைக் குழந்தைகள். ஆண்கள். இரண்டுக்கும் இன்னும் ஒரு வயது கூட முடியவில்லை. அவை தாயின் மடியில் போட்டி போட்டுக் கொண்டு விளையாடுவதைப் பார்த்தால் எவ்வளவு ஆனந்தமாயிருக்கும், தெரியுமா?" சுபேதார் ஆறுமுகத்தின் குரல் தழுதழுத்தது.

"சார், மஹா பாக்யவானாணு. இரட்டை ஆண்குட்டி எல்லோருக்கும் கிட்டுமோ?"

"என்னுடைய பாக்கியம்தான் தெரிந்து கிடக்கிறதே குட்டன். குழந்தைகளோடு முழுதாக ஒரு வாரம் கூட என்னால் இருக்க முடியவில்லை!"

"சார்! எனிக்கும் லீவு கிட்டுமோ? வழியுண்டோ?"

"இப்போது தானே நீ திரும்பி வந்தாய்? மறுபடியும் லீவு எதற்கு?"

"ஈ லீவிலே ஞான் அனுஜத்தியோடெ கல்யாணம் கழிச்சு. பின்னெ என்டெ விவாகம் கழிக்கணும்!"

இரைக்காகக் கட்டியிருந்த ஆடு 'மே, மே' என்று குரல் கொடுத்தது. இருவரும் அந்தத் திசையைக் கூர்ந்து கவனித்தனர். மங்கிய பிறை நிலவொளியில் அது கட்டுத் தறியில் தலையைத் தேய்த்துக் கொண்டது தெரிந்தது.

"நிறையத் தழை போட்டிருக்கிறாய் அல்லவா?" குசுகுசுத்தவாறு கேட்டார் ஆறுமுகம்.

"இட்டிட்டுண்டு சார், இட்டிட்டுண்டு. ஒரு வேலை கடுவன்...." அப்புக்குட்டன் தயங்கினான். அவனுடைய நெஞ்சு அடித்துக் கொண்டதை ஆறுமுகத்தினால் கூடக் கேட்க முடிந்தது. அவர் மெள்ள வாரியரின் தோள் மேல் கைவைத்தார். "பயப்படாதே. காட்டு மிருகம் வந்தால் ஆடு கத்தும் விதமே வேறு. அதனுடைய மனத்தில் ஏதோ சந்தேகம் தோன்றியிருக்க வேண்டும்."

அப்புக்குட்டன் கொட்டாவி விட்டு ஏதோ முணுமுணுத்தான்.

"தூக்கம் வருகிறதா வாரியர்?"

"இல்லா, இல்லா, உறக்கம் இல்லா. பழைய காய்யம் ஒன்னு ஓர்மம் வன்னு. குமாரன் ஆசான் பலிக்குக் கட்டிய ஆட்டின்டெ



மனசு குதிக்க பாட்டொன்னு எழுதிட்டுண்டு. அதோடெ ஓர்மம்!''

''சபாஷ், உனக்குப் பாட்டெல்லாம் வருமா?'''

''சார்! என்னெ நிங்கள் வெறும் சிப்பாயின்னு விஜாரிக்கண்டா. எண்டெ அச்சன் வலிய காவ்யகர்த்தாவாணு. ஆயானு அம்பலத்திலே பாடும் போள் கேக்கணும்!''

வாரியரிடம் ஆறுமுகத்துக்கு மதிப்பு வளர்ந்தது! ''அப்படியா குட்டன், எனக்குப் பாட்டைப் பத்தி ஒண்ணும் தெரியாது. என் தகப்பனார் சாதாரண வேட்டைக்காரர்!''

''மஹாகவி வள்ளத்தோளின்டெ பாட்டு பலதும் ஞான் அறியும். சங்கம்புழா எழுதிய ரமணனெ நிங்கள் கேட்டிட்டுண்டோ?''

''எங்கிலும் சந்த்ரிகை லோகமல்லே!'' குட்டன் தன்னெ அறியாமல் பாடத் தொடங்கினான்.

''மெதுவாய், மெதுவாய்!'' என்று ஆறுமுகம் எச்சரித்தார்.

அப்புக்குட்டன் மெய்ம்மறந்து பாடிக்கொண்டிருந்தான். ஆடு மேய்ப்பதைத் தொழிலாக உடைய ரமணனிடம் உயர்குலத்து மங்கை காதல் கொண்டதையும், பிறகு சமுதாயத்தின் பிடிகளைத் தளர்க்க முடியாமல் அவன் அவளைத் நிரஸ்கரித்த வரலாற்றையும் மலர் உதிர்வதைப் போன்ற மலையாள மொழியில் அவர் கேட்டார். கபேதார் ஆறுமுகத்துக்கு மலையாளம் பேச வராது. ஆனால் நன்றாகப் புரிந்து கொள்ளுவார். அவரது சொந்த ஊரான கோவை மாவட்டத்திலும் மலையாள வழக்கு அதிகம்.

ஆறுமுகம் சிரத்தையுடன் கேட்டுக் கொண்டிருந்தார். வெகு தொலைவில் ஏதோ உறுமல் கேட்டது. உடனே அவர் வாரியரின் தோளை உலுக்கினார். பாட்டு நின்றது. மறுபடியும் உறுமல். இந்தத் தடவை உரக்கவே கேட்டது.

வானத்தில் பிறை நிலா மங்கிய ஒளியை வீசிற்று. ஒலிவந்த திசையைக் கூர்ந்து கவனித்தார் ஆறுமுகம். நெடிய விலங்கு ஒன்று பாறையின் வலது பக்கத்திலிருந்து வெளிப்பட்டாற் போலத் தோன்றியது. ஆறுமுகம் பார்வையைக் கூர்மையாக்கிக் கொண்டார். செவிகள் ஒலியைப் பிடித்தன. மூச்சை அடக்கி உருவத்தைக் கவனித்தார். புலி....புலியே தான். நீளமும், உயரமும், வலிமையும் நிரம்பிய வன ராணி. பாறையின் பின்புறத்திலிருந்து புறப்பட்ட புலி தன் செவிகளை முன் பக்கம் குவித்துக் கொண்டு முன்னங் காலைத் தூக்கியவாறு நின்றது. அதற்குப் பின்னால் ஏதோ வந்த மாதிரியும், மங்கலாகத் தோன்றி மறைந்தது. ஆறுமுகத்தின் பார்வை அதையும் கவனிக்கத் தவறவில்லை. 'அது என்னவாயிருக்கலாம்?' அவர் சிந்தனையில் ஆழ்ந்தார்.

இரைக்காகக் கட்டப்பட்டிருந்த ஆடு கதறியது. கட்டுத்தறியை முறித்துக்கொண்டு ஓட முயற்சி செய்தது. கழுத்துப் புண்ணாகும்படி கட்டுத்தறியைச் சுற்றிச் சுற்றி வந்தது.

அடிமேல் அடி வைத்துக் கொரில்லாப் போர்வீரனைப் போல் முன்னேறிற்று அந்த வனவிலங்கு. அதன் முகத்தில் இரு கனல் துண்டங்கள் ஜொலித்தன. அவை பரணின் பக்கம் திரும்பும்போதெல்லாம், ஆறுமுகத்தின்



இதயம் வயிற்றுக்குள் போய் வந்தது. வாரியர் குப்புறப் படுத்துப் புலியின் நடையைப் பார்வையில் அளந்தான். ''பாணிவிலோட மரணம் வ்யாக்ரம், அதாவது — புலியாலே சம்பவிக்க.'' அவன் முணு முணுத்தான். பிறகு ஏதோ நினைவு வந்தவனைப் போல் ''சார், சார், லைட்!'' என்று குளறினான்.

''பேசாதிரு. அது இரையைக் கவ்வட்டும், பிறகு வெளிச்சம் போடலாம்'' என்று இரகசியமாகச் சொன்னார் ஆறுமுகம்.

புலியின் மேலுள்ள வரிக் கோடுகள் பளபளத்தன. இருபுறமும் பார்த்து விட்டுக் கால்களை அழுத்தி ஊன்றி ஒரு நீண்ட தாவல். ஆஹா, எத்தகைய வேகம்? ஆட்டின் குரல்வளை அதன் பற்களிடையே சிக்கிற்று. நீண்ட நகங்கள் அதன் வயிற்றைப் பீறின. உயிரின் ஓலம் சிறிது சிறிதாகக் குறைந்து அடங்கிற்று. எங்கும் ஒரு பயான அமைதி.

இரையை விட்டு விட்டு நாற்புறமும் கம்பீரமாகப் பார்த்தது அந்த வன விலங்கு. பிறகு ஆட்டின் குரல்வளையைப் பற்களால் பற்றியவாறு அது தரையில் இழுபடப் பாறையின் பிளவை நோக்கி அடி வைத்தது புலி.

கபேதார் ஆறுமுகம் துப்பாக்கியைத் தோளுக்கு உயர்த்திக் கொண்டார். இடது கண் மூடிக் கொண்டது. துப்பாக்கியின் அடிக்கட்டை தோள்பட்டைக்கு அடியில் அக்குளில் இறுகிற்று. கன்னம் கட்டையுடன் உறவாட வலது கை ஆள் காட்டி விரல் விசையைத் தடவியது. ''வாரியர்!'' ஆறுமுகம் கிசுகிசுத்தார். ''நான் 'லைட்' என்று சொன்னதும் வெளிச்சம் போடணும்!''

''சரி சார்!'' அவனுக்கு மூச்சு முட்டியது.

புலி பாறையருகில் இரையைவிட்டு எங்கோ ஓடிற்று. பிளவினுள் பதுங்கியது. ஆறுமுகம் நெடுமூச்சு விட்டார். அவரது உள்ளத்தில் நிராசை இழை ஓடிற்று. மறுகணமே புலி திரும்பவும் இரையண்டை ஓடி வந்தது. அதைத் தொடர்ந்தும் ஏதோ வந்த மாதிரி மங்கலாகத் தெரிந்தது.

புலி தன் முன்னங் கால்களை ஆட்டின் உடலில் பரப்பி வாயைக் கழுத்தண்டையில் வைத்துக் கவ்விற்று.

ஆறுமுகம் துப்பாக்கியை உயர்த்தினார்; பழகிய செய்முறைகள் தானாக நடந்தன; விசையை முதல் இழுப்புப் புள்ளியில் நிறுத்திக்

கொண்டு 'லேட்' என்று கூவினார். துப்பாக்கியின் மேல் கட்டையிலுள்ள 'வு' இறுதித் தொளை ஆகியவற்றின் வழியாகப் புலியின் தலையைக் குறி பார்த்தார்.

பாறையின் பக்கத்தில் பளிரென்று பகல் ஒளி வீசிற்று. நிமிர்ந்து பார்த்த புலியின் கண்கள் கருங்கிக் கலங்கின. அது நிலைதடுமாறிற்று. துப்பாக்கி விசையை இறுக்கி அழுத்து முன்பு அங்கு இன்னொரு காட்சியைக் கண்டார் ஆறுமுகம்.

பூனைக் குட்டிகள் போன்ற இரு சிறு புலி மதலைகள் தாயின் மார்பைக் கவ்வின. ஒன்றின் மேல் ஒன்று விழுந்து புரண்டன. போட்டி போட்டுக் கொண்டு அவை பால் குடிப்பதில் முனைந்தன. மரணத்தின் கரிய பிடியில் உயிரின் துடிப்பு ஆறுமுகத்தின் இதயத்தை விம்மச் செய்தது. வெளிச்சம் அக்குட்டிகளுக்கு எத்தகைய பயத்தையும் விளைவிக்கவில்லை. இரண்டும் கண்களை மூடிய வண்ணம் தாயின் மார்பைச் சுவைத்துச் சுவைத்து அனுபவித்துக் கொண்டிருந்தன.

ஆறுமுகம் துப்பாக்கியைக் கீழே இறக்கினார். ''லேட்டை அணை, வாரியர்.''

விளக்கு அணைந்தது. மறுபடியும் காரிருள். புலி இவர்கள் இருந்த புறம் ஓர் அரசியின் கம்பீரத்தோடு பார்த்தது. பிறகு திரும்பித் தன் இரு குட்டிகளையும் பெரிய வாயில் கவ்விக் கொண்டு மலைச்சரிவை நோக்கி நடந்தது. தான் கொன்ற இரையை அது திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

பிறை நிலவை முகில் துண்டொன்று மறைக்கவே சிதறிக் கிடந்த மங்கிய ஒளியும் மறைந்து வனத்தை இருள் கப்பிற்று.

கவிதைச் சுவையில் உள்ளத்தைக் கரைக்கத் தெரிந்து கொண்டிருந்த வாரியர் மட்டும் அங்கு ஒரு பேரொளியைக் கண்டான்.

# வட்ட மேஜை

## உண்மை நிலை என்ன?

**ப**ஸ் வரி உயர்வினால் பஸ் கட்டணத்தை உயர்த்தி விட்டார்கள் என்றும், இதனால் புதிய வரியால் பஸ் சொந்தக்காரர்களுக்கு அதிக லாபம் என்று சில பத்திரிகைகளில் விமர்சனம் செய்யப்பட்டுச் சர்க்காரையும், பொது மக்களையும் சிந்திக்கக் கோருகிறது.

பஸ் கட்டணம் சட்ட ரீதியாக நிர்ணயிக்கப்பட்டு வசூலிக்கப்பட்டு வருகிறது. பஸ் சொந்தக்காரர்கள் தங்கள் இஷ்டம் போல் கட்டணத்தை உயர்த்த முடியாது. அப்படி எங்கேயாவது பஸ் கட்டணத்தை உயர்த்தினால் சர்க்கார் நடவடிக்கை எடுக்க முடியும்.

சில மார்க்கங்களில் தேவைக்கதிகமான பஸ்கள் போக்குவரத்தில் இருப்பதால் அந்த இடங்களில் மட்டும் போட்டாபோட்டி ஏற்பட்டுக் கட்டணத்தை ஒருவருக்கொருவர் குறைத்துக் கொண்டிருக்கிறார்கள். லாபம் வருவதால் தான் போட்டா போட்டி போடுகிறார்கள் என்று சொல்வது சரியல்ல. வியாபாரத்தில் ஒருவன் முறை தவறிப் போட்டியிடும்போது மற்றவன் அந்நிலைக்கு வரவில்லையானால் நஷ்டத்தில் பெரிய நஷ்டம் ஏற்படும் என்பது வியாபாரிகளுக்குத் தெரியும்.

இந்த முறையில் சில ரூட்டுகளில் சர்க்கார் நிர்ணயித்த மைலுக்கு ஏழரைத் தம்பிடியை ஆறு அல்லது ஏழு தம்பிடியாகக் குறைத்து சர்வீஸ் நடத்தி வந்ததை இப்போது புதிய வரியினால் போட்டியை நிறுத்திச் சரியான கட்டணத்தை வசூலிக்கிறார்கள் என்பதுதான் உண்மை. இதனால் பஸ் கட்டணத்தை எல்லா ரூட்டுகளிலும் உயர்த்தி விட்டார்கள் என்று சொல்லுவது சரியில்லை. பெரும்பாலும் 1954ல் சர்க்கார் நிர்ணயித்த மைலுக்கு ஏழரை தம்பிடி கட்டணந்தான் நடைமுறையில் வசூலிக்கப்படுகிறது என்பதைப் பரிசீலனை செய்தால் தெரியும்.

பஸ்களுக்கு விதிக்கப்பட்ட புதிய வரி தினசரி மைலுக்குக் கால் தம்படிதான் ஆகிறது என்பது உண்மை. ஒரு பஸ் வருடம் முழுதும் ஓடும் என்றும், அல்லது நாள் முழுதும் எல்லா சீட்டுகளிலும் பிரயாணிகள் பிரயாணம் செய்வர் என்றும் கணக்கிட்டுப் பார்க்கக்கூடாது.

55 சீட்டுகள் கொண்டதும் தினசரி 150 மைல் ஓடக்கூடியதுமான ஒரு பஸ் வருடம் முழுதும் ஓடிச் சீட்டுகள் முழுதும் பிரயாணம் செய்வார்கள் என்று துல்லியமாகக் கணக்கிட்டுக் கொண்டு மைலுக்குக் கால் அல்லது அரை தம்பிடி வீதம் கட்டணத்தை உயர்த்துவதின் மூலம் பஸ் சொந்தக்காரர்களுக்குத் தான் அதிக லாபம் என்று விவாதிப்பது. ''உரலுக்கு ஒரு பக்கம் இடி, மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி'' போன்றதாகும்.

ராசிபுரம்
12–8–62

வி. மாரப்ப கவுண்டர்

## நீதிக்கமிஷன் தேவை

**த**மிழகத்திலுள்ள சகல அரசியல் கட்சிகளும், தொழிலாளர் இயக்கங்களும் ஒரு பகிரங்க நீதிக் கமிஷனை ஏற்படுத்த நடவடிக்கை எடுக்கா விட்டால் காங்கிரஸ் ஆட்சியின் எதேச்சாதிகாரம் வளரும்; சர்வாதிகாரம் தலை தூக்கும்; தொழிலாளர் நசுக்கப்படுவார்கள்; பேச்சுரிமை மறுக்கப்படும்; சாதி வெறி தலைவிரித்தாடும்; பலாத்காரம் ஓங்கும்; ஜனநாயகம் சாய்ந்து போகும். ஆதலால் தி. மு. கவினரை உடனடியாக விடுதலை செய்ய முயல வேண்டும். தமிழகத்தின் பெயருக்கே மாசு கற்பிக்கத் தமிழக அரசு ஈடுபட்டிருப்பது கண்டு வருந்துகிறோம்.

கொழும்பு-12
4–8–62

கவிஞர் சக்தி பாலையா

## ஓட்டப் பந்தயம்

''ஓட்டப் பந்தயம்'' என்ற படக் கதையை எழுதி வரும் திரு ஏ. எஸ். சுந்தரராஜன் அவர்களுக்கு என் வாழ்த்துக்கள். ''செல்வம்'' அவர்களின் படங்களும், கதையின் ரசத்தைப் பெருக்கும் பாங்கில், நூதனமயமாக அமைந்திருப்பது போற்றற்குரியது.

திருப்பூர்
10-8-62

பி. சின்னசாமி

# உங்கள் வீட்டிற்குப் பிரகாசமான புதிய பாஷன்

# ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்



ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஒரு ஆயுட்கால முதலீடு. எளிதில் சுத்தமாக வைத்திருக்கவும், சுத்தப்படுத்தவும் முடிகிறது. அதைக் கழுவி அலம்பி, துடைத்து வைக்கலாம். அவ்வளவேதான். சமையல் செய்வதற்கு ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் மிகச் சிறந்தது. அதற்கென எவ்வித ருசியும் கிடையாது. மேலும் அதன் செம்பாலான அடிப்பாகம் உணவு அடியில் பிடிப்பதையும், தீய்ந்து போவதையும் தடுக்கிறது. உங்கள் ஊரிலுள்ள கடையில் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள் கிடைக்காவிடில், அவை கிடைக்குமிடம் பற்றிய விபரத்திற்குக் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்:

**NICKEL INFORMATION BUREAU PRIVATE LIMITED,**

United Bank of India Building,
Sir Phirozeshah Mehta Road, Bombay I.

---

# இலவசம்

## கவர்ச்சி மிகுந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

தேவைக்கு ஏற்பத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். மன மகிழ்வு பெறலாம்.





ஓ. கே. தயாரிப்புகளின் பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள்.








★ ஓ. கே. வனஸ்பதி ★ ஓ. கே. டபிள் ரிபைண்ட் ஆயில் ★ கோல்டன் ஸாலட் ஆயில் ★ ஓ. கே. சந்தன சோப் ★ ஓ. கே. ஓரியண்டல் ரோஸ் சோப் ★ ஓ. கே. கிரீம் சோப் ★ மியோகே சோப் ★ சோப் சிப்ஸ்

நீங்கள் வாங்கும் ஒவ்வொரு ஓ. கே. தயாரிப்புகளிலும் உள்ள பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள். அவற்றிற்குப் பதிலாக, உங்கள் அருகிலுள்ள ஓ. கே. வியாபாரியிடமிருந்து, நீங்கள் விரும்பும் அளவிலும், வடிவிலும் கவர்ச்சி மிகுந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்களைப் பெறுங்கள்.

இந்த விசேஷமான பரிசுத் திட்டம் பற்றிய இதர விவரங்களை அறிய உங்கள் ஓ. கே. வியாபாரியிடமிருந்து, படங்களோடு கூடிய 'போல்டரை' (folder) வாங்கிப் பாருங்கள்.





EPEAC-1-TAM

தயாரிப்பாளர்கள்:

தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், மதராஸ்-1

# யாரோ ஒருவருக்கு

“எண்பத்தி நாலு லிட்டர் அரிசி கொண்ட ஒரு மூட்டையையும் இருபத்தி ஆறு கிலோகிராம் கொண்ட காப்பிக் கொட்டைப் பையையும் ஏழரை கிலோமீட்டர் தூரம் கொண்டு வர ஒரு ரிக்ஷாக்காரன் எண்பத்தி ஏழு நயா பைசா கூலி கேட்டால்...” என்று தன் கணக்கு நோட்டைப் பிரித்து வைத்துக் கொண்டு என் திருக் குமாரி என் முகத்தைப் பார்த்த போது நான் துண்டை உதறிக் கொண்டு வேகமாக எழுந்திருந்தேன். “பேரம் பண்ணாமல் அந்த ரிக்ஷாக்காரன் கேட்ட கூலியைக் கொடுத்து விடு! புஸ்தகத்தின் கடைசிப் பக்கம் போடப்பட்டிருக்கும் விடையைப் பற்றிக் கவலைப்படாதே!” என்றேன்.

“என்னப்பா! என் கணக்கு நோட்டைப் பார்த்ததும் இப்படிப் பயந்து எழுந்து போகிறீர்கள்! 'ஆறு மைல் இரண்டு பர்லாங்குக்கு எவ்வளவு கூலி கேட்பான்' என்று கண்டு பிடிக்க வேண்டும்! அவ்வளவுதான்” என்றாள் அலட்சியமாக.

“அத்தனை தூரத்துக்கு ஒரு ரிக்ஷாக்காரனும் வர மாட்டான் என்று எழுதி விட்டுப் போ!.... இந்தாம்மா! எனக்கு இந்த லிட்டர், மீட்டர், கிலோ, நயா பைசா விவரம் புரிய இன்னும் பத்து வருஷங்கள் ஆனாலும் ஆகலாம்! அப்போதும் புரியாமல் இருக்கலாம்! கோர்ட்டுகளில் சில வக்கீல்கள் வாய்தா வாங்குவது போல் இந்தக் கணக்குக்கு மாத்திரம் உங்கள் வாத்தியாரிடம் சில வருஷங்கள் வாயிதா வாங்கப் பார்” என்றேன். மேலும் அந்த இடத்தில் துணிந்து அவள் முன் நிற்க எனக்குப் போதுமான தைரியம் இல்லை. வாசலுக்குப் போய் விட்டேன்.

நாட்டில் இன்னும் நயா பைசாக் குழப்பம் தீர்ந்தபாடில்லை. ஐந்து வருடங்கள் முழுதாக ஓடி விட்டன. சட்டென்று பழைய ஆறரை அணாவுக்கு எத்தனை புதுப் பைசா என்றால் நம்மில் எத்தனை பேர் பள்ளிக்கூட மாணவர்கள் போல் மறைவாக விரலை மடக்கியோ, மனக்கணக்குப் போட்டோ சரியான நம்பரை எட்ட முடியாமல் ஒன்றைக் குறைத்தோ, கூட்டியோ சொல்லுகிறோம்? 'ஆறணாவுக்கு முப்பத்தி ஏழு பைசாவாம், ஏழணாவுக்கு நாற்பத்தி நாலு பைசாவாம்? அந்த ஒரு அணா மாத்திரம் பெரிசோ? அதற்கு மாத்திரம் ஏன் ஏழு பைசா மதிப்பு?' என்று கேட்கும் வெடிகட்டி வாண்டுப் பயலுக்கு நாம் விளக்கம் கொடுப்பதற்குள் விடு விட்டுப் போகிறது! அதற்குள்ளாக மீண்டும் மூன்று குழப்பங்களுக்கு ஆளாகி விட்டிருக்கிறோம். அரிசியை லிட்டரில் அளக்க ஆரம்பித்திருக்கிறார்கள். அவரைக் காயைக் கிராமிலே தூக்குகிறார்கள். டாக்ஸியைக் கிலோமீட்டரில் விரட்டுகிறார்கள்! அட ஈசுவரா! லிட்டர், கிராம், மீட்டர் குழப்பங்கள் மண்டையைக் குடைகின்றன.

சமீபத்தில் கோலி சோடா பாட்டிலே ஆறு பைசா விலையிலிருந்து ஏழு பைசா விலை உயர்த்தினார்களே! அதை மனதார வரவேற்ற வெகு குறைவான நபர்களில் நிச்சயமாக நான் ஒருவன். 'இவன் யார் புதுப் பைத்தியம்? விலைவாசி உயர்வை ஆதரிப்பது?' என்று நீங்கள் முணுமுணுக்கலாம். காரணத்தைக் கேட்டால் நீங்கள் என் கட்சியில் சேர்ந்து விடுவீர்கள்.



முன்பு ஒரு சோடா பாட்டில் வாங்கிக் குடித்து விட்டுக் கடைக்காரனிடம் நாலணா நாணயத்தை நீட்டினால் கடைக்காரன் கச்சிதமாக ஒரு பத்து நயா பைசா, ஓர் இரண்டு நயா பைசா ஒரு அணா நாணயங்களைப் பாக்கியாகக் கொடுப்பான்.

“என்னப்பா! பதினெட்டுப் பைசா கொடுத்திருக்கிறாய்? இன்னும் ஒரு பைசா எங்கே?” என்றால், “இரண்டும் ஒன்றும் மூன்றணா இருக்கா இல்லையா? சோடா விலை ஓரணா” என்று பழைய கணக்கில் பல்லவி பாடுவான். நாமாக ஆறு பைசா கொடுத்தால் ஆயிற்று. இல்லையேல் அவன் ஒரு பைசா கூடத்தான் எடுத்துக் கொள்வான். அவன் கணக்கை நாம் ஒப்புக் கொண்டுதான் ஆக வேண்டும். அவனுக்கு அனாமத்தாக ஒரு நயாபைசாவை இழந்துதான் ஆக வேண்டும். இப்போதோ?.... நானே மனம் ஒப்பி ஏழு பைசாவைக் கொடுக்கிறேன். ஒரு பைசா அதிகம் கொடுத்தாலும் நான் ஏமாறுகிறவன் என்ற உணர்ச்சி இனி ஏற்படாதல்லவா?

சோடாக் கடைக்காரன் மாத்திரமா? மாம்பழம் ஒன்று இரண்டணா என்று விலை பேசி மூன்று பழங்களை எடுத்துக் கொண்டு எட்டணா நாணயத்தைக் கொடுத்தால் பழக்காரன் பாக்கி பன்னிரண்டு பைசாத்தான் கொடுக்கிறான். அவன் நியாயமாகக் கொடுக்க வேண்டியதோ பதின்மூன்று பைசா! இப்படி வாங்குபவர்கள் ஏமாறும் வியாபாரங்கள் எத்தனை எத்தனையோ?

பல உறவையும் வீசை பந்தத்தையும் துறந்து கிலோகிராம் ஆசிரமத்துக்கான தீட்சை பெறும் காலம் சமீபத்தில் ஆரம்பமாகியிருக்கிறது. அதனால்தான் வாசலில் கறிகாய் வியாபாரம் பண்ணும் வண்டிக்காரன் வீசைக்கு விலை சொல்லி கிலோ கிராமாக நிறுத்துப் போடுகிறான். 'பத்துப் பலம் கத்திரிக்காய் கொஞ்சம் கூட இருக்குமோ?' என்று யாராவது புத்திசாலிப் பெண்மணி தனக்குத் தானே சொல்லிக் கொண்டால் கூட 'இப்போது வரும் கத்திரிக்காய்கள் கனமான சரக்கு' என்று 'டான்' என்ற பதிலைக் கொடுக்க அந்த வியாபாரி தயாராக இருக்கிறான். இந்தப் புது சாஸ்திரத்தில் அரைகுறை ஞானம் பெற்றவர்கள் இருநூறு கிராம் மிளகாய் போடு என்றால் பழைய பலத்தை (நூற்றி எழுபத்தி ஐந்து கிராம்) போட்டு நிறுக்கும் நபர்களும் இருக்கிறார்கள். எப்படியும் நஷ்டம் பணம் கொடுப்பவர்களுக்கு. கிராம் வீசை வாய்பாடு உள்ளத்தில் பதியும் வரை இந்த நஷ்டம்தான்! ஆனால் அந்தப் புதியும் காலம் எப்போதுதான் வருமோ?

ரயில்வே கைடுகளைப் பார்த்தால் நமக்குப் பரிச்சயமான ஊர்கள் எல்லாம் திடீரென்று கொஞ்ச தூரம் தள்ளிப் போய் உட்கார்ந்து விட்டன போல் பிரமை ஏற்படுகிறது. மைல்களைக் கிலோ மீட்டராக மாற்றின மாயம் துணிக் கடைகளில் போய்ப் பழைய நினைவில் இரண்டரை கஜம் என்றால் கடைக்காரர் ஏதோ மீட்டர் கணக்கில் கிழித்துக் கொடுக்கிறார். நம் சட்டைக்கு எத்தனை மீட்டர் துணி வேண்டுமென்று சட்டென்று புரிய மாட்டேனென்கிறது.

சமீபத்திய டாக்ஸி மீட்டர் மாற்றமும் சேர்ந்து கொண்டிருக்கிறது. மற்ற அளவைகளில் இந்த மாற்ற அளவைகளுடன் துட்டும் கூடியிருக்கிறதோ என்னவோ, டாக்ஸி மீட்டர் மாற்றத்துடன் துட்டும் கூடியிருக்கிறதே! முன்பு முப்பத்தி ஏழு பைசா கொடுத்த தூரத்துக்கு இப்போது ஏறத்தாழ நாற்பத்தி எட்டுப் பைசா கொடுத்தாக வேண்டும்!

இருபது படி அரிசி வாங்கி வரப் பையனைக் கடைக்கு அனுப்பினேன். திரும்பி வந்தபோது பில்லில் நாற்பது லிட்டர் என்று கண்டிருந்தது. பையன் விளக்கம் கொடுத்தான். இரண்டு லிட்டர் என்பது ஒரு படியும் அரை ஆழாக்குமாம். ஒரு படி அரிசியைவிட இரண்டு லிட்டர் விலை ஜாஸ்தியாம். அதைச் சரிக்கட்ட என்னவோ, லிட்டரில் அரிசி போட்டு அதன் தலையைத் தட்டி மட்டமாக ஆக்கி அளந்து போடுகிறான்'' என்றான். 'இப்படித் தலை தட்டப்படுகிறதே. ஒருவேளை நம் துட்டும் தட்டப்படுகிறதோ?'

'எப்போதுமே பழமையிலிருந்து புதுமைக்கு மாறுவது கஷ்டம்தான்! மாறி விட்டால் புதுமையே சுவர்க்கம்' என்று எளிதாகக் கூறுபவர்கள் பலர். 'எந்தப் புரட்சியுமே ஆரம்பத்தில் இப்படித்தான் இருக்கும்!' என்று சரித்திரம் பேசுபவர்களும் பலர் உண்டு.

ராம்மோகன்ராய் சதியை ஒழித்துப் பழமையைப் போக்கிப் புதுமை காண நினைத்த லட்சியமோ, அன்னியச் சரக்குகளின் மீதுள்ள மோகத்தைக் குறைக்கக் காந்தியடிகள் செய்த புரட்சியோ இந்த நயா, கிலோ மாறுதல்களில் இருக்கின்றன என்று யாரும் சொல்ல முடியாதே!

இந்த மாறுதல்கள், புதுமைகள், புரட்சிகள், தனி மனிதனைச் சுரண்டலுக்கு ஆளாக்க முயற்சி செய்யும்போது அவனால் எப்படி இந்தப் புதுமையைப் புன்சிரிப்புடன் ஏற்க முடியும்?

தனிமனிதன் புதுமையின் விரோதி இல்லை. அந்தப் புதுமையைப் புரியும்படி இடைவெளிவிட்டுப் புகுத்தினால், அவன் அதை ஏற்றுக் கொள்வான். ஆனால் நூறு பவுண்டு தூக்கக் கூடியவன் தலையிலே நானூறு பவுண்டைத் தூக்கி வைக்க நினைத்தால் அவன் சுருண்டு விழ மாட்டானா? அந்த நிலைதான் இப்போது ஏற்பட்டிருக்கிறது! குழப்பம் தீர இன்னும் எத்தனை காலமாகுமோ, தெரியவில்லை. நூறு நூறு பவுண்டைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தூக்கிப் பழகுபவன் ஐந்நூறு பவுண்டையும் நாளடைவில் அனாயாசமாகத் தூக்கலாம். அந்தச் சக்தி பெற அவகாசம் வேண்டாமோ?

நயா, கிராம், மீட்டர், லிட்டர் வரிசைக் கணத்தைச் சேர்ந்தாற் போல் தாங்க ஆரம்பித்திருக்கும் நம்மில் பலருக்கு ஒரு பழம் தமிழ்ப் பாடல் நினைவுக்கு வந்தாலும் ஆச்சரியமில்லை.

'' ஆவின மழை பொழிய இல்லம் வீழ அகத்தடியாள் மெய்நோவ அடிமை சாக.....'' என்று வருமே அந்தப் பாட்டுதான்!

யாரோ எழுதியது




# ஹ்யூலெட்ஸ் மிக்சர்

## அஜீரணத்தை விரைவில் அகற்றுகிறது




உங்கள் உழைப்பு சிரமமிக்கது. குடும்பப் பொறுப்புகள் ஒரு பக்கம்; குழந்தைகளின் பராமரிப்பு ஒரு பக்கம். உங்கள் அலுவல்கள் மிகவும் சிரமமானதுதான். இவ்வாறிருக்க, அஜீரணத்தினால் அடிக்கடி தொந்தரவேற்பட்டால் மிகவும் கஷ்டமல்லவா? ஆனால் நீங்கள் அவ்வாறு கஷ்டப்படவேண்டியதில்லை. ஹ்யூலெட்ஸ் மிக்சர் வயிற்று உபாதையை விரைவில்போக்கி, நிரந்தரமாக குணமளிக்கிறது; வலியுண்டாகும் அமிலங்களை அகற்றி, ஜீரணகோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற்கேற்ப பாதுகாப்பளிக்கிறது.

ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்றுக் கோளாறுகளுக்கும்கூட உத்தமமானது. வயிற்றுப் போக்குக்கு அபினி சேர்த்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.

*ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்கு சிறந்தது*

**C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்**

86/A, கனியப்ப நாயக் தெரு, மதறாஸ்-3

JWT/CJH/1930

அவனைப் பார்க்கும்போதெல்லாம் அவருக்கு ஏதோ ஒரு குற்றம் செய்துவிட்ட உணர்ச்சி ஏற்பட்டுக் கொண்டிருந்தது!

அவன் அநேகமாகநாள்தவறாமல் அங்கேயே தான் நின்று கொண்டிருப்பது வழக்கம். அந்த வழியாகத்தான் அடிக்கடி நாள்தோறும் வந்து கொண்டிருக்க வேண்டியிருந்தது.

அவன் ஒரு பிச்சைக்காரன்!

அவர் ஓர் எழுத்தாளர்!

அந்தப் பிச்சைக்காரனைப் பல நாட்களாகவே எழுத்தாளர் கனகலிங்கம் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறார். ஒரு பிச்சைக்காரன் கேவலம் ஒரு தமிழ் எழுத்தாளரின் விசேஷ கவனத்துக்குப் பாத்திரமாகி என்ன பயன்? அந்த அப்பாவி மனிதரின் ஒரு காசும் பெறாத ஏராளமான இரக்கத்தை வேண்டுமானால் சம்பாதித்துக் கொள்ளலாம். எழுத்தாளர் கனகலிங்கம் என்னவோ அப்படிப்பட்ட இரக்கத்தை வாரி வழங்குவதிலே வள்ளலாகத் தான் இருந்தார்.

அந்த இரக்கம் ரூபா — ந.பை. உருவம் தான் பெறவில்லையென்றால் வேறு வாய்ச் சொல் வடிவிலாவது வந்திருக்கப் படாதா? கனகலிங்கம் தம்முடைய அந்த அபரிமிதமான இரக்கத்தைத் தம்முடைய இதயத்துக்குள்ளேயே வைத்துப் பூட்டியிருந்தார்.

கனகலிங்கத்துக்கு மனத்தத்துவம் தெரியும். எழுத்தாளராயிற்றே! அருவமான வறட்டு இரக்கத்தை இரண்டு சொல் மூலம் உதிர்ப்பதனால் சில சமயம் நேர் எதிரிடையான பலன் கூட விளையக் கூடுமல்லவா? அவனுடைய இல்லாமையையும், கையேந்த நேர்ந்துவிட்ட இழிநிலையையும் பரிகசிப்பதாகவோ அல்லது அவமானப்படுத்துவதாகவோ கூட அது அமையலாம்!

"சரிதான் பேசாமல் போவீங்களா! என்னவோ பெரிசா ஆறுதல் சொல்ல வந்துட்டாரு! இவரு ஆறுதல் சொல்லாமத்தான் குறைஞ்சு போயிட்டுதாக்கும்!" என்று அவன் பதிலுக்கு அவருடைய புனிதமான இரக்க உணர்ச்சியையே உதாசீனமாகத் தூக்கி எறிந்தும் பேசி விடலாம்!

கட்புலனையும் செவிப்புலனையும் எப்பொழுதும் கூர்மையாகத் தீட்டி வைத்துக் கொண்டே, தன்னைச் சுற்றி ஓய்வின்றி இயங்கும் மனித வாழ்க்கையின் எந்தச் சிறு அம்சமாவது தனது கற்பனைக்குக் கருப்பொருளாக அமையாதா என்று தவமிருக்கும் கனகலிங்கத்துக்கு ஒரு நாள் திடீரென்று அந்தப் பிச்சைக்காரனையே ஏன் தன் கதைக்குப் பொருளாக வைத்துக் கொள்ளக் கூடாது என்ற எண்ணம் உதித்தது.

நாளும், ஒரு நாளில் பலகாலும் பார்த்த உருவம் தான் பிச்சைக்காரன் என்றாலும் இதுவரை அவனைக் கதைக் கருவாக்கி அதைச் சூழத் தமது கற்பனையைப் பின்ன வேண்டும் என்று தமக்குத் தோன்றாததை நினைத்து அவர் சற்று ஆச்சரியப்பட்டார்.

அன்று கூட அவர் எழுதுவதற்குக் காகிதத்தை எடுத்து, பேனாவையும் தயாராகத் திறந்து வைத்துக் கொண்டு வெகு நேரம் ஒரு வரியும் எழுத முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார்! கனகலிங்கத்துக்கு — ஏன் எல்லா எழுத்தாளருக்குமே — இந்தத் தவிப்பு ஒன்றும் புதிது அன்று!

சில சமயம் விசேஷ முயற்சியின்றியே மளமளவென்று எழுதிக் குவிக்க முடிகிறது போலவே வேறு சில சமயங்களில் மணிக்கணக்காக ஒரு வரி கூட எழுத முடியாமல், திறந்த பேனா உலருவதுதான் மிச்சமாகி, ஏமாற்றத் தோடு எழுந்திருந்திருக்கிறார் கனகலிங்கம். அன்றும் அப்படித்தான் கற்பனைத் தேவி வயப் படாமல் நெடுநேரம் ஊடல் செய்து கொண்டிருந்தாள். "சரிதான் இன்று ஒன்றும் எழுத முடியாது போலிருக்கிறது" என்று நினைத்துப் பேனாவை மூடப் போன சமயம்தான் திடீரென்று அந்தப் பிச்சைக்காரன் அவர் மனக் கண் முன்னாலே வந்து 'என்னைப் பற்றிக் கொஞ்சம் எழுதுங்களேன்' என்று கேட்டான்.

அவ்வளவுதான்; பேனா மூடியைக் கழற்றினார். முழுதும் திருகப் படாமல் மேலாக இருந்த அந்தப் பேனா மூடியைக் கழற்றிய அதே வேகத்தில் கடகடவென்று வரிகளையும் எழுதித் தள்ளினார்!

அவருடைய உள்ளக் கிழியில் ஏற்கனவே ஓவியமாகி யிருந்த அந்தப் பிச்சைக்காரன் மடமடவென்று வரி வடிவம் பெற்றுக் கொண்டு வந்தான்!






அந்தப் பிச்சைக்காரன் தொண்டு கிழவன் தான். ஆனால் கனகலிங்கத்தின் வருணனையில் என்னவோ அவனுக்கு இன்னும் பத்து வயது அதிகமாகி விட்டது போல் அவனது முதுமையின் கொடுமை இன்னும் பயங்கரமாகத் தெரிந்தது.

ஒரே மூச்சில் கதையை எழுதி முடித்து விட்டார் கனகலிங்கம். கதையைப் பத்திரிகைக்கு அனுப்பி விட்டு அதன் பிறகு அந்தப் பிச்சைக்காரனைப் பார்க்க நேரும்போதெல்லாம் கனகலிங்கத்துக்கு எப்படியோ இருந்தது. அவனுக்குச் சொந்தமான ஏதோ ஒன்றைத் தாம் தட்டிப் பறித்துக்கொண்டு விட்டது போன்ற உணர்ச்சியில் சிக்கித் தவித்தார்.

பதினைந்து நாட்களுக் கெல்லாம் அந்தக் கதை பிரசுரமாகி அதற்குச் சன்மானமாக ஐம்பது ரூபாய் வந்த பிறகு அவரது தவிப்பு உணர்ச்சி இன்னும் அதிகமாயிற்று. சன்மானத்திலே நியாயமாக அந்தப் பிச்சைக்காரனுக்கும் பங்கிருப்பதாக அவர் நினைத்தார்.

ஆனால் அந்தப் பிச்சைக்காரனை விட இன்னும் சிறிது தாம் கூடுதலான கௌரவ நிலையிலிருந்த கனகலிங்கம் அதை நினைப்பதோடு தான் திருப்தியடைய வேண்டியிருந்தது. எங்கே என்று வாயைத் திறந்து காத்துக் கொண்டிருந்த 'குடும்பச் செலவு' ஒரு நொடியில் அதை விழுங்கித் தனது அகரப் பசியில் சிறு பங்கைத் தீர்த்துக் கொண்டது!

இதற்கிடையில் கனகலிங்கத்துக்கு இன்னொரு கதைக்குக் கற்பனை உதயமாகியது. அதுவும் 'பிச்சைக்காரக் கற்பனை' தான்! — அதாவது பிச்சைக்காரன் தான் அக்கதைக்கும் கருப்பொருள்!

ஏது பிச்சைக்காரனைச் சுற்றியே அட்சயபாத்திரம் மாதிரி கற்பனை சுரந்து கொண்டிருக்கிறது என்று கனகலிங்கத்துக்கே சற்று ஆச்சரியம்தான். ஆனால் இந்தக் கதை, அவரைப் பொறுத்த வரையில் அவ்வளவு சிறப்பாக அமையாததால், பிரசுரமாவது சந்தேகம் என்று தான் அவர் நினைத்துக் கொண்டிருந்தார்.

**வியார்ஜு**

ஆனால் இந்தப் பத்திரிகாசிரியர்களுக்கு— எந்தக் கதை பிடிக்கும், எந்தக் கதை பிடிக்காது என்று திட்டமாகச் சொல்வதுதான்



ஹோட்டலில் சாப்பிடுபவர்: ஏனப்பா, சர்வர், இந்த மைசூர்ப்பாகு செய்து ரொம்ப நாளாகிறதோ!

சர்வர்: ஞான் அறியில்லை, ஞான் இவ்விட வந்நு ஆறு மாதம்தான் ஆயி.

இந்த உலகத்திலேயே மிக வும் கடினமான காரியம் ஆயிற்றே! அந்தக் கதை யும் பிரசுரத்துக்கு ஏற்றுக் கொண்டிருப்பதாகக் கனக லிங்கத்துக்குத் தகவல் வந்த போது அவர் ஆச் சரியம்தான் அடைந்தார்.

இப்பொழுது பிச்சைக் காரனுக்குத் தாம் இழைத்து விட்டதாக நினைத்துக் கொண்டிருந்த துரோக நினைவு விசுவ ரூபமே பெற்று அவரது மனத்தை வாட்டி யெடுத் தது.

இம்முறை வரும் சன் மானத்திலிருந்து முப்பது ரூபாய் எடுத்து அந்தப் பிச்சைக்காரனுக்குக் கொடுத்து விடுவது என்று அவர் தீர்மானித்தார். ஏனென்றால் அந்தப் பணமே அவருக்குப் புதையல் போல் வந்த தாகத்தான் நினைத்துக் கொண்டிருந்தார். அந்த முடிவைச் செய்த பிறகுதான் அவ ருக்கு நிம்மதியாகத் தூக்கம் வந்தது.

கதை பிரசுரமாகி, சன்மானமும் வந்த பிறகு முப்பது ரூபாயை எடுத்துக் கொண்டு அந்தப் பிச்சைக்காரனைத் தேடிப் போனார்.

அவனுக்கு விஷயத்தைச் சொல்லி விளங்க வைப்பது அவருக்குப் பிரம்மப் பிரயத்தன மாகி விட்டது! முதலில் அந்தப் பிச்சைக் காரன் அவரை ஏதோ அதிசய வஸ்துவைப் பார்ப்பது போலத்தான் பார்த்தான். ஆனால் கனகலிங்கம் பிடிவாதமாக அதை வற்புறுத் திய தோரணையைக் கண்டு அவன் அசந்தே போய் விட்டான்.

"என்னங்க அப்படியே இருந்தாலும் எனக்கு எதுக்குங்க முப்பது ரூபாய்? ஏதோ ஒன்றோ ரெண்டோ குடுங்க உங்க இருப் இக்கு, அது போதும்!" என்று மறுத்துப் பார்த்தான்.

ஆனால் கனகலிங்கம் பிடிவாதமாக வற் புறுத்தி முப்பது ரூபாயையும் அவன் வாங்கிக் கொள்ளுமாறு செய்தார்.

கனகலிங்கம் போன பிறகும் நெடுநேரம் அந்தப் பிச்சைக்காரனுக்கு நடந்தது கனவா, நினைவா என்று தெரியவில்லை!

அந்த மனிதர் யார், எங்கு இருக்கிறார், தன்னைப் பற்றி ஏதோ எழுதினேன் என்றாரே, என்ன எழுதினார், எதில் எழுதினார் என்பது எதுவுமே தெரியாமல் அந்த மூன்று பத்து ரூபாய்களையே அவன் திரும்பத் திரும்பப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அதற்குள் அங்கே வரும் வேறு பிச்சைக் காரர்கள் ஒன்றிரண்டு பேர் வரவே அவசரம் அவசரமாக அந்த ரூபாய் நோட்டுக்களை அவன் மடியில் திணித்துக் கொண்டான். அப்படியும் வந்தவர்கள் அவன் ரூபாய் நோட்டுக்களை மடியில் முடிந்து வைத்துக் கொண்டதைப் பார்த்து விட்டுத் தங்களுக்குள் ஜாடை செய்து கொண்டார்கள்.

பத்து நிமிடங்கள் ஆகி யிருக்கும். அவர்கள் நின்று கொண்டிருந்த கடைக்குத் திரும்பி வந்த இரண்டு பேர் பரபரப்பாக எதையோ தேடிக் கொண்டிருந் தார்கள்.

அவர்கள் தேடுவதைப் பார்த்த வேறு சிலர் என்ன என்று விசாரித்தார்கள். வந்தவர்கள் சொன்ன பதிலைக் கேட்டதும் அந்தப் பிச்சைக்காரன் அதிர்ந்து போய் விட்டான். அவனை அறியாமல் அவன் கண்கள் புதிதாக வந்த பிச்சைக்கா ரர்கள் பக்கம் சென்றன. அவன் நினைத்த மாதிரியே அவர்கள் அவனைத்தான் சந்தேகத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள்

தேடியவர்கள் முப்பது ரூபாயைத் தொலைத்து விட்டார்களாம்! மூன்று பத்து ரூபாய் நோட்டுக்கள்! சட்டைப் பையில் அப்படியே சாதாரணமாக வைத்திருந்தவை. கைக் குட்டை எடுக்கும்போது எங்கேயோ விழுந்து விட்டனவாம். அவற்றைத்தான் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

அந்தப் பிச்சைக்காரன் எதிர்பார்த்தபடியே மற்றப் பிச்சைக்காரர்களில் ஒருவன் அவனைச் சுட்டிக்காட்டி ஏதோ சொன்னான்.

தேடியவர்களும், மற்றவர்களும் அவனை விசாரிக்க ஆரம்பித்தார்கள். அவன் ஏதோ சொல்ல வாயெடுத்தான். அதற்குள் அவ னுடைய மடியைப் பார்க்கும்படி ஒரு பிச்சைக்காரன் சொன்னான். யாரோ முரட்டுத் தனமாக அவனது வேட்டியைப் பிடித்து இழுத்தார்கள். மூன்று பத்து ரூபாய் நோட்டுக்கள் காற்றில் பறந்து கீழே விழுந்தன.

"அடப் பாவி!" யாரோ கத்தினார்கள்.

"ஏண்டா, ரூபாயையும் எடுத்து வைத்துக் கொண்டு எல்லாரும் தேடுகிறதை யெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மாவா இருக்கே?" என்று இன்னொருவர் சொல்லிக் கொண்டே அவனை இரண்டு அடி அடித்தார். அதற்குள் இன்னும் சிலரும் 'போத் போத்' என்று அவனைப் புடைக்க ஆரம்பித்தார்கள்.

"பாவம் கிழவன்! அடிக்காதீங்க. போனால் போகட்டும்" என்று யாரோ சொன்னார்கள்.

"பாரேன். இத்தனை அடியையும் வாங்கிக் கொண்டு வாயைத் திறக்கிறானா?" என்றார்.

"எப்படி ஐயா வாயைத் திறக்க முடியும்? அதுதான் கையும் களவுமாக அகப்பட்டுக் கொண்டு விட்டானே" என்றார் இன்னொருவர்.

அவன் வாயைத் திறக்கவில்லை தான்! அவன் சொன்னாலும் அதை நம்புவதற்கு அவர் களுக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது! அவர்களை அவன் பைத்தியமாக்க விரும்பாதது இருக்கட்டும். முதலில் அவர்கள் முன்னிலை யில் அவனுக்கு அந்த ரூபாயைக் கொடுத்த புண்ணியவானைப் பைத்தியமாக்க விரும்ப வில்லை அவன்!

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited. at the Kalki Press, Kilpauk, Madras-10. Managing Editor, T. Sadasivam.



# உன்னுடைய அழகு
# வாரிவிட்ட கூந்தலிலே
# ஸ்வஸ்திக் பெர்ப்யூம்டு
# காஸ்டர் ஆயில்

உங்கள் கூந்தலைப் பொலிவுடன் இருக்கச் செய்கிறது.





ஸ்வஸ்திக் முடியலங்காரம் "ஸந்தியா"

1 மேல் முடியின் ஒரு சிறிய பாகத்தை வளையமாகச் சுற்றி பின்செய்யவும்.

2. மீதியுள்ள கூந்தலை நன்ருக வாரி, இடதுபக்கத்தில் சுற்றவும். நுனிப்பாகத்தை மேல் வாரி, முதலில் சுற்றிய கூந்தலின் கீழே மடித்து பின் செய்யவும்.

**ஸ்வஸ்திக்**

ஆயில் மில்ஸ் லிமிடெட் பம்பாய்

SHILPI SOM 35 A TAM

